# பிரமிடுகள் தேசத்தில் ஞானத் தேடல்

விற்பனையில் சாதனை

2 ஆம் பதிப்பு

பண்டைய எகிப்தின் மெய்ஞான உண்மைகளையும், பரம ரகசியங்களையும் இந்த நூல் எளிமையாகவும் சுருக்கமாகவும் சுவைபடவும் விளக்குகிறது.

மேலும் குறிப்புகள் பின் அட்டையில்...

BLACKHOLE



என்.கணேசன்

பிரமிடுகள் தேசத்தில் ஞானத் தேடல்
piramidugal dhesathil gnana thedal
ISBN 978-93-81098-12-7

Author: N.Ganeshan©

First Edition: Oct 2012
Second Edition: Oct 2013

136 Pages, Price Rs. 100/-

Published by:
Blackhole Media Publication Limited,
No.7/1, 3-rd Avenue, Ashok Nagar,
Chennai-600 083. India.

Cell : 9600123146

Landline: 044 43054779,

Email: blackholemedia@gmail.com,
admin@blackholemedia.in

Web: www.blackholemedia.in

Printed at: Chennai Micro Print (P) Ltd. Chennai.

பழங்காலத்திய
மகா புருஷர்களை
நேரில் தரிசித்து,
அவர்களுடன்
உரையாட வேண்டுமா?
நூலகத்துக்குப்
செல்லுங்கள்...
– மாசேதுங்



**Publisher:**
***F.M.Bilal***
**Editor:**
***S.Y. Narayanan***



தொடர்பு கொள்க:
பதிப்பாளர்,
பிளாக்ஹோல் மீடியா
பப்ளிகேஷன் லிமிடெட்,
எண்.7/1, 3-வது அவென்யு,
அசோக் நகர்,
சென்னை-600 083
செல்பேசி:
**9600123146**
மின்னஞ்சல்:
blackholemedia@gmail.com
admin@blackholemedia.in
இணையதளம்:
**www.blackholemedia.in**

## உள்ளே...

# பிரமிடுகள் தேசத்தில் நுழையும் முன்...

"தேடிச் சோறு நிதம் தின்று-பல
சின்னஞ்சிறு கதைகள் பேசி-மனம்
வாடி துன்பம் மிக உழன்று-பிறர்
வாடப் பல செயல்கள் செய்து-நரை
கூடிக் கிழப்பருவம் எய்தி-கொடும்
கூற்றுக்கு இரையென மாயும்-பல
வேடிக்கை மனிதரைப் போலே"

வாழ்ந்து மடிவதில் சில மனிதர்களுக்குச் சம்மதம் இருப்ப தில்லை. வாழ்க்கையை ஆழமாக வாழவும், வாழ்வின் உண்மை யான பொருளை அறியவும் முற்படும் இவர்களது தேடல் மற்றவர்களின் தேடல் போல இருப்பதில்லை. பொன்னையும், பொருளையும், புகழையும் பெரும்பாலான மனிதர்கள் தேடி அலையும்போது, இவர்கள் ஞானத்தையும், பிரபஞ்ச ரகசியத் தையும் தேடி அலைகிறார்கள். தேடிக் கிடைத்த ஞானத்தை மற்றவர்களுக்குப் பயன்படும்படி தந்து விட்டும் போகிறார் கள். அப்படிப்பட்டவர்களில் ஒருவர் தான் பால் ப்ரண்டன்.

பால் ப்ரண்டன் (Paul Brunton) *(21-10-1898 - 27-07-1981)* இங்கிலாந்தைச் சேர்ந்த தத்துவ ஞானி. ஹெர்மன் ஹிர்ச் (Hermann Hirsch) என்ற இயற்பெயர் கொண்ட அவர் ஜெர்மானிய யூத இனத்தைச் சேர்ந்தவர். துவக்கத்தில் பத்திரிகைத் துறையில் இருந்த அவர் உண்மையான ஞான வேட்கையின் காரணமாக ஆன்மீக மார்க்கத்தில் நுழைந்தார். அப்போது பெயரைப் பால் ப்ரண்டன் என்று மாற்றிக் கொண்டார். மேலை நாட்டவராகப் பிறப்பிலும் வளர்ப்பிலும் அவர் இருந்தாலும், அவரைக் கீழை நாடுகளின் தத்துவங்களே மிகவும் ஈர்த்தன. பொருளாதாரம், விஞ்ஞானம் ஆகியவற்றில் மேலை நாடுகள் முன்னிடம் வகுத்த போதும் தத்துவ ஞானத்தில் கீழை நாடுகளே மிகச்சிறந்து விளங்கியதை உணர்ந்த அவர், ஞானத்தைத் தேடி இந்தியா, எகிப்து ஆகிய நாடுகளுக்குப் பயணம் செய்தார். அதன் விளைவாக ரகசிய இந்தியாவில் ஒரு தேடல் (A search in secret India) மற்றும், ரகசிய எகிப்தில் ஒரு தேடல் (A search in secret Egypt) என்ற இரண்டு மகத்தான நூல்களை இந்த உலகத்திற்குத் தந்தார். இந்த இரு நூல்களும் இன்றளவும் மிகச் சிறந்த ஆன்மீக ஞான நூல்களாகக் கருதப்படுகின்றன. 1934 மற்றும் 1936 ஆண்டுகளில் வெளி வந்த இந்த இரண்டு நூல்களிலும் அந்தந்த நாடுகளில் அவருக்குக் கிடைத்த அனுபவங்களையும், கண்டவற்றையும், கேட்டவற்றையும், உணர்ந்தவற்றையும் மிகச் சுவாரசியமாக எழுதி உள்ளார்.

பால் ப்ரண்டனின் ஆன்மீக நாட்டமும், ஞானமும் மேற்போக்கானதாக இருக்கவில்லை. அதனால் எதையும் அவர் அறிவு பூர்வமாகவே அணுகினார். சொல்பவர் பெரிய மனிதரோ, சிறிய மனிதரோ, சொல்லும் விஷயம் பிரம்மாண்டமானதோ, மிக எளிமையானதோ வெளித்தோற்றங்களில் கவரப்பட்டு விடாமல் உண்மைத் தன்மையை விருப்பு வெறுப்பு இல்லாமல் அவரால் காண முடிந்தது தான் அவரது உண்மையான சிறப்பு. உள்ளதை உள்ளபடியே எழுதினார். சாதாரண அறிவிற்கு எட் டாத அனைத்தும் உன்னதமானவை என்று பெரும்பாலான மனிதர்கள் போடும் தப்புக் கணக்கை அவர் போடவில்லை. புரியாததாலேயே ஒன்றை மேலானது என்றோ, குப்பை என்றோ கணிக்கும் பாமரத்தனம் அவரிடம் இருக்கவில்லை. எதையும் தன் அறிவாலும், உள்ளுணர்வாலும் எடை போட்ட பின்னரே ஒரு தீர்மானத்திற்கு வந்தார். சில புரியாத சுவாரசியமான விஷயங்களை அப்படியே எழுதி நம் தீர்மானத்திற்கே பால் ப்ரண்டன் விட்டு விடுகிறார்.

ஒரு சாதாரண ஆராய்ச்சியாளராக இந்தத் தேசங்களில் சில இடங்களைப் பார்த்து, சில மனிதர்களைச் சந்தித்து அவற்றைப் பதிவு செய்பவராக பால் ப்ரண்டன் இருக்கவில்லை. இந்தத் தேசங்களின் ஆன்மாவையே அவர் காண விரும்பினார். பெரும்பாலான வெளிநாட்டுப் பயணிகள் சுற்றுலா செல்லும் இடங்களுக்குப் போய் பார்த்து, அது தான் அந்தத் தேசம் என்று கணக்கிடவில்லை. வெளிநாட்டினர் யாரும் போகாத

இடமாக இருந்தாலும் ஆன்மீக ரீதியாக அந்த இடத்தில் ஒரு நல்ல அனுபவமோ, ஞானமோ கிடைக்கும் என்று தோன்றினால் எல்லா அசௌகரியங்களையும் மீறி அங்கு சென்று, தங்கி, ஆராய்ந்து அறிய வேண்டியதை அறிந்து கொண்டார்.

எகிப்தை எடுத்துக் கொண்டால் சுற்றுலாப் பயணிகளின் ஆர்வம் பிரமிடுகள், நைல் நதி, சூயஸ் கால்வாய், கெய்ரோ, அலெக்சாண்டிரியா நகரங்களுடன் முடிந்து விடுகிறது. ஆனால் ஆன்மீகத் தேடலோடு சென்ற பால் ப்ரண்டன் எகிப்திய பழைமை வாய்ந்த, சிதிலமடைந்த கோயில்களைத் தேடிச் சென்றார். அந்த இடிபாடுகளுக்கிடையே அந்தக் கோயில்களின் மூலை முடுக்கெல்லாம் ஆராய்ந்து, அங்குத் தங்கி தியானம் செய்து பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பிருந்தே இருந்த ஆன்மீக அலைகளை அனுபவித்து உணர முற்பட்டார். பிரமிடுகளைக் கூட சாதாரணமாய்ப் பார்த்து விட்டு வராமல் அங்கு ஒரு நாளிரவு முழுவதும் தங்கிப் புதிய அனுபவங்களைப் பெற்றார். சென்ற இடங்களிலும், சந்தித்த மனிதர்களிடத்திலும் ஏதாவது ஒன்றைக் கற்க முற்பட்டார். இது அவரது தனித்தன்மையாக இருந்திருக்கிறது.

'ரகசிய எகிப்தில் ஒரு தேடலி'ல் பால் ப்ரண்டன் சுமார் 80 ஆண்டுகளுக்கு முன் சந்தித்த சுவாரசியமான மனிதர்களையும், அனுபவங்களையும், உணர்ந்த மெய்ஞ்ஞான உண்மைகளையும், பண்டைய எகிப்தின் பரம ரகசியங்களையும் இந்த நூலில் எளிமையாகவும், சுருக்கமாகவும் விளக்க முற்பட்டுள்ளேன். இது மொழி பெயர்ப்பு நூல் அல்ல. சம்பவங்களும், அனுபவங்களும் பால் ப்ரண்டனுடையதே என்றாலும் அவற்றில் சுவாரசியமானவற்றையும், தேவையானவற்றையும் மட்டும் எடுத்துக் கொண்டு மீதியை விட்டிருக்கிறேன். அதே போல சம்பந்தப்பட்ட விஷயங்களில் அவர் விளக்காமல் விட்ட சிலவற்றைத் தேவை கருதி நான் விளக்கியும் விவரித்தும் இருக்கிறேன்.

அன்புடன்,
என்.கணேசன்





# நள்ளிரவில் பிரமிடுக்குள்...



எகிப்தும் இந்தியாவைப் போன்றே இன்னொரு சித்தர்கள் தேசம் என்றால் அது மிகையாகாது. இந்தியாவைப் போன்றே மிகப்பழைமையான நாகரிகம் வாய்ந்த எகிப்து ஆன்மீகத் தேடல்களிலும் பண்டைக் காலம் முதலே சிறந்து விளங்கியது. இன்றும் எகிப்தின் ஸ்பிங்க்ஸ்சும், பிரமிடுகளும் எத்தனையோ ஆன்மீக ரகசியங்களைத் தங்களுக்குள் மறைத்து வைத்திருக்கின்றன என்பது பலருடைய ஆழ்ந்த நம்பிக்கை. அதுவே பால் ப்ரண்டனை அங்கும் ஈர்த்தது.

உண்மையான யோகியையும், ஞானத்தையும் தேடி இந்தியா வந்த பால் ப்ரண்டன் இன்னொரு தேடலை எகிப்தில் தொடர்ந்தார்.

எகிப்தில் பிரமிடுகளைக் காக்கும் காவல் தெய்வமாகக் கருதப்படும் ஸ்பிங்க்ஸ் மனிதத் தலையையும், சிங்கத்தின் உடலையும் கொண்ட பிரம்மாண்டமான அமைப்பு. சுமார் 241 அடி நீளம், 63 அடி அகலம், 66 அடி உயரம் உடைய ஸ்பிங்க்ஸ் எப்போது கட்டப்பட்டது என்பதை இன்றும் யாராலும் சரியாக ஊகிக்க முடியவில்லை. கிறிஸ்து பிறப்பதற்கு முன் சுமார் 2500 ஆண்டுகளிலிருந்து 3000 ஆண்டுகளுக்கு முன் கட்டப்பட்டி ருக்கலாம் என்று வரலாற்றாசிரியர்கள் அனுமானிக்கிறார்கள். மிகப் பழைமை வாய்ந்த அந்த ஸ்பிங்க்ஸ் தேவதை மனிதனின் நுண்ணறிவையும், சிங்கத்தின் தேக பலத்தையும் பெற்றிருப்பதாகக் கருதப்படுகிறது. அது ஏழு முறை பாலைவன மணலால் புதையுண்டது என்றும், ஏழு முறை அந்த மணலை விலக்கி மீட்டிருக்கிறார்கள் என்றும் சொல்லப்படுகிறது.

பால் ப்ரண்டன், ஸ்பிங்க்ஸ் மற்றும் பெரிய பிரமிடு இரண்டிலிருந்தும் ஞானச் செய்திகளைப் பெற வேண்டும் என்று விரும்பினார். எங்குமே உண்மையான தேடலுடனும், உறுதியான மனத்துடனும் சென்றால் அறிய வேண்டியதைக் கண்டிப்பாக அறிந்து கொள்ளலாம் அல்லவா? பால் ப்ரண்டன் முதலில் ஸ்பிங்க்ஸ் முன் ஒருநாளிரவு முழுவதும் தனியாக அமர்ந்து தியானம் செய்யத் தீர்மானித்தார். எல்லா சுற்றுலாப் பயணிகளும் அங்கிருந்து சென்றவுடன் பால் ப்ரண்டன் பாலைவன மணலில் தனியாக அமர்ந்து ஸ்பிங்க்ஸைப் பார்த்தபடி அமர்ந்து கொண்டார். இரவு நெருங்கியது. ஆயிரக்கணக்கான ஆண்டுகள் கால ஓட் டத்தின் அனைத்து மாற்றங்களையும் மௌன சாட்சியாகக் கண்டு கொண்டு நிற்கும் அந்த எகிப்திய காவல் தெய்வத்திடம் ஞானோபதேசம் வேண்டிக் காத்திருந்தார் பால் ப்ரண்டன். மற்ற சுற்றுலாப் பயணிகள் போல பார்த்துப் படம் பிடித்து மாலைக்குள் திரும்பிப் போகும் மனிதரல்ல அவர்.

பண்டைய எகிப்திய அரசர்களைப் போல ஸ்பிங்க்ஸ் அரேபிய அரசர்கள் காலத்தில் பாதுகாக்கப்படவில்லை. 1379 ஆம் ஆண்டு ஒரு மத வெறியன் ஸ்பிங்க்ஸின் மூக்கைக் கஷ்டப்பட்டு உடைத் ததாகச் சொல்லப்படுகிறது. அதே போல பலரும் உளிகளை





எடுத்துக் கொண்டு வந்து தங்கள் பெயர்களையும் செய்திகளையும் ஸ்பிங்க்ஸில் பதித்து விட்டுச் செல்ல ஆரம்பித்தனர். பிற்காலத்தில் தான் அதெல்லாம் தடுத்து நிறுத்தப்பட்டது. அது போன்ற நிகழ்வுகள் எதிலுமே பாதிக்கப்பட்டு விடாமல் ஓர் உண்மையான துறவியின் அமைதியுடன் கிழக்கு நோக்கிப் பார்வையைச் செலுத்தியதாக அமைந்திருந்த ஸ்பிங்க்ஸ் முன்னால் இரவு முழுவதும் அமைதியாக அமர்ந்து கொண்டிருந்த பால் ப்ரண்டன் உடனடியாகச் செய்தி எதுவும் கிடைக்கா விட்டாலும் தனக்குள் ஓர் ஆழ்ந்த அமைதியை உணர ஆரம்பித்தார்.

காலத்திற்கு அப்பாற்பட்ட ஒரு தெய்வீகத் தன்மையையும் அதில் அவரால் உணர முடிந்தது. எல்லா ரகசியங்களையும் முழுமையாக அறிந்து உலகத்தால் பாதிக்கப்படாமல் இருந்த அந்த ஸ்பிங்க்ஸ் அதிகாலை வரை அமைதியைத் தவிர வேறெதையும் அவருக்கு வழங்கவில்லை. அதிகாலைச் சூரியனின் கதிர்கள் அந்தக் காவல் தெய்வத்தில் விழுந்து தங்கமென அது மின்னிய அந்த வேளையில், பால் ப்ரண்டன் எழுந்து நின்று சோம்பல் முறித்து ஒருவித ஏமாற்றத்துடன் பார்த்த போது தான் ஸ்பிங்க்ஸ் தன் மௌனம் கலைத்து முணுமுணுத்ததாக உணர்ந்தார். 'நீ உருவாகி அழியும் சதைகளால் ஆன உருவமல்ல மனிதனே. நீ அழிவில்லாத ஆத்மா! இந்தப் பாலைவன மண்ணில் நான் காத்திருப்பதைப் போல், உன்னுடைய இதயத்தில் அது நீ கண்டடையக் காத்திருக்கிறது. அதனால் உன்னையே நீ அறிவாய்...' சூரியோதயத்துடன் ஓர் உண்மையும் இதயத்தில் உதயமாகத் திருப்தியுடன் அங்கிருந்து கிளம்பிய பால் ப்ரண்டன் அடுத்ததாக உலக அதிசயங்களில் ஒன்றான பெரிய பிரமிடின் உள்ளே ஒரு நாள் இரவைக் கழித்து பிரமிடின் ரகசியங்களை அறிய விரும்பினார்.

இங்கே பிரமிடுகளைப் பற்றிய சில தகவல்களை அறிந்து கொள்வது நல்லது. எகிப்தின் பெரும்பாலான பிரமிடுகள் அரசர்கள், அரசிகள் ஆகியோரின் சமாதிகளின் மீது எழுப்பப் பட்டவை. சுமார் 138 பிரமிடுகள் எகிப்தில் இருக்கின்றன. பிரமிடுகள் இறந்தவர்களைச் சம்பந்தப்படுத்துவனவாக இருப்பதால், சூரியாஸ்தமன திசையாகிய மேற்குத் திசையை இறந்தவர்

களின் திசையாக எகிப்தில் கருதுவதால், ஒரு சிறிய பிரமிடு தவிர மற்றெல்லா பிரமிடுகளுமே நைல் நதியின் மேற்குத் திசையில் தான் கட்டப்பட்டுள்ளன. பெரும்பாலான பிரமிடுகள் சிறியவை. கிஸாவில் இருக்கும் பிரமிடுகள் பெரியவை. அவற்றிலும் பெரிய பிரமிடு என்றழைக்கப்படும் குஃப்பு பிரமிடு மிக மிகப் பெரியது. அதுவே பண்டைய உலக அதிசயங்களுள் ஒன்றாகக் கருதப்படுவது.

பெரிய பிரமிடு ஒவ்வொரு புறமும் 756 அடி நீளமும், 450 அடி உயரமும் கொண்டது. சுமார் இரண்டரை டன் எடையுள்ள 23,00,000 கற்களைப் பயன்படுத்தி கட்டப்பட்ட பிரம்மாண்டமான அமைப்பு அது. சுமார் 4700 ஆண்டுகளுக்கு முன் கட்டப்பட்ட பழைமை வாய்ந்தது. அக்காலத்தில் பிரம்மாண்டமான அமைப்புகளை அளக்கச் சரியான அளவுகோல் இல்லை என்றாலும் எவ்வளவு கச்சிதமாகக் கட்டப்பட்டிருக்கிறது என்றால் ஒரு பக்கத்திற்கும் மறுபக்கத்திற்கும் இடையே உள்ள வித்தியாசம் எட்டு அங்குலங்களுக்கும் குறைவாகவே இருக்கிறது. இது இன்றைக்கும் கட்டட வல்லுநர்களை வியக்க வைக்கிறது.

பிரமிடுகளில் அரசர்கள், அரசிகளின் சவங்களை, ஏராளமான செல்வங்களுடன் புதைத்து வைத்திருந்ததால் பிற்காலத்தில் பலரும் உள்ளே நுழைந்து அந்தச் செல்வங்களைச் சூறையாடிச் செல்ல ஆரம்பித்தனர். எகிப்துக்குப் படையெடுத்தவர்கள், உள் நாட்டவர்கள் எனப் பல்லாண்டுகள் வந்து கொள்ளையடித்துச் சென்ற பின் மிஞ்சியது விலை போகாத சவங்களும், சில பொருள்களும், எடுத்துச் செல்ல முடியாத பிரமிடுகளின் கட்டடங்களும் மட்டுமே. ஆனால் பிரமிடுகளில் இருந்து கொள்ளையடித்துச் செல்ல முடியாத ஆன்மீக ரகசியங்கள் இன்னும் ஏராளமாக அவற்றில் உள்ளன என்பது உலகப் பெரியோரின் கருத்து. எனவே தான் பால் ப்ரண்டன் பெரிய பிரமிடினுள்ளே ஒரு நாள் இரவைக் கழித்து அந்த ரகசியங்களை அறிய விரும்பினார்.

பெரிய பிரமிடு அரசாங்கத்தின் சொத்தாக இருந்ததால், நுழைவுக் கட்டணம் செலுத்திச் சென்று பார்த்து வரும் உரிமை





பார்வையாளர்களுக்கு இருந்தாலும் அங்கு ஓர் இரவு முழுவதும் தங்க வேண்டுமானால் அரசாங்க உத்தரவு வேண்டும் என்று அவருக்குச் சொல்லப்பட்டது. எனவே அரசாங்கத்தின் பழங்காலக் கலைப் பொருள் காப்பகத்தில் சென்று தன் விருப்பத்தை அவர் தெரிவித்தார். அந்த அதிகாரி நிலவுக்குச் செல்ல பால் ப்ரண்டன் ஆசைப்பட்டது போல் அவரைத் திகைப்போடு பார்த்தார். பின் அவரை ஒரு மனநோயாளியைப் பார்ப்பது போல் பார்த்துச் சொன்னார்: 'நான் இது வரை இது போன்ற கோரிக்கையைக் கேட்டதில்லை. ஆனால் இதற்கு அனுமதி வழங்கும் அதிகாரம் என் கையில் இல்லை. உயர் அதிகாரியைப் பாருங்கள்.'

அந்த உயர் அதிகாரி 'அனுமதிக்க முடியாது' என்று உறுதியாகச் சொன்னார். அவருடைய பணிக்காலத்தில் இது போன்ற ஒரு கோரிக்கை வந்ததோ, அனுமதிக்கப்பட்டதோ இல்லை என்றார். பால் ப்ரண்டன் தன் கோரிக்கையில் விடாப்பிடியாக நிற்க அவர், 'இரவு வேளையில் தங்குவது போலீசார் அதிகாரத்தில் தான் வருகிறது. அவர்களைப் போய்ப் பாருங்கள்' என்றார்.

போலீசாரும் இந்த வினோத கோரிக்கையை ஏற்க முடியாமல் தங்கள் தலைமை அதிகாரியிடம் அனுப்ப, அவரும் திகைத்து முடிவெடுக்க ஒரு நாள் தேவை என்றும் மறுநாள் வந்து பார்க்கும் படியும் சொன்னார். மறுநாள் அவர் மறுபடியும் பழங்காலக் கலைப் பொருள் காப்பகத்தையே அணுகச்சொன்னார். கடைசியில் கெய்ரோ நகர ஜென்ரல் கமாண்டண்டிடம் சென்று பால் ப்ரண்டன் தன் கோரிக்கையைச் சொல்ல அவர் பிரமிடுகளைக் காக்கும் போலீஸ் உயர் அதிகாரிக்கு அனுமதி வழங்குமாறு எழுதி அனுப்பினார்.

அந்தப் போலீஸ் அதிகாரி, 'நாங்கள் தினமும் மாலையில் பிரமிடின் நுழைவாயிலைப் பூட்டி வருகிறோம். நீங்கள் உள்ளே செல்ல வேண்டுமென்றால் மறுநாள் காலை வரை உள்ளேயே இருக்க வேண்டி வரும். சுமார் 12 மணி நேரம் உள்ளே இருக்க ஒத்துக் கொள்கிறீர்களா?'

தான் எடுத்துக் கொண்ட முயற்சியில் பின்வாங்கும் எண்ணமில்லாத பால் ப்ரண்டன் உடனே அதற்கு ஒத்துக்

கொண்டார். மறுநாள் மாலை பால் ப்ரண்டன் டார்ச் லைட்டை எடுத்துக் கொண்டு பிரமிடினுள் நுழைந்தார். ஆயுதம் தாங்கிய போலீஸ்காரர் ஒருவர் அவர் உள்ளே சென்றவுடன் நுழைவாயிலை வெளியே பூட்டிக் கொள்ளத் தன்னந்தனியனாய் பால் ப்ரண்டன் தன் பயணத்தைத் தொடங்கினார். அந்தப் பிரமிடுக்குள் பல பாதாளச் சுரங்கங்கள் இருந்தன. சில மிகவும் குறுகலாய் இருந்தன. சில இடங்களில் அவர் தவழ்ந்து போக வேண்டி இருந்தது. உள்ளே சில இடங்களில் வௌவால்களும், எலிகளும் அவருக்குத் துணையாய் இருந்தன. வேறொருவராக இருந்திருந்தால் அந்தச் சூழ்நிலையில் இருந்து தப்பித்து வெளியேற நினைத்திருப்பார். ஆனால் பால் ப்ரண்டன் மனம் தளராமல் அரசனுடைய உடலை வைத்துள்ள பிரபலமான சேம்பரை அடைந்தார்.

அவர் அங்கு சென்றதும் தான் கொண்டு வந்திருந்த தொப்பி, தேநீர் நிறைந்த ஃப்ளாஸ்க், தண்ணீர், நோட்டுப்புத்தகம், பேனா எல்லாவற்றையும் கீழே வைத்து விட்டுச் சம்மணமிட்டு அமர்ந்து தன் டார்ச் லைட்டை அணைத்து விட்டார். உடனே இருள் சூழ்ந்தது. மயான அமைதி அங்கு நிலவியது. நேரம் செல்லச் செல்லக் குளிர் அதிகரிக்க ஆரம்பித்தது. ஆனால் அதைப் பொருட்படுத்தாது அமைதியாகக் காத்திருந்தார். நேரம் செல்லச் செல்ல ஏதோ அமானுஷ்ய சக்திகள் தன்னைச் சுற்றி உலவுவதை அவரால் உணர முடிந்தது. அவர் அந்த இருட்டில் விழிப்புணர்வோடு சூட்சுமமாகக் கவனித்த போது அது கற்பனையல்ல நிஜம் என்பதை அவரால் உணர முடிந்தது. பயத்தில் அவர் உடல் மேலும் சில்லிட்டது.









# உடலைப் பிரிந்து ஒரு பயணம்!

பிரமிடின் உள்ளே தனிமையில் நள்ளிரவின் கும்மிருட்டில் அமர்ந்திருந்த பால் ப்ரண்டன், முன்பே சில நாட்கள் விரதமும் தியானமும் இருந்து தன் புலன்களைக் கூர்மைப்படுத்தி இருந்ததால் அந்த சக்திகள் துஷ்ட சக்திகள் என்பதை மிகத் தெளிவாக உணர முடிந்தது.

இப்போது அவர் தனிமையில் இல்லை, உடன் துஷ்ட சக்திகளும் உள்ளன என்பதை உணர்ந்த போது அவர் பிரமிடுக்குள்ளே போகப் போவதாகச் சொன்ன போது ஓர் இளம் அரபு நண்பன் எச்சரித்தது நினைவுக்கு வந்தது. ‘அங்கு ஒவ்வொரு அங்குலமும் தீய சக்திகளாலும் ஆவிகளாலும் ஆக்கிரமிக்கப்பட்டிருக்கின்றது. அவை ஒன்றல்ல இரண்டல்ல, ஒரு பட்டாளமே இருப்பதால் இந்த விஷப் பரிட்சைக்கு நீங்கள் போகாமல் இருப்பது நல்லது...’

சிறிது நேரத்தில் அவரால் அந்தத் துஷ்ட சக்திகளின் மாய உருவங்கள் கூட அலைகளாய், நிழலாய்த் தென்படத் துவங்கின. ஓரிரு உருவங்கள் அவர் முகத்தின் வெகு அருகில் வந்து அவரை உசுப்புவது போல் தோன்றின. பால் ப்ரண்டன் இரவின் தனிமைக்குப் பெரிதும் பழக்கப்பட்டவர் என்றாலும் இந்த அனுபவம் அவர் இரத்தத்தை உறைய வைத்தது. அந்த சக்திகள் அவரை உட்கார்ந்த இடத்தை விட்டு எழுப்புவதற்கு முயற்சிப்பதாக அவருக்குத் தோன்றியது. ஒரு கட்டத்தில் பக்கத்தில் வைத்திருந்த டார்ச் விளக்கைப் போட்டு அந்த சக்திகளை விரட்டுவது நல்லது

என்று தோன்றினாலும், அப்படிச் செய்தால் பிரமிடுகளின் உள்ளே என்ன தான் இரவில் நிகழ்கின்றது என்பதை அறியும் வாய்ப்பை இழந்து விடுவோம் என்ற எண்ணம் அவரை அவ்வாறு செய்யாமல் தடுத்தது.

ஒரு கட்டத்தில் அந்த சக்திகளின் பலம் உச்சத்திற்குச் சென்றதாய் பால் ப்ரண்டனுக்குத் தோன்றியது. ஆனாலும் ஓர் அசாதாரண மன பலத்துடன் பால் ப்ரண்டன் தாக்குப் பிடித்தார். திடீரென்று அந்த துஷ்ட சக்திகளின் போக்குவரத்து நின்று போயிற்று. அவை எல்லாம் மாயமாக மறைந்து போயின. அங்கு ஒருவித மயான அமைதி நிலவியது. பால் ப்ரண்டனுக்குச் சிறிது நேரம் கழித்தே காரணம் விளங்கியது.

இரு புதிய உருவங்களின் அருகாமையை பால் ப்ரண்டன் உணர்ந்தார். மிகவும் அமைதியான தெய்வீக சக்தி உடையவையாய் அவை இருந்தன. துஷ்ட சக்திகளைப் போன்ற தெளிவில்லாத நிழல்களாகவோ, அலைகளாகவோ இல்லாமல் அந்த இரண்டு உருவங்களும் ஓரளவு தெளிவாகத் தெரிந்தன. பழங்கால எகிப்திய குருமார்கள் போலத் தெரிந்த அவர்களிடத்தில் விவரிக்க முடியாத தூய்மையை அவர் உணர்ந்தார். அவர்களைச் சுற்றி ஒரு ஒளி வெள்ளத்தை பால் ப்ரண்டன் கண்டார்.

வந்தவர்கள் இருவரும் பால் ப்ரண்டன் அருகில் வந்து சிலைகளைப் போல் நின்றனர். இருவரும் தங்கள் கைகளை மார்பிலே கட்டிக் கொண்டு நின்று பால் ப்ரண்டனை ஊடுருவிப் பார்த்தார்கள். அடுத்ததாக முதலில் மிக அருகில் நின்றவரின் உதடுகள் அசைவது தெரிந்தது. ஆனால் வார்த்தைகள் ஒலியாக வெளிவரவில்லை என்று புரிந்தாலும் பேசுவது தெளிவாக பால் ப்ரண்டன் மூளையை எட்டியது.

'ஏனிங்கு வந்தாய்? அபூர்வ சக்திகளைப் பெற வந்தாயா? மானிடர்களின் வழியில் கிடைப்பது போதவில்லையா?' அந்த வார்த்தைகள் எண்ணங்களாகத் தன் மூளையில் பதியவில்லை என்பதையும், அவருடைய குரலாய்த் தான் மூளையில் பதிகிறது என்பதையும் புரிந்த பால் ப்ரண்டனுக்கு அது எப்படி என்பது தான் தெரியவில்லை. பால் ப்ரண்டன் சொன்னார்: 'போதவில்லை'





'திரும்பிப் போய் விடு. இங்கு ரகசியங்களைத் தேடி வந்தவர்கள் பைத்தியம் பிடித்துப் போயிருக்கிறார்கள்.'

'நான் தேடி வந்ததை அறியாமல் போக முடியாது.'

'எங்களை நெருங்கியவர்கள் சொந்த பந்தங்களை இழந்து தனியராகப் போயிருக்கிறார்கள். அது உனக்குச் சம்மதமா?'

'எனக்குத் தெரியவில்லை.' பால் ப்ரண்டன் ஒத்துக் கொண்டார். ஆனாலும் திரும்பிப் போக முனையவில்லை.

அவரது மன உறுதியைக் கண்ட அந்த முதல் உருவம், 'சரி அப்படியே ஆகட்டும். நீ தேர்ந்தெடுத்த செயலிற்கான பலனை நீயே அனுபவித்தாக வேண்டும்' என்று சொல்லி விட்டு அங்கிருந்து உடனடியாக மறைந்தது. அடுத்த உருவம் பால் ப்ரண்டனை நெருங்கியது. இரண்டாவது உருவத்தின் முகம் மிக மிக வயதானதாக இருந்தது. எவ்வளவு வயதிருக்கும் என்பதை பால் ப்ரண்டனால் அனுமானிக்க முடியவில்லை.

இரண்டாவது உருவத்திடம் இருந்தும் வார்த்தைகள் குரலுடன் பால் ப்ரண்டன் மூளையில் பதிந்தன. 'மகனே, இரகசிய சக்திகளின் தலைவர்கள் தங்கள் கைகளில் உன்னை எடுத்துக் கொண்டு விட்டார்கள். நீ ஞான மண்டபத்திற்குத் தற்போது அழைத்து செல்லப்படவிருக்கிறாய். நீ அமர்ந்திருக்கும் இந்தக் கல்லில் காலை நீட்டி மல்லாக்கப் படுத்துக் கொள்...'

பால் ப்ரண்டனுக்கு அதன்படி நடப்பதைத் தவிர வேறு வழி தெரியவில்லை. அப்படியே படுத்துக் கொண்டார். ஆனால் அதன் பின் நடந்ததென்ன என்று பால் ப்ரண்டனுக்குத் தெளிவாகத் தெரியவில்லை. அவருடைய தசைகள் எல்லாம் இறுக ஆரம்பித்தன. அவருடைய உடல் முழுவதும் பக்கவாதம் வந்தது போல் செயல் இழக்க ஆரம்பித்தது. முழு உடலும் பாறையாகக் கனக்க ஆரம்பித்தது. உடலில் இருந்து உணர்வுகள் மங்க ஆரம்பித்தன. மரணம் நெருங்குவது போல் இருந்தது. ஆனால் பால் ப்ரண்டனின்

தத்துவார்த்தமான பக்குவம் அதற்குப் பயப்படவில்லை. ஒருவித இனம் புரியாத சிலிர்ப்பு, தண்டுவடத்தின் கீழிருந்து மேலாகப் பரவிக் கடைசியில் மூளையில் மட்டும் ஏதோ உணர்வு தங்கியது. பால் ப்ரண்டன் நினைவை இழக்க ஆரம்பித்தார். நினைவினை இழக்க ஆரம்பிக்கும் அந்த நேரத்தில் 'நாளை என்னுடைய பிணத்தை இந்தப் பிரமிடினுள் பார்ப்பார்கள். இதுவே என் முடிவு' என்ற எண்ணம் வந்து போயிற்று.

உடலெல்லாம் மரத்துப் போயிருந்தாலும் தலையில் மட்டும் லேசான உணர்வு சிறிது நேரம் தங்கியிருந்தது. ஏதோ சூறாவளியில் சிக்கியதைப் போல் ஓர் உணர்வு மூளையில் தங்கி பின் ஏதோ ஒரு துளை வழியாக வெளியேறுவதை பால் ப்ரண்டன் உணர்ந்தார். பின் உடலிலிருந்து பரிபூரண விடுதலை பெற்றது போல் உணர்ந்தார். உடலின் கனம் இல்லாமல் லேசானதைப் போன்று தோன்றிய அந்த நேரத்தில் உடல் தானல்ல என்பது அவருக்குப் புரிந்தது. இவ்வளவு நாள் தான் அடைபட்டிருந்த சிறையாகவே உடல் தோன்றியது. உடலை விட்டு வெளியே வந்திருந்த போதும் இன்னும் எல்லாவற்றையும் காணக் கூடிய சக்தியும், உணரக் கூடிய சக்தியும் தன்னை விட்டுப் போய் விடவில்லை என்பது புரிந்த போது அவருக்குத் திகைப்பு மேலிட்டது. இன்னும் சொல்லப் போனால் முன்னெப்போதையும் விட உணர்வுகள் கூர்மை பெற்றவை போல் தோன்றியது.

அவரால் அவர் உடலைத் தெளிவாகப் பார்க்க முடிந்தது. கண்கள் லேசாக மூடிய, இரண்டு கைகளையும் மடித்து மார்பில் வைத்திருந்த தன் உடலை அவர் ஆச்சரியத்துடன் பார்த்தார். ஏக காலத்தில் நிற்பதைப் போலவும் மிதப்பதைப் போலவும் அவருக்குத் தோன்றியது.

அந்த உடலிலிருந்து ஏதோ மங்கலான வெளிர் ஒளி கிளம்பி, பார்த்துக் கொண்டிருக்கும் அந்த ஆவி நிலை வந்திருப்பதை அவர் கண்டார். அது என்ன என்பதை பால் ப்ரண்டனால் சொல்ல முடியவில்லை. சுற்றிலும் உள்ள சுவர்களில் கூட மெல்லிய நிலவொளியாய் அது பிரதிபலிக்கக் கண்டார். உடலில்லாமல்





உணர்வுகள் மட்டுமாய் ஒரு மிதவை நிலையில் பால் ப்ரண்டன் இருந்தார். பழங்கால எகிப்தியர்கள், மனிதனின் ஆன்மாவைப் பறவை வடிவத்தில் பல கல்வெட்டுகளில் வரைந்திருப்பதன் பொருள் உயரத்தில் இருக்கும் போது புரிவது போல இருந்தது.

உடலை விட்டுப் பிரிந்திருந்த அந்த நேரத்தில் எடையில்லாத மிகவும் லேசானதொரு நிலையை பால் ப்ரண்டன் உணர்ந்தார். தன் உடலைப் பார்க்கையில் பெரியதொரு உண்மை அவருக்குப் புலப்பட்டது. 'இது தான் மரண நிலை. உடலை விட்டுப் பிரியும் போது உண்மையாக நான் சாவதில்லை. உடலை விட்டுப் பிரிந்தும் நான் இருக்க முடியும் என்ற உண்மை நிரூபணம் ஆகி விட்டதாக, நான் நம்புகிறேன்.' அதே நேரத்தில் 'இந்த உடலையா நான் 'நான்' என எண்ணி இருந்தேன்?' என்ற திகைப்பும் அவருள் எழுந்தது.

புவியீர்ப்பு விசை பாதி அவரைக் கட்டுப்பாட்டுக்குள் வைத்திருக்க, பாதி அந்தரத்தில் மிதப்பது போலிருக்க, அந்த நிலையில் அவருக்கு ஆத்ம ஞானம் கிடைத்தது. 'அர்த்தமில்லாத இந்த சதைக் குவியல் நான் அல்ல, உண்மையில் இந்த உடல் என்னை இத்தனை காலம் சிறை வைத்திருந்தது' என்ற எண்ணம் அவருக்கு பலப்பட்டது. அப்போது உடன் இருந்த அந்த முதிய குரு அவருடைய எண்ணத்தைப் படித்தது போல சொன்னார்: 'உண்மையே. மிகப் பெரிய பாடத்தை நீ கற்றாய் மகனே. ஆத்மா அழிவில்லாதது!'

அந்த நேரத்தில் பால் ப்ரண்டன் சுமார் இருபது ஆண்டுகளுக்கு முன் இறந்து போன, அரைகுறையாய் நினைவிருந்த ஒரு பெண்ணின் முகத்தையும், பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன் மரணமடைந்த அவர் நண்பர் ஒருவர் முகத்தையும், ஒரு விபத்தில் அகால மரணமடைந்த பரிச்சயம் உள்ள ஒரு குழந்தையின் புன்னகை தவழும் முகத்தையும் அண்ட வெளியில் பார்த்தார். அந்த மூன்று முகங்களும் அவரைப் பார்த்தன, பேசின. மிகக் குறுகிய காலமே அவரிடம் பேசிய அந்த முகங்கள் உருகி மறைந்தன.

# பிரமிடுக்குள் ஒரு ரகசிய பாதை!



அந்தக் குரு அவரிடம் சொன்னார்: 'நீ வாழ்வது போல், இந்தப் பிரமிடு வாழ்வது போல் அவர்களும் வாழ்கிறார்கள் மகனே. இங்கு இறைவன் படைத்த அனைத்து உயிர்களின் சரித்திரமும் பதிவாகியுள்ளது. மனித இனத்தின் மறைந்து போன ஆரம்பக் கால வம்சாவழியினரின் செயல்கள் எல்லாம் கூட இங்குப் பதிவாகியுள்ளன. அட்லாண்டிஸ்* நகரம் கற்பனையல்ல. அந்த நகரம் அழிந்ததும், அந்நகர மக்கள் இறைவனை மறந்து வெறுப்பு, தீமைகளின் வழி சென்ற வாழ்க்கை முறையால், சுயநலமும், ஆன்மீகக் குருட்டுத்தனமும் தான் அட்லாண்டிஸைக் கடலுக்குள் மூழ்க வைத்தது. இறைவன் அன்பு மயமானவன். ஆனால் அவன் ஏற்படுத்திய விதிகளின்படியே உலகம் இயங்குகிறது. அந்த விதிகளின்படி செய்த தவறுகளுக்கான தண்டனையிலிருந்து யாரும் தப்பி விட முடியாது. இங்கிருந்து செல்லும் போது இந்தச் செய்தியை மனிதகுலத்திற்கு எடுத்துக் கொண்டு போ் மானிடனே.'





*அட்லாண்டிஸ் நகரம் குறித்து இந்த இடத்தில் நாம் தெரிந்து கொள்வது நல்லது. சகல சுபிட்சங்களுடனும் அட்லாண்டிஸ் என்ற தீவு நகரம் சுமார் 11000 ஆண்டுகளுக்கு முன்னால் இருந்ததாக கிரேக்க ஞானி ப்ளேட்டோ கி.மு.360 -இல் கூறினார். மிக சக்தி வாய்ந்த மனிதர்கள் வசித்த அந்தத் தீவில் எந்த இயற்கை வளத்திற்கும் குறைவிருக்கவில்லை. மனிதர்கள் அனைவரும் மிக அறிவாளிகளாகவும், குணசீலர்களாகவும் இருந்தனர். அவர்கள் வணிகம் ஐரோப்பா, ஆப்பிரிக்கா ஆகிய கண்டங்கள் வரை நீண்டதென்றும் அவர்கள் அந்தக் கண்டங்களைத் தங்கள் கட்டுப்பாட்டில் வைத்திருந்தார்கள் என்றும் கூறப்பட்டன. ஆனால் காலம் செல்லச் செல்ல அவர்கள் தங்கள் பண்புகளிலிருந்தும், அறிவார்ந்த செயல்களிலிருந்தும் விலகிச் செல்ல ஆரம்பித்த பின் அவர்களுடைய சிறப்பு குறைய ஆரம்பித்தது. சுயநலம், பேராசை, பொறாமை என்ற வழிகளில் அவர்களின் தவறுகள் மிக அதிகமாகிய போது அந்தத் தீவு, கடலில் மூழ்கி அழிந்தது என்று சொல்கிறார்கள். பலரும் கற்பனை என்றும் கதை என்றும் நினைத்த அட்லாண்டிஸ் உண்மையில் இருந்தது என்று சொல்லும் ஆராய்ச்சியாளர்களும் இருக்கிறார்கள். அதையே அந்தக் குருவும் இங்கே சொல்கிறார்.

அந்த குரு மேலும் சொன்னார்: 'இங்கே வரும் எல்லா மனிதர்களுக்கும் இந்த இரகசியங்கள் விளக்கப்படுவதில்லை. ஆனால் ஆர்வமும், விளக்கினால் புரிந்து கொள்ளப்படும் பக்குவமும் உனக்கு இருப்பதால் மட்டுமே உனக்கு இந்த இரகசியங்கள் விளக்கப்படுகின்றன.'

பால் ப்ரண்டன் அடுத்த கணம் புவியீர்ப்பு விசை முழுவதும் தனக்கு அற்றுப் போவதை உணர்ந்தார். முழுவதுமாய்க் காற்றில் மிதப்பது போல இருந்தது.

'உன்னை ஒரு ரகசிய ஞானக் கருவூலத்திற்கு அழைத்துப் போகப் போகிறேன்....'

அப்படிச் சொன்னவுடன் பால் ப்ரண்டனின் ஆர்வம் அதிகப்பட்டது. உடனடியாக அந்த இடத்திற்குச் செல்ல

விரும்பினார் அவர். அந்தக் குருவின் ஆவி அதைப் படித்தது போல இருந்தது. 'எல்லாவற்றிற்கும் ஒரு காலம் இருக்கிறது மகனே, அவசரப்படாதே. வா என்னுடன்' என்றார் அந்தக் குரு.

அடுத்த கணம், பால் ப்ரண்டன் ஏதோ கோமாவில் இருப்பவர் போலவும் தன் பெரும்பாலான உணர்வுகள் ஸ்தம்பித்தது போலவும் உணர்ந்தார். அடுத்ததாக அவர் நினைவு திரும்பிய போது அவர் வேறு ஒரு இடத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டிருந்தார்.

பால் ப்ரண்டன் சென்றடைந்த பாதை மங்கலான ஒளி படர்ந்ததாக இருந்தது. சுற்றும் முற்றும் பார்த்த போது விளக்கையோ, சன்னல்களையோ அவர் காணவில்லை. பின் எங்கிருந்து ஒளி வருகிறது என்பதை அவரால் ஊகிக்க முடியவில்லை.

(இந்த இடத்தில் இன்னொரு சம்பவத்தில் இரண்டு அதிகாரிகளின் அனுபவங்களையும் சொல்வது பொருத்தமாக இருக்கும். டாக்டர் அப்பாட் பாச்சா (Dr. Abbate Pacha, Vice&President of the Institute Egyptien) மற்றும் வில்லியம் க்ரோர் (Mr. William Grort, a member of the Institute) இருவரும் பால் ப்ரண்டனைப் போல நள்ளிரவில் பிரமிடுக்குள் போகா விட்டாலும் பிரமிடின் மிக அருகில் இருந்து கவனித்துத் தாங்கள் கண்டதை அறிக்கையாகச் சமர்ப்பித்திருக்கிறார்கள். அவர்கள் ஒரு சிறிய தீப ஒளி சுமார் இரவு எட்டு மணிக்குப் பிரமிடைச் சுற்றி வந்து கிட்டத்தட்ட பிரமிடின் நுனி வரை சென்று மறைந்ததைக் கவனித்து இருக்கிறார்கள். மறுபடியும் இரவு சுமார் பதினோரு மணியளவில் அதே அளவிலான தீப ஒளி நீல நிறத்தில் பிரமிடின் மேல் வரை சென்று மறைந்து விட்டதாகத் தெரிவித்திருக்கிறார்கள்.

பல நூற்றாண்டுகளாக வேறு பலரும் அப்படிக் கண்டிருக்கிறார்கள் என்றும் அதை அரேபியர்கள் பிரமிடின் காவல் சக்திகள் அவை என்று சர்வ சாதாரணமாக எடுத்துக் கொள்கிறார்கள் என்றும் விசாரித்ததில் அறிந்தாலும் அதற்கு அறிவியல் மூலமாக அவர்களால் ஒரு காரணத்தைக் கண்டு பிடிக்க முடியவில்லை.)





தன்னைப் பின் தொடர்ந்து வரும்படி அந்த மதகுருவின் ஆவி அவரிடம் சொன்னது. அத்துடன் நிறுத்திக் கொள்ளாமல் 'பின்னால் மட்டும் திரும்பிப் பார்க்காதே. தலையைத் திருப்பாதே' என்றும் அவருக்குக் கட்டளையிட்டது. பால் ப்ரண்டனுக்கு அது பிரமிடுக்குள் உள்ள ரகசியப் பாதை என்று தோன்றியது. கீழ்நோக்கிச் சென்ற அந்தப் பாதையின் முடிவில் தூரத்தில் ஏதோ கோயில் போன்ற அமைப்புடைய வாயில் இருந்தது.

அவர் பிரமிடுக்குள் எல்லா இடங்களையும் சுற்றிப் பார்த்திருந்தாலும் இந்தப் பாதையையும், தூரத்தில் தெரிந்த அந்தக் கோயில் வாசல் போன்றதோர் அமைப்பையும் அவர் பார்த்ததாக அவருக்கு நினைவில்லை. இந்த ரகசியப்பாதை எங்கிருந்து ஆரம்பிக்கிறது என்றறியும் ஆவல் அவருக்கு அதிகமாயிற்று. அந்த மதகுரு ஆவி சொன்னதைப் பொருட்படுத்தாமல் பின்னால் அவர் திரும்பிப் பார்த்தார். அந்த நீண்ட பாதையின் இறுதியில் நுழைவாயில் எதுவும் இருக்கவில்லை. ஏதோ ஒரு நுழைவிடம் போல் தெரிந்த இடம், சதுரமான கற்களால் மூடப்பட்டிருந்தது.

ஆனால் திரும்பிப் பார்த்ததன் தண்டனையாகவோ என்னவோ பால் ப்ரண்டனை ஏதோ ஒரு பெரும் சக்தி பின்னுக்கு இழுத்தது. அடுத்த கணம் அவர் உடல் கிடந்திருந்த அந்த ஆரம்ப இடத்திற்கே வந்து சேர்ந்தார். பால் ப்ரண்டன் திரும்பிப் பார்க்காதிருந்திருந்தால் அவர் ரகசிய ஞானக் கருவூலத்திற்குச் சென்று காணும் பாக்கியம் கிடைத்திருக்கலாம். ஆனால் திரும்பிப் பார்த்த ஒரு தவறு அவரை அந்த வாய்ப்பை இழக்க வைத்தது.

தனது உடலைப் பார்த்தபடி இருந்த அவரைப் பெருத்த ஏமாற்றம் ஆட்கொண்டது. அந்த மத குருவின் மெல்லிய குரல் அவருக்குத் தெளிவாகக் கேட்டது. 'மகனே ரகசியப் பாதையின் வாசலை நீ காண்பது ஒரு பெரிய விஷயம் அல்ல. உன் மனதில் உள்ள ரகசிய ஞானக் கருவூலத்திற்கு உன்னை அழைத்துச் செல்லக் கூடிய ரகசியப் பாதையை நீ காண்பதே முக்கியம். இந்தப் பிரமிடின் ரகசியம் உன் ஆத்மாவின் ரகசியமே. உன்

ஆத்மாவில் எல்லா ரகசியங்களும் புதைந்துள்ளன. பிரமிடு சொல்வதெல்லாம் மனிதனைத் தனக்குள்ளே கவனத்தைச் செலுத்தச் சொல்வது தான். அவன் இதுவரை அறிந்திராத அவனுக்குள் உள்ள மையப்புள்ளியில் அவன் ஆத்ம ரகசியத்தை அறிவதன் மூலம் அனைத்து ஞானத்தையும் பெறவே மனிதனைப் பிரமிடு வலியுறுத்துகிறது. போய் வருகிறேன்.'

ஏதோ ஒரு சக்தி பால் ப்ரண்டனை அவருடைய உடலுக்குள் பலமாக ஈர்க்க அவர் மறுபடியும் தன் உடலுக்குள் நுழைந்தார். மரத்துப் போயிருந்த உடலைச் சிறிது சிறிதாக உணர ஆரம்பித்தார். இருள் சூழ்ந்திருந்த பிரமிடின் அந்த அறைக்குள் தனியாக அவர் இருப்பதைக் கண்டார். மத குருவின் ஆவியைக் காண முடியவில்லை. இருட்டிலும் தெளிவாகப் பார்க்க முடிந்த நிலையும் போயிற்று.

அதிர்ச்சியில் இருந்து மீண்ட அவர் டார்ச்சைத் தேடி எடுத்துப் போட்டுப் பார்த்த போது எல்லாம் அவர் முன்பு விட்டுப் போயிருந்த நிலையிலேயே இருந்தன. கடிகாரத்தில் நேரத்தைப் பார்த்தார். மணி சரியாகப் பன்னிரண்டு. பொழுது புலரும் வரை தன் அனுபவங்களைக் குறித்து பால் ப்ரண்டன் சிந்தித்தபடி இருந்தார். பொழுது புலர்ந்து போலீஸ்காரர் வந்து அவரை அழைத்துக் கொண்டு போய் வெளியே விட்டார்.







# பழங்கால மந்திரவாதங்கள் உண்மையா?



அக்கால எகிப்திலும் நிஜங்களை விட போலிகள் அதிகமாக இருந்தனர். சக்தி வாய்ந்த சில சித்தர்கள் இருந்தாலும் ஏமாற்று வேலை செய்கிற போலி ஆசாமிகள் நிறைய இருந்தனர். சிலரை எந்த ரகத்தில் எடுத்துக் கொள்வதென்று பால் ப்ரண்டனுக்கு விளங்கவில்லை. ஆனாலும் தன் அனுபவங்களை உள்ளது உள்ளபடி அவர் விவரித்திருக்கிறார்.

பால் ப்ரண்டன் சந்தித்த ஒரு மந்திரவாதி அக்காலத்தில் கெய்ரோ நகரில் பிரபலமாக இருந்தார். அவர் பல அற்புதங்கள் செய்து காட்டுபவர் என்று பலரும் சொல்லவே, பால் ப்ரண்டன் அவரைக் காணச் சென்றார். சுமார் அறுபது வயது மதிக்கத்தக்க அந்த மந்திரவாதி சிறிது நேரம் அவருடன் பேசிக் கொண்டிருந்து விட்டு அவரிடம் அவர் பிறந்த தேதியையும், நேரத்தையும் கேட்டார். பால் ப்ரண்டனுடைய ஜாதகத்தைக் கணித்து அவருடைய எதிர்காலத்தைப் பற்றிக் கூறுவதாக அவர் கூறினார்.

பால் ப்ரண்டன் தன்னுடைய எதிர்காலத்தை அறிய அங்கு வரவில்லை எனவும் அவருடைய சக்தியைப் பற்றிக் கேள்விப்பட்டதால் அதை நேரில் கண்டறிய வந்ததாகவும் கூறினார். ஆனால் அந்த மந்திரவாதி அவரை விடுவதாக இல்லை. பால் ப்ரண்டனுடைய பிறந்த தேதியையும், நேரத்தையும் கட்டாயப்படுத்தி வாங்கிக் கொண்டவர் அவருடைய கையையும் ஒரு காகிதத்தில் வைத்து வெளிப்புறத்தை வரைந்து கொண்டு, வரைந்ததன் உள்புறத்தில் சில அரபு வார்த்தைகளை எழுதி வைத்துக் கொண்டு ஐந்து நாட்கள் கழித்து வரும்படிக் கூறினார்.

ஐந்து நாட்கள் கழித்து பால் ப்ரண்டன் அவர் சொன்னபடி அவரை மீண்டும் சந்தித்தார். பால் ப்ரண்டனுடைய ஜாதகத்தைக் கணித்திருந்த அந்த மந்திரவாதி அதைப் பற்றி அவரிடம் விளக்கி விட்டு பால் ப்ரண்டனின் கைக்குட்டையைக் கேட்டார்.

பால் ப்ரண்டனுக்கு அவர் எதற்குக் கேட்கிறார் என்று விளங்காவிட்டாலும் தன் கைக்குட்டையை அவரிடம் தந்தார். வாங்கிய கையோடு அந்த கைக்குட்டையைத் திரும்பித் தந்த அந்த மந்திரவாதி, அதை இரண்டாகக் கிழிக்கச் சொன்னார். பால் ப்ரண்டன் அவர் சொன்னபடியே தன் கைக்குட்டையை இரண்டாகக் கிழித்தார். ஒரு பகுதி கைக்குட்டையை எடுத்து அதில் ஏதோ எழுதிய அந்த மந்திரவாதி, அதை மடித்து ஒரு செம்புத் தட்டில் வைக்கச் சொன்னார். பால் ப்ரண்டன் அப்படியே வைத்தார்.

அடுத்ததாக ஒரு காகிதத்தை எடுத்த அந்த மந்திரவாதி, அதில் ஒரு முக்கோணத்தை வரைந்து அதனுள் ஏதோ அரபு மொழியில் எழுதினார். பின் அதை பால் ப்ரண்டனிடம் தந்து அதை அந்தக் கைக்குட்டையின் மீது வைக்கச் சொன்னார். பால் ப்ரண்டன் அப்படியே வைத்த பின், ஏதோ மந்திரங்களைக் கண்களை மூடிக்கொண்டு அந்த மந்திரவாதி உச்சரிக்க ஆரம்பித்தார். பின் மந்திரங்களை நிறுத்தி அந்த மந்திரவாதி கண்களைத் திறந்த அந்தக் கணத்தில் அந்தக் கைக்குட்டை தீப்பிடிக்க ஆரம்பித்தது. உடனே அந்த அறையில் புகை சூழ்ந்தது. மூச்சு விடக் கஷ்டமாகி இருவரும் அந்த அறையை விட்டு ஓடினார்கள்.





பால் ப்ரண்டனுக்கு அந்த மனிதர் செய்து காட்டியது மேஜிக்கா, அல்லது அவருடைய உண்மையான சக்தியைத் தானா என்ற சந்தேகம் வந்தது. அவர் அந்த மந்திரவாதியிடம் கேட்டார். ''கைக்குட்டையில் எப்படித் தீப்பிடிக்க வைத்தீர்கள்?''

அந்த மந்திரவாதி சொன்னார்: ''என் வசத்தில் உள்ள பூதத்தின் உதவியுடன்.''

எகிப்தில் இப்படிப் பலரும் சொல்வதைப் பால் ப்ரண்டன் கேட்டிருக்கிறார். அது எவ்வளவு தூரம் உண்மை என்று அவரால் தீர்மானிக்க முடியவில்லை.

அந்த மந்திரவாதி அவரிடம் ஒரு வெள்ளைக் கோழியை மூன்று நாட்கள் கழித்து எடுத்து வரச் சொன்னார். பால் ப்ரண்டனுக்கு உதவும் சக்தியை அவர் ஏற்படுத்தித் தருவதாகச் சொன்னார். ஆப்பிரிக்காவில் சில பழங்குடியினர் இது போல் வெள்ளைக் கோழியின் கழுத்தை அறுத்து ரத்தத்தை ஆட்களின் மேலே தெளிக்கும் பழக்கத்தைக் கேள்விப்பட்டிருந்த பால் ப்ரண்டன் அருவெறுப்புடன் மறுத்தார். அவர் மறுத்ததன் காரணம் கேட்டு அறிந்து கொண்ட மந்திரவாதி, அப்படியெல்லாம் தான் செய்யப்போவதில்லை என்றும் தைரியமாக ஒரு வெள்ளைக் கோழியை எடுத்துக் கொண்டு வரும்படியும் கூறினார்.

பால் ப்ரண்டனும் அந்த மந்திரவாதி சொன்னபடியே மூன்று நாட்கள் கழித்து வெள்ளைக் கோழியை எடுத்துக் கொண்டு சென்றார். தரையில் போடப்பட்டிருந்த ஒரு கம்பளத்தில் அந்தக் கோழியை வைத்து விட்டு, அறையின் மூலையில் புகைந்து கொண்டிருந்த புகையருகே மூன்று முறை பால் ப்ரண்டனைச் சென்று வரச் சொன்னார். பால் ப்ரண்டனும் அப்படியே செய்தார்.

மந்திரவாதி ஒரு காகிதத்தை எடுத்து அதில் ஒரு சதுரத்தை வரைந்தார். அந்தச் சதுரத்தை ஒன்பது சிறு சதுரங்களாகப் பிரித்து ஒவ்வொரு கட்டத்திலும் எதையோ எழுதினார். பின் ஏதோ மந்திரங்களைச் சொல்ல ஆரம்பித்தார். சொல்லிக் கொண்டே வலது கை சுட்டு விரலைக் கட்டளையிடுவது போல் அடிக்கடி நீட்டினார். பயந்து போன கோழி பறந்து சென்று அறையின் மூலையில்

பதுங்கியது. மந்திரவாதியின் மகன் வந்து அந்தக் கோழியை பழைய இடத்திலேயே வைத்து விட்டுச் சென்றான்.

அந்தக் கோழி மீண்டும் பறந்து செல்ல யத்தனிக்கையில் மந்திரவாதி உறுதியான குரலில் கட்டளையிட, அந்தக் கோழி அசையாமல் அப்படியே நின்றது. சிறிது நேரத்தில் கோழி நடுங்க ஆரம்பித்தது. மந்திரவாதி மீண்டும் பால் ப்ரண்டனை அந்தச் சாம்பிராணி புகைக்கு மூன்று முறை சென்று வரச் சொன்னார். பால் ப்ரண்டன் அப்படியே செய்தார். அதன் பின்னர் அந்த மந்திரவாதி மந்திரங்களைச் சொல்லியே அந்தக் கோழியைச் செயலிழக்க வைத்தார். பின் அந்தக் கோழி இறந்து விழுந்தது.

மந்திரவாதி சொன்னார்: 'என்னிடம் உள்ள பூதம் உங்களுக்கு உதவத் தயாராக உள்ளது என்பதற்கு அறிகுறியே இந்தக் கோழியின் மரணம். இந்தக் கோழி சாகவில்லை என்றால் அந்தப் பூதம் உங்களுக்கு உதவத் தயாரில்லை என்று அர்த்தம். நீங்கள் இந்தக் கோழியைக் கைக்குட்டை அல்லது காகிதத்தில் சுற்றி எடுத்துக் கொண்டு போய் நாளை வரை அதைப் பிரிக்காமல் வைத்திருங்கள். பின் இரவு 12 மணியளவில் நைல் நதியில் வீசி விடுங்கள். வீசுவதற்கு முன் ஏதாவது ஒன்றை வேண்டிக் கொள்ளுங்கள். என்னுடைய பூதம் அதை நிறைவேற்றிக் கொடுக்கும்.'

அந்தக் கோழியைத் தொடாமலேயே சாகடித்ததைப் பெரிய அற்புத சக்தியாக பால் ப்ரண்டன் நினைக்கவில்லை. அப்படி ஒரு ஆசையை நிறைவேற்றிக் கொள்வதிலும் அவருக்கு விருப்பம் இல்லை என்றாலும் அந்தக் கோழியை ஒரு காகிதத்தில் சுற்றி எடுத்துக் கொண்டு வீட்டுக்குச் சென்றார்.

பால் ப்ரண்டன் வீட்டில் வேலை செய்த அரபு வேலைக்காரன் அது என்ன என்று கேட்க, அது மந்திரவாதி மந்திரசக்தி பிரயோகித்த கோழியின் சவம் என்று சொன்னவுடன் அவன் அது வைக்கப்பட்டிருந்த இடத்திற்குப் பக்கம் வருவதையே தவிர்த்தான். இது போன்ற மந்திரவாதங்களில் அங்குள்ளோருக்கு இருந்த நம்பிக்கையையும் பயத்தையும் பால் ப்ரண்டன் கவனித்தார்.





மறுநாள் மாலை ஓர் ஓட்டலில் உணவருந்திக் கொண்டிருக்கையில், மந்திரவாதியின் வீட்டில் நடந்ததைப் பற்றி தன்னுடன் இருந்த எகிப்திய நண்பர் மற்றும் அமெரிக்க நண்பர் ஒருவரிடம் விவரிக்க, அவர்கள் இருவரும் அந்த மந்திரவாதியைப் பற்றிக் கிண்டலாகப் பேசிச் சிரித்தனர். அந்த நேரத்தில் ஓட்டலில் அனைத்து மின்விளக்குகளும் அணைந்து போயின. ஓட்டல் உரிமையாளர் என்ன முயற்சி செய்தும் மின் விளக்குகள் எரியாமல் கடைசியில் அவர் மெழுவர்த்திகளைப் பற்ற வைக்க வேண்டியதாகிற்று. உடனே பால் ப்ரண்டனுடன் படித்த எகிப்திய நண்பர், அது வரை கிண்டல் செய்து கொண்டிருந்தவர், பயந்து போனார். 'இது அந்த மந்திரவாதியின் வேலையாகத் தான் இருக்க வேண்டும். இல்லா விட்டால் இருந்திருந்தாற் போல் விளக்குகள் ஏன் அணைய வேண்டும்?'

பால் ப்ரண்டனுக்கு அந்த மின்வெட்டுச்சம்பவம் மந்திரவாதியின் வேலையா, இல்லை தற்செயலாக நடந்ததா என்று தீர்மானிக்க முடியவில்லை. பின் அவர் அந்த மந்திரவாதி சொன்னபடி அந்த மந்திரித்த கோழியை நள்ளிரவில் நைல் நதியில் போட்டு விட்டு வந்தார்.

அவர் வீடு திரும்புகையில் அவரது அரபு வேலைக்காரன் அவர் திரும்பி வருவார் என்று எதிர்பார்க்காதது போல ஆச்சரியப்பட்டான். 'அல்லாவின் கருணையே கருணை' என்று நிம்மதிப் பெருமூச்சு விட்டான். அந்த மக்களுக்கு இது போன்ற மந்திர தந்திரங்களில் இருந்த நம்பிக்கையைப் பார்த்த பால் ப்ரண்டனுக்கு இதெல்லாம் ஆதாரபூர்வமானதா? இல்லை மூடநம்பிக்கையா? என்றறியும் ஆவல் ஏற்பட்டது.



# கண்ணுக்குத் தெரியாத பூதங்கள் உள்ளனவா?



மீண்டும் அந்த மந்திரவாதியை சில முறை சந்தித்து அவரிடம் இதுபற்றித் துருவித் துருவிக் கேள்விகள் கேட்டார். அந்த மந்திரவாதியோ பிடி கொடுத்துப் பதில் சொல்லவில்லை. அந்த மந்திரவாதியின் மகனும் பால் ப்ரண்டனிடம் தனியாகக் குறைபட்டுக் கொண்டான். 'என் தந்தையிடம் நானும் இந்த வித்தையைக் கற்றுத் தரும்படிப் பலமுறை கேட்டுக் கொண்டேன். அவரோ இது கடினமானது மட்டுமல்ல, அபாயகரமானதும் கூட. எழுப்பி விட்ட பூதத்தை அடக்க முடியாமல் போன எத்தனையோ மந்திரவாதிகள் பல பாதிப்புக்கு ஆளாகி உள்ளார்கள். எனவே உனக்கு இதெல்லாம் வேண்டாம் என்று சொல்லி என்னை சட்டப்படிப்பு படிக்க அனுப்பி விட்டார்.'

மகனிடமே அந்த ரகசியங்களைச் சொல்லாத மந்திரவாதி தன்னிடம் சொல்லாததில் வியப்பில்லை என்று பால் ப்ரண்டன் எண்ணினார். ஆனாலும் இது உண்மையா பொய்யா என்ற சந்தேகம் மனதில் எழுந்து கொண்டே இருந்தது. அதைப் புரிந்து கொண்டது போல் ஒரு நாள் அந்த மந்திரவாதி சொன்னார். 'உங்களைப் போன்ற மேலை நாட்டினர் புரியாத விஷயங்களை எல்லாம் இல்லை என்று





ஒரேயடியாகச் சாதிப்பதில் கெட்டிக்காரர்களாக இருக்கிறீர்கள். பழங்கால மந்திரவாதங்கள் உண்மையே. உண்மையில் இது போன்ற கண்ணுக்குத் தெரியாத பூதங்கள் இருக்கத்தான் செய்கின்றன.'

அவராக அந்தப் பேச்சை எடுத்த பின் பால் ப்ரண்டன் அந்த சந்தர்ப்பத்தை விடவில்லை. 'உண்மையில் அவை என்ன?'

மந்திரவாதி சொன்னார். 'மனிதர்கள் போலவும், விலங்குகள் போலவும் அவையும் உலகத்தில் வாழ்கின்றன. ஒரு காலத்தில் அவற்றைக் காணும் சக்தியைப் பெற்றிருந்த மனிதன் காலப் போக்கில் அந்த சக்தியை இழந்து விட்டான். அவை கண்ணுக்குத் தெரியாத ஆவியுலகில் வசிப்பவை. ஆனால் அவை மனித ஆவிகள் அல்ல. மனிதர்கள் உலகில் வாழ்ந்து முடித்த பின் தான் ஆவியுலகிற்குச் செல்கிறார்கள். ஆனால் அவை அங்கேயே உருவாகி அங்கேயே இருப்பவை. அவற்றின் குணாதிசயங்கள் தனித் தன்மை வாய்ந்தவை. அவற்றிலும் நல்லவை உண்டு. தீயவை உண்டு. தெய்வத்தன்மை வாய்ந்தவையும் உண்டு.'

பால் ப்ரண்டனுக்கு எல்லாம் வியப்பாக இருந்தது. 'அவற்றை உங்கள் ஆதிக்கத்திற்கு நீங்கள் எப்படிக் கொண்டு வருகிறீர்கள்?'

மந்திரவாதி சொன்னார்: 'அவை ஒவ்வொன்றிற்கும் ஒவ்வொரு பெயர் உண்டு. ஒவ்வொன்றையும் வரவழைக்கவும் கட்டுப்படுத்தவும் முறையான மந்திரங்கள் உண்டு. அவற்றை வந்தமர்த்த சில வடிவங்கள்/எந்திரங்களை வரைய அறிந்திருக்க வேண்டும். அவற்றினுள் சில குறிகளையும், மந்திரங்களையும் எழுத வேண்டும். எல்லாவற்றையும் கற்றுத் தர ஒரு குரு அவசியம். இத்தனையும் அறிய குரு தரும் பயிற்சிகள் எளிமையானவை அல்ல. கடுமையானவை. அதுவும் பொருத்தமானவனா இல்லையா என்றறியாமல் எந்தக் குருவும் யாரையும் சீடனாக ஏற்றுக் கொள்வதில்லை.'

'என்னுடைய குரு என் தந்தையே. எனக்கு இதில் இருந்த ஈடுபாட்டை அறிந்து, தகுந்தவனா என்று தெளிந்த பிறகு தான் என் தந்தை எனக்கு மந்திர தீட்சையை என் பதினெட்டாம் வயதில்

அளித்தார். இருபத்தெட்டு வயது வரை நான் கடும் பயிற்சிகளைச் செய்து, நிறையப் படித்து, என்னைச் சக்தி வாய்ந்தவனாக ஆக்கிக் கொண்ட பின்பே நான் இந்தப் பூதத்தின் மீது என் ஆதிக்கத்தை ஏற்படுத்தினேன். என் மகன்கள் தங்களுக்கும் சொல்லித் தாருங்கள் என என்னை வற்புறுத்துகிறார்கள். ஆனால் முக்கியமாகத் தைரியம் என்ற பண்பு அவர்களிடம் தேவையான அளவு இல்லை என்பதாலேயே நான் மறுத்து வருகிறேன். நான் இறப்பதற்கு முன் யாராவது ஒரு தகுந்த சீடனுக்கு இதைச் சொல்லித் தந்தே ஆக வேண்டும். அது நான் என் குருவுக்குத் தந்த வாக்குறுதி. அது இந்தக் கலை தொடர நான் செய்ய வேண்டிய கடமை. ஜோதிட வல்லுநரான நான் என் மரண காலத்தை அறிவேன். அதற்கு முன் என் கடமையை நிறைவேற்றுவேன்.'

அந்த மந்திரவாதி இது வரை தன் மந்திரவாதத்தினால் சாதித்த பல செயல்களைச் சொல்ல, பால் ப்ரண்டன் ஆர்வத்துடன் அனைத்தையும் கேட்டுக் கொண்டு தன் சந்தேகத்தை எழுப்பினார்: 'நீங்கள் அபாயகரமானது என்று முன்பு சொன்னீர்களே. எதனால் அப்படிச் சொல்கிறீர்கள்?'

'ஆதிக்கத்தின் கீழ் வந்த போதிலும் அந்தப் பூதங்கள் நம் கைப்பாவைகள் அல்ல. அவை மிக புத்திசாலித்தனமானவை. எப்போது நாம் பலவீனராகவும், கட்டுப்பாடில்லாமலும் மாறுகிறோமோ அப்போது அவை நம் கட்டுப்பாட்டுக்கு அடங்காமல் போகவும் சாத்தியம் உண்டு. நம் சக்திகளைத் தீய செயல்களுக்கு உபயோகிப்பதும், நாம் வலிமை இழந்து போவதும் அவை நம்மை எதிர்த்துச் செயல்பட வழி வகுக்கலாம். அந்த நேரங்களில் அவை நம்மை விவரிக்க முடியாத துன்பங்களுக்கு ஆளாக்கும். சில நேரங்களில் மரணமே சம்பவிப்பதும் உண்டு.'

பால் ப்ரண்டன் கேட்டார்: 'பண்டைய எகிப்தியர்கள் இது பற்றி ஆழ்ந்த ஞானம் உடையவர்களாக இருந்தார்களா?'

'ஆமாம். பண்டைய எகிப்திய மத குருமார்கள் அவற்றைப் பற்றி அறிந்திருந்தது மட்டுமல்லாமல், அவற்றைக் கட்டுப் பாட்டிலும் வைத்திருந்தார்கள். அவர்கள் பெரும்பாலும் ரகசியங் களைப் பாதுகாக்கும் பொறுப்புகளை அந்தப் பூதங்களிடம் ஒப்படைத்திருந்தார்கள்.'





அப்போது பால் ப்ரண்டன் பிரமிடின் உள்ளே தனக்கேற்பட்ட அனுபவங்களைச் சொன்னார். அதற்கு மந்திரவாதி சொன்னார்: 'உண்மையே. அந்த ஆவிகள் பண்டைய மத குருமார்களின் ஆதிக்கத்தில் இருந்தவை. அந்த ரகசியங்களைக் காக்கும் பணியை அவை இன்றும் செய்து கொண்டிருக்கின்றன. யார் அந்த ரகசியங்களை அறிய முற்படுகிறார்களோ அவர்களைப் பயமுறுத்துதல், ஆசை காட்டுதல், கவனத்தைச் சிதற வைத்தல் போன்ற வேலைகளைச் செய்து அப்புறப்படுத்திவிடும். அவற்றைக் கட்டுப்படுத்தத் தெரிந்தால் அந்த ரகசியங்களை நாம் அறிந்து கொள்ள முடியும். துரதிர்ஷ்டவசமாக அந்தக் குறிப்பிட்ட பூதங்களை வரவைத்துக் கட்டுப்படுத்தும் மந்திரங்கள், பண்டைய எகிப்திய குருமார்களுடன் மறைந்து விட்டன. இப்போது அவற்றை அறிந்தவர்கள் யாருமில்லை.'

பால் ப்ரண்டன் கேட்டார்: 'பூதங்களின் உதவியுடன் எதையும் செய்து விட முடியுமா?'



மந்திரவாதி அடக்கத்துடன் ஒப்புக் கொண்டார். 'எல்லாவற் றிற்கும் எல்லைகள் உண்டு. பல விஷயங்களைச் செய்ய முடியும் என்றாலும் அதற்கும் மேல் முடியாது. இறைவன் ஒருவனே எல்லை இல்லாதவன். முயற்சி கள் செய்ய மட்டுமே எங்களால் முடியும். எது வரை எந்த அளவு முடியும் என்ற கடைசி முடிவு இறைவனிடம் மட்டுமே இருக்கிறது.'



# மந்திரங்களுடன் கூடிய சாபத்தின் சக்தி!

இந்த சம்பவம் இங்கிலாந்தில் நடந்த ஒரு சம்பவத்தையும், எகிப்தில் முன்னர் நடந்த ஒரு சம்பவத்தையும் பால் ப்ரண்டனுக்கு நினைவூட்டியது.

இங்கிலாந்தில் ஒரு பாதிரியார் ஒழுக்கக் குறைவான செயல்களில் ஈடுபட்டு சர்ச்சால் பதவி விலக்கப்பட்டார். ஆனால் ஹிப்னாடிசமும், சில சித்து வித்தைகளும் தெரிந்த அந்தப் பாதிரியார் தனியாக இயங்க ஆரம்பித்தார். அவர் சக்திகளைக் கண்ட சிலர் அவரைப் பின்பற்றி அவரைக் குருவாக ஏற்றுக் கொண்டார்கள். அவர் தன் சக்திகளைத் தவறான வழிகளில் பயன்படுத்தி மற்றவர்களிடம் பணம் பறிக்கவும், தரக்குறைவாக நடந்து கொள்ளவும் செய்தார். இதைப் பால் ப்ரண்டன் போன்ற பலரும் அறிந்திருந்தாலும் அவரை ஒன்றும் சொல்ல முடியவில்லை.

ஒரு முறை பால் ப்ரண்டன் அவருக்குத் தெரிந்த ஒரு நல்ல பெண்மணி ஒரு இரவில் தூக்கத்தில் நடப்பது போல் தெருவில் நடந்து வரக்கண்டார். அவரை நிறுத்தி விசாரித்த போது, அந்தப் பாதிரியார் வரச்சொன்னதாகவும், அவரைச் சந்திக்கச் செல்வதாகவும் சொன்னார். அந்தப் பெண்மணி பேசிய போது அவர் சுயநினைவில் இல்லை; ஏதோ வசியத்திற்கு உட்பட்டிருக்கிறார் என்பது பால் ப்ரண்டனுக்குப் புரிந்தது. அந்த இரவு வேளையில் அந்த நபரிடம் செல்வது நல்லதல்ல என்று பால் ப்ரண்டன் சொல்லியும் அந்தப் பெண்மணி கேட்பதாக இல்லை. அந்தப் பக்கம் வந்த வேறொரு நண்பரின் உதவியுடன் அந்தப் பெண்மணியை அவருடைய வீட்டுக்கு அழைத்துச் சென்று விட்டார்.

யோகிகளைப் பற்றிச் சொல்லித் தன்னை இந்தியாவுக்கு அனுப்பிய இந்திய நண்பரைக் கண்டு வருத்தத்துடன் மறுநாள்





பால் ப்ரண்டன் இந்தத் தகவலைச் சொன்னார். அவரே ஒரு யோகி என்பதைப் பின்னாளில் பால் ப்ரண்டன் உணர்ந்திருந்தார். பால் ப்ரண்டன் சொன்ன தகவல், அந்த இந்திய யோகியை ஆத்திரப்பட வைத்தது. இது போன்ற ஆசாமிகளை விட்டு வைப்பது சமூகத்திற்கு நல்லதல்ல என்று சொன்ன அவர், உடனடியாக ஏதோ மந்திரங்களைச் சொல்லி அந்த போலிப் பாதிரியாரைச் சபித்தார். இந்தியா வந்து யோகிகளின் சக்திகளைக் கண்கூடாகக் கண்டிருந்த பால் ப்ரண்டன், இது அந்த பாதிரிக்கு அபாயமே என்றுணர்ந்தார். பெரியதாக ஒன்றும் செய்யாமல் அந்த பாதிரியாருக்குப் புத்திமதி கூறி மிரட்டி ஊரை விட்டே போகும்படி செய்து, திருந்த சந்தர்ப்பம் தரலாமே என்று சொன்னார். "நீங்கள் உங்கள் வழிப்படி முயற்சி, செய்யுங்கள். நான், என் வழிப்படி முயற்சி செய்திருக்கிறேன்" என்று அந்த இந்திய யோகி கூறினார்.

இந்திய யோகிகளின் சக்தியைக் கண்கூடாக இந்தியா வந்திருந்த போது கண்டிருந்த பால் ப்ரண்டன், அந்த போலிப் பாதிரியாருக்கு ஆபத்து என்பதை உணர்ந்து, விரைவாக அந்த பாதிரியாரைச் சந்தித்து புத்தி சொல்லி எச்சரிக்கச் சென்றார். அந்தப் பாதிரியார் தங்கியிருந்த இடத்திற்குப் போன போது உள்ளே இருட்டாக இருந்தது. ஒரே கூச்சலும் குழப்பமுமாக இருந்தது. அங்கு விசாரித்த போது அந்தப் பாதிரியார் தன் சீடர்களிடம் பிரசங்கம் செய்து கொண்டு இருந்த போது மின்விளக்குகள் திடீரென்று படாரென்று வெடித்தன என்றும் ஏதோ ஒரு சக்தி அந்தப் பாதிரியாரை ஆக்கிரமித்தது போல் இருந்தது என்றும், பயத்தில் அந்த பாதிரியார் ஏதேதோ பிதற்றிக் கொண்டு ஏதோ சைத்தான் வந்து விட்டதாகவும், இதெல்லாம் சைத்தானின் வேலை என்று கத்திக் கொண்டு கீழே மயங்கி விழுந்ததாகவும் அவர்கள் சொன்னார்கள். பின் அந்தப் பாதிரியாரை மருத்துவமனைக்கு விரைவாக அவருடைய சீடர்கள் அழைத்துச் சென்றார்களாம்.

பால் ப்ரண்டனுக்கு இது அந்த இந்திய யோகியின் 4சாபம் செய்த வேலையே என்பதில் சந்தேகம் இருக்கவில்லை. அந்த சீடர்களிடம் இது நடந்த நேரத்தைக் கேட்டார். அவர்கள் சொன்ன நேரம் அந்த இந்திய யோகி மந்திரங்களை உச்சரித்து சபித்த

அதே நேரம்! அந்த முட்டாள் சீடர்களில் ஒருவனிடம் அவர்களது குருவின் மயக்கம் தெளிந்தவுடன் தரச் சொல்லி பால் ப்ரண்டன் ஒரு கடிதத்தைத் தந்தார். உடனடியாக அந்த ஊரை விட்டுக் கிளம்ப வேண்டும் என்றும் இல்லா விட்டால் போலீசில் புகாரும் தரப்படும் என்றும் அந்தக் கடிதத்தில் எழுதி இருந்தார். அந்தப் பாதிரியார் பின் அந்த ஊரை விட்டே போய் ஒரு வருடத்திற்குள் ஒரு கிராமத்தில் இறந்து போனார்.

அதே போல் இங்கிலாந்தைச் சேர்ந்த கார்னர்வான் பிரபு (Lord Carnarvon) என்பவர், டுடன்காமென் (Tutankhamen) என்ற கி.மு. பதினான்காம் நூற்றாண்டின் எகிப்திய சக்கரவர்த்தியின் கல்லறையைத் தோண்டிப் பார்க்கும் பணியை 1923 -இல் மேற்கொண்டார். அந்தக் கல்லறைக்குள் நிறைய செல்வங்கள் உள்ளன என்றும் அந்த செல்வங்கள் மந்திரங்களால் சபிக்கப்பட்ட சாபங்களால் பாதுகாக்கப்பட்டு வருகின்றன என்றும் எகிப்தில் பெருத்த நம்பிக்கை பரவலாக இருந்து வந்தது. பலரும் கார்னர்வான் பிரபுவை அந்தக் கல்லறையைத் திறக்கப்போவது ஆபத்தானது என்று எச்சரித்தார்கள். ஆனாலும் அவர் அதைப் பொருட்படுத்தாமல் அந்தக் கல்லறையைத் திறந்து பார்க்கும் பணியை மேற்கொண்டார். நல்ல ஆரோக்கியத்துடன் இருந்த அவர், இரண்டே மாதங்களில் ஏதோ விஷக் கொசுக்கடியால் நோய்வாய்ப்பட்டு இறக்க நேரிட்டது. அன்றும் அவர் கெய்ரோவில் தங்கி இருந்த நட்சத்திர ஓட்டலில் தெரியக்கூடிய காரணமே இல்லாமல் எல்லா விளக்கு களும் அணைந்தன. கிட்டத்தட்ட ஒரு மணி நேரம் கழித்து மின் சாரம் திரும்பக் கிடைத்த போது அவருடைய நர்சு அவர் பிணத்தைக் காண நேர்ந்தது.

அந்தக் கல்லறையைத் திறக்கும் வேலையில் ஈடுபட்டவர்கள் அனைவரும் பல்வேறு கால கட்டங்களில் துர்மரணத்தையே சந்திக்க நேர்ந்தது அல்லது பெரிய இழப்புகளைச் சந்திக்க நேரிட்டது என்று கூறுகிறார்கள். தன் நேரடி அனுபவம் மூலமாகவும் வரலாற்று சி றப்பு மிக்க அந்த கல்லறை தோண்டப்பட்டதன் விளைவுகளின் பதிவுகளைப் படித்திருந்ததன் மூலமாகவும் அறிந்ததை இந்தச் சமயத்தில் பால் ப்ரண்டன் நினைவு கூர்ந்தார்.





# ஆவி, பூதங்களை ஆட்கொண்ட மனிதன்



ஆவி, பூதம், மந்திரவாதம் ஆகியவற்றுடன் பால் ப்ரண்டனின் எகிப்திய அனுபவங்களைப் பற்றிக் குறிப்பிடும் போது பால் ப்ரண்டன் இந்தியாவில் சந்தித்த எகிப்திய மேஜிக் நிபுணர் ஒருவருடனான அவரது அனுபவத்தையும் குறிப்பிடுவது பொருத்தமாக இருக்கும் என்று நினைக்கிறேன். அது 'ரகசிய இந்தியாவில் தேடல்' என்ற புத்தகத்தில் பால் ப்ரண்டன் எழுதி இருந்தாலும் கூட, சந்தித்த நபர் எகிப்தியர், அந்த நபர் தன் சக்திகளைப் பெற்ற இடம் எகிப்து என்பதால் இங்கு அதைக் குறிப்பிட விரும்புகிறேன்.

உண்மையான யோகிகளைக் காண ஆசைப்பட்டு இந்தியாவிற்கு வந்து முதலில் மும்பையில் இறங்கிய பால் ப்ரண்டன், தான் தங்கிய ஓட்டலில் முதலில் சந்தித்த அதிசய மனிதர் முகமது பே (Mahmoud Bey) என்ற எகிப்தியர். அவரும் இந்தியாவில் சுற்றுப் பயணம் மேற்கொண்டிருந்தார். ஓட்டலில் எல்லோரும் அந்த மனிதரைச் சற்றுப் பயத்துடன் பார்ப்பது, அவரைப் பார்த்தவுடன் குரலைத் தாழ்த்தி அவரைப் பற்றிப் பேசுவது போன்ற செயல்களைச்

செய்யவே, பால் ப்ரண்டன் அந்த மனிதர் யார் என்று விசாரித்தார். அவர் பெரிய மேஜிக் நிபுணர் என்றும் அதிசய சக்திகள் படைத்த மனிதர் என்றும் தெரிவித்தார்கள்.

உடனே அவரைச் சந்தித்துப் பேச ஆர்வம் கொண்ட பால் ப்ரண்டன் தன் விசிட்டிங் கார்டின் பின்புறம் தன் ஆர்வத்தை எழுதி, ஓட்டல் பணியாளர் ஒருவர் மூலம் அனுப்பினார். உடனே அவரைச் சந்திக்க ஒப்புக் கொண்ட முகமது பே காலை உணவை அவருடன் பகிர்ந்து கொள்ள அழைத்தார். அறிமுகமும், காலை உணவும் முடிந்தவுடன் பால் ப்ரண்டன் வெளிப்படையாகவே அவரிடம் "உங்களிடம் அதிசய சக்திகள் இருக்கின்றன என்பது உண்மையா?" என்று கேட்டார்.

"எல்லாம் வல்ல அல்லாவின் கருணையால் எனக்கு அந்த சக்திகள் அளிக்கப் பட்டிருக்கின்றன" என்றார் முகமது பே.

அதை வெளிப்படுத்திக் காட்ட பால் ப்ரண்டன் ஆசைப்படவே, முகமது பே ஒத்துக் கொண்டார். "உங்களிடம் ஒரு காகிதமும் பென்சிலும் இருக்கிறதா?"

பால் ப்ரண்டன் உடனடியாகத் தான் வைத்திருந்த நோட்டுப் புத்தகத்தில் இருந்து ஒரு தாளைக் கிழித்துக் கொண்டு பென்சிலையும் எடுத்துக் கொண்டார்.

முகமது பே சில அடிகள் தள்ளிச் சென்று ஓட்டலின் ஜன்னலோரம் நின்று கொண்டு சொன்னார். "உங்களைப் பற்றிய ஏதாவது கேள்வி ஒன்றை எழுதிக் கொள்ளுங்கள்." சற்று யோசித்து விட்டு பால் ப்ரண்டன் அந்தத் தாளில் "நான்கு வருடங்களுக்கு முன்பு நான் எங்கே வசித்தேன்?" என்ற கேள்வியை எழுதினார்.

முகமது பே அந்தத் தாளைப் பல மடிப்புகளாக மடித்து பென்சிலுடன் சேர்த்துக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு வலது உள்ளங்கையில் வைத்துக் கொள்ளச் சொன்னார். பால் ப்ரண்டன் அப்படியே செய்தார். முகமது பே கண்களை மூடிக் கொண்டு சிறிது நேரம் உட்கார்ந்திருந்து விட்டு கண்களைத் திறந்து கேட்டார். "நீங்கள்





எழுதிய கேள்வி- நான்கு வருடங்களுக்கு முன்பு நான் எங்கே வசித்தேன் என்பது தானே?"

பால் ப்ரண்டன் திகைத்துப் போனார். மனதைப் படிப்பது என்பது இது தானோ? திகைப்புடனே ஒத்துக் கொண்டார். "ஆமாம்"

" இப்போது உங்கள் கையில் இருக்கும் காகிதத்தைப் பிரித்துப் பாருங்கள்." தன் கையில் இருந்த தாளைப் பிரித்துப் பார்த்த பால் ப்ரண்டன் பிரமித்துப் போனார். அவர் எழுதியிருந்த கேள்வியின் கீழ் சரியான பதில் எழுதி இருந்தது. பல மடிப்புகள் மடித்து மிகவும் உறுதியாகப் பிடித்துக் கொண்டிருந்த அந்தத் தாளில் அவர் அறியாமல் யார் எழுதியது? எப்படி எழுத முடியும்? அந்தக் கேள்விக்குப் பதில் எப்படி அறியப்பட்டது என்ற கேள்விகள் அவர் மனதில் இயல்பாக எழுந்தன. ஒரு வேளை இதெல்லாம் கண்கட்டு வித்தையோ என்று சந்தேகம் கொண்ட பால் ப்ரண்டன், "இன்னொரு கேள்வி எழுதட்டுமா?" என்று கேட்க, முகமது பே அதற்கும் ஒத்துக் கொண்டார்.

சற்று யோசித்து விட்டு பால் ப்ரண்டன், "நான் இரண்டு வருடங்கள் எந்த பத்திரிகையில் பணி புரிந்து கொண்டிருந்தேன்?" என்ற கேள்வியை எழுதி அந்தத் தாளை நன்றாக மடித்து பென்சிலுடன் சேர்த்து மேலும் உறுதியாகப் பிடித்துக் கொண்டார்.

அதற்கும் கண்களை மூடிக் கொண்டிருந்து விட்டுச் சில நிமிடங்கள் கழித்து முகமது பே சொன்னார். "நீங்கள் எழுதிய கேள்வி - நான் இரண்டு வருடங்கள் எந்தப் பத்திரிகையில் பணி புரிந்து கொண்டிருந்தேன் என்பது தானே?"

"ஆம்" என்ற பால் ப்ரண்டன் ஆச்சரியத்துடன் தாளைப் பிரித்துப் பார்த்தார். அந்தக் கேள்விக்குக் கீழும் சரியான பதில் எழுதப் பட்டிருந்தது. மூன்றாவது முறையும் ஒரு கேள்வி கேட்டு அதற்கும் சரியாகப் பதில் அந்தத் தாளில் எழுதப்படவே, பால் ப்ரண்டன் அடைந்த வியப்பிற்கு அளவேயில்லை. இது ஹிப்னாடிசமா, கண்கட்டு வித்தையா? என்று மறுபடியும்

வியந்தார். கண்கட்டு வித்தையாக இருந்தால் சிறிது நேரம் கழித்து அந்த எழுத்துகள் அந்தத் தாளில் இருக்க வாய்ப்பில்லை என்று அவர் கேள்விப்பட்டிருந்தார். ஆனால் சில மாதங்கள் வரை அந்தத் தாளை அவர் வைத்திருந்தார். அந்த எழுத்துகள் அது வரையும் அழியாமல் தான் இருந்தன. அந்த மனிதர் அவருடைய மனதைப் படிக்கும் கலையைக் கற்றிருக்க வேண்டும் என்று எடுத்துக் கொண்டாலும் கூட, அந்தப் பதிலை அவர் எப்படி அந்தத் தாளில் எழுதி இருக்க முடியும் என்ற கேள்விக்கு பால் ப்ரண்டனால் விடை காண முடியவில்லை.

முகமது பே கேட்டார்: "உங்கள் நாட்டில் இது போல் யாராலாவது செய்து காட்டி இருக்க முடியுமா?"

பால் ப்ரண்டன் சொன்னார்: "சில தந்திரங்கள் செய்து ஏமாற்று வேலைகள் செய்ய சிலரால் முடியுமே ஒழிய கவனமான கண்காணிப்பில் இது போன்று உண்மையிலேயே செய்து காட்டக் கூடிய ஆட்கள் இல்லை. நீங்கள் இதை எப்படிச் செய்கிறீர்கள்?"

" இந்த ரகசியத்தை அறிய எத்தனை பணம் வேண்டுமானாலும் தரப் பலர் தயாராக இருந்தார்கள். ஆனால் அந்த ரகசியத்தை நான் ஒரு போதும் விற்க நினைத்ததில்லை. ஆனால் இது ஒருவரால் கற்க முடிந்த வித்தையே."

"இதைக் கற்றுத் தேற எவ்வளவு காலம் தேவை?"

"அது கற்றுக் கொள்ளும் ஆட்களைப் பொறுத்தது. முழு மனதோடு ஒருவர் இதில் ஈடுபட்டால் அடிப்படை விஷயங்களைப் புரிந்து கொள்ள மூன்று மாதங்கள் போதும். ஆனால் இதில் தேர்ச்சி அடையத் தேவையான பயிற்சிக்குப் பல வருடங்கள் தேவைப்படும்."

"நீங்கள் இதன் ரகசியத்தைச் சொல்ல வேண்டாம். இதை எப்படி கற்றுக் கொண்டீர்கள் என்பதையும் இதைச் செய்து காட்டும் விதம் பற்றிய பொதுவான வழிமுறையையும் சொல்ல முடியுமா?"

முகமது பே சொன்னார்: "நான் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த போது எங்கள் பகுதியில் ஒரு வயதான யூதர்





வசிக்க வந்தார். பார்க்க அவர் சென்ற நூற்றாண்டின் மனிதர் போல இருப்பார். யாரிடமும் பேச மாட்டார். பழக மாட்டார். அவரிடம் ஏதோ வித்தியாசமாக இருப்பது போல எனக்குத் தோன்றவே அவரிடம் அடிக்கடி வலியச் சென்று பேசினேன். ஆரம்பத்தில் பிடி கொடுக்காமல் பழகிய அவர் பிறகு என்னிடம் நெருக்கமானார். அதீத சக்திகள் பற்றிப் படித்துக் கொண்டும் ஆராய்ச்சி செய்து கொண்டும் இருப்பதாகக் கூறவே எனக்கு அதில் ஈடுபாடு வந்தது. நவீன விவசாயத்தில் டிப்ளமோ படித்துக் கொண்டு இருந்த எனக்கு, முழு ஈடுபாடும் இந்த அதீத சக்திகள் பக்கம் திரும்பியது."

"அவர் கெய்ரோவில் இருந்த ஒரு ரகசிய சொசைட்டிக்கு என்னை அழைத்துச் சென்றார். அதில் இது போன்ற விஷயங்களில் ஈடுபாடு கொண்டிருந்த பலர் அடிக்கடி கலந்து கொண்டு பேசு வார்கள். பலர் வெற்றிகரமாக ஆராய்ச்சிகள் செய்தும், பயிற்சி செய்தும் வருபவர்கள். அவர்கள் பேசுவதை எல்லாம் மிகுந்த ஆர்வத்தோடு கேட்பேன். எனக்கு இயல்பாகவே இதையெல்லாம் கற்றுக் கொள்ளும் திறமை இருந்தது. நிறைய புத்தகங்கள் படித்தேன். நிறைய மற்றவர்களிடம் இருந்தும் கற்றுக் கொண்டேன். அதில் பெரிய வெற்றியும் கண்டேன். பிறகு அந்த சொசைட்டியின் தலைவராக 12 வருடங்கள் இருந்தேன். பிறகு அந்த பதவியில் இருந்து ராஜினாமா செய்து விட்டு இப்போது உலகச் சுற்றுப் பயணத்தில் இருக்கிறேன்.

சிரியா, பாலஸ்தீனம் ஆகிய நாடுகளுக்குப் போய் விட்டு இப்போது இந்தியா வந்திருக்கிறேன். சிரியாவில் பல குற்றவாளிகளைப் போலீசாருக்குப் பிடித்துக் கொடுத்திருக்கிறேன். இங்கு பணக்காரர்களான ஹிந்துக்களும், பார்சியர்களும் அறிய விரும்பும் தேவையான தகவல்களைப் பெரியதொரு தொகைக்காகச் செய்து கொடுக்கிறேன். ஒரு தகவல் பெற்றுத் தர குறைந்த பட்சம் நூறு ரூபாய் வாங்குகிறேன். (1931 ஆம் ஆண்டைய நூறு ரூபாய் என்றால் அது எத்தனை பெரிய தொகையாக அன்று இருந்திருக்க வேண்டும் என்பதை வாசகர்கள் ஊகிக்கலாம்.) வெளிப்படையாகச் சொல்வதென்றால் கை நிறையச் சம்பாதித்து விட்டு இதை எல்லாம் விட்டு விட்டு எகிப்தின் கிராமப்பகுதி ஒன்றில் ஒரு பெரிய

ஆரஞ்சுத் தோட்டம் வாங்கி நான் படித்த விவசாயத்தில் மீண்டும் ஈடுபட விரும்புகிறேன்.''

பால் ப்ரண்டன் கேட்டார்: ''தகவல்களை எப்படிப் பெறுகிறீர்கள்?''

முகமது பே ரகசிய முறைகளை வெளிப்படுத்தாமல் பொதுவான தகவல்களைத் தந்தார். ''நான் ஆவிகளைப் பயன்படுத்துகிறேன். அந்த ஆவிகளில் இறந்த மனிதர்களின் ஆவிகள் மட்டுமல்லாமல் மனித உடலையே ஒரு போதும் தரித்திராத ஆவிகளும் இருக்கின்றன. அந்த ஆவிகளை ஜின்ஸ் (jinns) என்று எகிப்தில் அழைப்பார்கள். அவற்றிலும் நல்ல ஆவிகள், தீய ஆவிகள் என்று இருக்கின்றன. தீய ஆவிகள் பெரும்பாலும் ஆப்பிரிக்கச் சூனியக்காரர்களால் பயன்படுத்தப்படுகின்றன. அவை நமக்கு அடிபணிந்து இருக்கும் வரை நமக்குப் பல வேலைகளைச் செய்து தரும் என்றாலும் சற்று நம் கட்டுப்பாடு விலகினால் நமக்கு எதிராக மாறி நம்மையே கொன்று விடக் கூடியவை. எனவே நான் நல்ல ஆவிகளை மட்டுமே என் கைவசப்படுத்துகிறேன். சில வித்தைகளை அவற்றுக்கு நாம் கற்றுத் தர முடியும். அவை கற்றுத் தேர்ந்த பின் நம் விருப்பப்படி அவற்றைப் பயன்படுத்த முடியும்.''

''நீங்கள் எந்த மனித ஆவியைப் பயன்படுத்துகிறீர்கள்?''

''என் சகோதரன் சில ஆண்டுகளுக்கு முன் இறந்து போனான். அவன் ஆவியை நான் உபயோகப்படுத்துகிறேன். நான் அறிய விரும்பும் பல தகவல்களை அவன் மூலம் அறிகிறேன். நீங்கள் தாளில் எழுதிய கேள்விகளை நான் அவன் மூலம் தான் அறிந்தேன்?''

''ஜின்கள் என்று சொல்லும் ஆவிகளை எப்படி வசப்படுத்தி உபயோகப்படுத்துகிறீர்கள்?''

''என் கட்டுப்பாட்டில் முப்பது ஜின்கள் இருக்கின்றன. அவை ஒவ்வொன்றிற்கும் ஒவ்வொரு பெயர் உண்டு. பெயர் தெரிந்தால் மட்டுமே அவற்றை வரவழைக்கவும், அவற்றை நம் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வரவும் முடியும். நம் கட்டுப்பாட்டுக்குக் கொண்டு வந்த பின், அவற்றை நாம் விரும்பும் வேலைகளில் பயிற்றுவிக்க வேண்டும். பின்பே அவற்றால் நாம்





சொன்ன படி வேலை செய்ய முடியும். ஒரு வேலை அறிந்த ஜின்னிடம் வேறொரு வேலையைச் செய்ய வைக்க முடியாது. உதாரணத்திற்கு உங்கள் கேள்விக்கான பதிலை உங்களுடைய தாளில் எழுத நான் பயன்படுத்திய ஜின்னை அந்தக் கேள்வியை அறிய நான் பயன்படுத்த முடியாது. அதனால் ஒவ்வொன்றையும் அது தேர்ச்சி பெற்ற வேலையில் மட்டுமே பயன்படுத்த முடியும்.''

'' ஜின்களை எப்படி வரவழைக்கிறீர்கள்?''

''அவற்றின் பெயர்களை அழைத்து அதில் நம் முழுக் கவனத்தையும் குவித்தால் அவை வரும். அதிகமாக நான் அரபு மொழியில் அதன் பெயரில் எழுதி என் எண்ணத்தால் உடனடியாக வரவழைக்கிறேன்.''

முகமது பே அதற்கு மேல் விவரிக்கவில்லை. பால் ப்ரண்டன் சாதாரண மனித அறிவுக்கு எட்டாத எத்தனையோ விஷயங்கள் இருக்கின்றன என்று எண்ணியவராக அவரிடமிருந்து விடை பெற்றார். கிட்டத்தட்ட இதே போன்ற தகவல்களைத் தானே அவர் அந்த மந்திரவாதியிடம் இருந்தும் பெற்றார்?


எட்வர்டு அடெஸ்
மேடம் மார்கரைட்

# பிரமிக்க வைக்கும் ஹிப்னாட்டிச சக்திகள்

அந்த மந்திரவாதிக்கு அடுத்தபடியாக பால் ப்ரண்டன் எகிப்தில் கண்டது அற்புத சக்தி படைத்த ப்ரான்ஸ் நாட்டைச் சேர்ந்த இளம் தம்பதியை. அந்த தம்பதியர் கெய்ரோ நகரத்தில் வாழ்ந்து வந்தார்கள். அவர்கள் பெயர் எட்வர்டு அடெஸ் மற்றும் மேடம் மார்கரைட். எட்வர்டு அடெஸ் தன் மனைவியை ஹிப்னாட்டிசம் செய்து பல அற்புதச் செயல்களை நிகழ்த்த வல்லவராக இருந்தார்.

அவர்களைச் சந்திக்கச் செல்லும் முன் பால் ப்ரண்டன் இங்கிலாந்தைச் சேர்ந்த பெரிய அதிகாரியின் மனைவியையும் தன்னுடன் வரச் சொன்னார். அந்தப் பெண்மணி இது போன்ற செயல்களை எப்போதும் சந்தேகக் கண்ணால் பார்ப்பவராக இருந்ததால், தாங்கள் காணப்போகும் நிகழ்ச்சிகளில் ஏதாவது ஏமாற்று வேலை இருந்தால் அவருடைய கூர்மையான பார்வைக்குத் தப்பாது என்று பால் ப்ரண்டன் எண்ணினார்.

எட்வர்டு அடெஸ் அவர்களை வரவேற்று நிறைய நேரம் தங்கள் இருவரைப் பற்றியும் சொன்னார். பயிற்சிகளைத் தொடர்ந்து செய்தால் மனிதர்களால் முடியாதது எதுவும் இல்லை என்பதைத் தங்கள் வாழ்வில் கண்டறிந்ததாகச் சொன்னார். மனிதன் தனக்குள் புதைந்து கிடக்கும் சக்திகளைப் பகுத்தறிவு என்ற பெயரால்





கண்டறியத் தவறுவதாகச் சொன்னார். அவருடைய மனைவி மார்கரைட் அதிகம் பேசாத அமைதியான நபராக இருந்தார்.

எட்வர்டு அடெஸ் ஆரம்பத்தில் தன் மனைவியை ஹிப்னாட்டிசத்தில் ஆழ்த்தத் தனக்கு நிறைய நேரம் தேவைப்பட்டதாகவும், தொடர்ந்த பயிற்சியால் இப்போது ஓரிரு நிமிடங்களே தேவைப்படுவதாகவும் சொன்னார்.

அவர் தன் வலது கட்டை விரலைத் தன் மனைவியின் இரு புருவங்களுக்கு இடையில் வைத்து மனைவியின் முகத்தையே உற்றுப் பார்த்தார். அவர் சொன்னபடியே மார்கரைட் கண்கள் சொருகி உடனடியாக ஹிப்னாட்டிச உறக்கத்தில் ஆழ்ந்தார். பால் ப்ரண்டன் எழுந்து சென்று மார்கரைட்டின் கண்ணிமைகளைச் சற்று விலக்கிப் பார்த்தார். கண்மணிகள் நிஜமாகவே மேலே சென்றிருந்தன. இது, அவர் முழு பிரக்ஞையில் இல்லை என்பதைக் காட்டுவதாக இருக்கவே திருப்தியுற்ற பால் ப்ரண்டன், எட்வர்டு அடெஸிடம் தொடரச் சொன்னார்.

ஆரம்பத்தில் ஓரிரு எளிய ஹிப்னாட்டிச பயிற்சியாளர்கள் செய்யும் நிகழ்வுகளைச் செய்து காட்டிய எட்வர்டு அடெஸ், அடுத்தபடியாக பால் ப்ரண்டனிடம், மார்கரைட்டின் கண்களைக் கட்டச் சொன்னார்.

பால் ப்ரண்டன் மார்கரைட்டின் கண்களை டேப் போட்டு ஒட்டி வேறு ஒரு சிவந்த துணியால் நன்றாகக் கட்டியும் விட்டார். என்ன முயன்றாலும் கண்களைத் திறந்து பார்க்க இப்போது வழியில்லை. எட்வர்டு அடெஸ், பால் ப்ரண்டனிடம் சொன்னார்: ''என்னிடம் ஏதாவது செய்யுமாறு என் காதில் ரகசியமாகச் சொல்லுங்கள். நான் செய்கிறபடியே அவளையும் செய்யச் சொல்கிறேன்.''

பால் ப்ரண்டன், எட்வர்டு அடெஸிற்கு மட்டும் கேட்கும்படி காதில் சொன்னார்: ''வலது கையை உயர்த்துங்கள்.''

வலது கையை உயர்த்தியபடியே எட்வர்டு அடெஸ் மனைவியிடம் சொன்னார்: ''நான் என்ன செய்கிறேனோ அப்படியே நீயும் செய்.'' கண்கள் கட்டப்பட்டிருந்த மார்கரைட்டும் அப்படியே

தன் வலது கையை உயர்த்தினார். பால் ப்ரண்டனும் அந்த ஆங்கில அதிகாரியின் மனைவியும் அந்த அதிசயத்தைப் பார்த்து திகைத்துப் போனார்கள்.

அந்த அதிகாரியின் மனைவியிடம் எட்வர்டு அடெஸ் சொன்னார்: ''இப்போது நீங்கள் எதாவது என் காதில் சொல்லுங்கள்.''

அந்தப் பெண்மணி அவரிடம் ரகசியமாகச் சொன்னார்: ''இரண்டு கைகளின் விரல்களையும் பின்னி இணைத்துக் கொள்ளுங்கள்.''

எட்வர்டு அடெஸ் அப்படியே விரல்களைப் பின்னி இணைத்துக் கொள்ள, மார்கரைட் ஏதோ நேரில் பார்த்துச் செய்வது போல அப்படியே தன் இரு கைவிரல்களையும் பின்னிக் கொண்டார்.

வியப்பில் ஆழ்ந்த பால் ப்ரண்டன் மற்றும் அந்த பெண்மணியிடம் எட்வர்டு அடெஸ் சொன்னார்: ''நீங்கள் இது வரை பார்த்தது ஹிப்னாட்டிசத்தின் முதல் நிலை. இரண்டாவது நிலையில் ஆழ்மனம் இன்னும் நுணுக்கமாகவும் அற்புதமாகவும் வேலை செய்யும்.''

எட்வர்டு அடெஸ் தன் மனைவியை இரண்டாம் நிலை ஹிப்னாட்டிசத்திற்குக் கொண்டு செல்லவும் அதிக நேரம் எடுத்துக் கொள்ளவில்லை. மார்கரைட்டின் நெற்றியைத் தொட்டுக் கட்டளையிட்டார். பின் அவரை எழுந்து நாற்காலியில் அமரச் சொல்ல மார்கரைட்டும் அமர்ந்தார்.

அங்கு அலமாரியில் வைத்திருந்த பல புத்தகங்களில் ஒன்றை எடுத்துத் தரும்படி எட்வர்டு அடெஸ் பால் ப்ரண்டனிடம் சொல்ல, அவர் எழுந்து அந்த அலமாரியில் இருந்து ஒரு பிரெஞ்சு அறிவியல் புத்தகத்தை எடுத்தார். எட்வர்டு அடெஸ், ''அதில் ஏதாவது ஒரு பக்கத்தில் ஏதாவது ஒரு பத்தியைத் தேர்ந்தெடுத்துக் கொடுங்கள்'' என்று சொல்ல, பால் ப்ரண்டன் 53-ஆம் பக்கத்தில் ஒரு பத்தியைத் தேர்ந்தெடுத்துக் கொடுத்தார்.

அடெஸ் மனைவியிடம், ''அவர் தேர்ந்தெடுத்த பத்தியை அப்படியே பார்த்து எழுது'' என்று சொல்லி ஒரு வெள்ளைத் தாளையும் ஒரு பென்சிலையும் தர மார்கரைட் மூடிய கண்களுடன் அந்தப் புத்தகத்தைப் பார்த்து அந்தத் தாளில் எழுத ஆரம்பிக்க,





பால் ப்ரண்டனும், அந்தப் பெண்மணியும் பிரமித்துப் போனார்கள். பால் ப்ரண்டன் சென்று மீண்டும் மார்கரைட்டின் கண்கள் முழுமையாகத் தெரியாதபடி கட்டப்பட்டு இருக்கின்றனவா என்று உறுதிப்படுத்திக் கொண்டார். இரண்டிரண்டு திரைகளால் அந்தக் கண்கள் மறைக்கப்பட்டிருந்தன உண்மை தான். ஆனாலும் மார்கரைட் இரண்டு மூன்று சொற்களை எழுதி விட்டு மறுபடியும் அந்த பக்கத்தைப் பார்த்து மறுபடி திரும்பித் தாளில் எழுதுவது என்று பார்த்து எழுதுபவர்களைப் போலவே நடந்து கொண்டார்.

மார்கரைட் எழுதியதில் ஒரே ஒரு சொல்லில் வந்த ஒரு சிறிய எழுத்துப் பிழை தவிர மீதி எல்லாம் அப்படியே எழுதப்பட்டிருந்தது, பால் ப்ரண்டன் அந்தப் பத்தியில் இரண்டாவது வரியில் இரண்டாவது சொல்லையும், மூன்றாவது வரியில் மூன்றாவது சொல்லையும் கோடிடச் சொன்னார். கண்கள் மூடப்பட்டிருந்த நிலையிலும் மார்கரைட் அப்படியே அந்தச் சொற்களைக் கோடிட்டுக் காட்டினார்.

எட்வர்டு அடெஸ் அந்தப் பத்தியை இடது கையால் எழுதிக் காட்டச் சொன்னார். இயல்பில் வலது கையால் எழுதும் பழக்கம் உடைய மார்கரைட் சிறிதும் தயக்கமில்லாமல் இடது கையால் எழுத ஆரம்பிக்க, வலது கையில் எழுதுபவர்களுக்கு இடது கையால் எழுதுவது எவ்வளவு கடினம் என்பதை உணர்ந்த பால் ப்ரண்டனும் அந்த ஆங்கில அதிகாரியின் மனைவியும் திகைப்பின் உச்சத்திற்கே சென்றார்கள்.





# ஹிப்னாட்டிசத்தால் அறிய முடிவதும் முடியாததும்..

ஹிப்னாட்டிசம் செய்யப்பட்ட மார்கரைட்டின் சக்திகள் அத்துடன் முடிந்து விடவில்லை. பால் ப்ரண்டனுடன் வந்திருந்த பெண்மணியிடம் மார்கரைட்டின் கையைப் பிடித்துக் கொள்ள எட்வர்டு அடெஸ் சொல்ல அவரும் அப்படியே செய்தார்.

எட்வர்டு அடெஸ் சொன்னார்: "யாரையாவது நினைத்துக் கொள்ளுங்கள். அவர் உருவத்தை உங்கள் மனதில் கொண்டு வாருங்கள்."

அந்தப் பெண்மணி தன் கணவரின் உருவத்தை மனதில் நினைத்துக் கொண்டார். சிறிது நேரத்தில் மார்கரைட் அந்தப் பெண்மணியின் கணவரைப் பற்றிச் சொல்ல ஆரம்பித்தார். அவருடைய உருவம், குணங்கள், திறமைகள் பற்றியெல்லாம் விவரித்தார். அந்த மனிதர் ஓர் அரசாங்க அதிகாரி என்பதையும் சொன்னார். (அந்தப் பெண்மணியைக் கூட்டி வந்த போது அவர் என் நண்பர் என்று சொன்னாரே ஒழிய வேறு விவரங்களை பால் ப்ரண்டன் சொல்லி இருக்கவில்லை.)

ஆனால் மார்கரைட் இன்னொரு சந்தர்ப்பத்தில் பால் ப்ரண்டனுடைய எதிர்காலத்தைப் பற்றிச் சொல்ல முற்பட்ட போது





அவை முற்றிலும் தவறாக இருந்ததாக பால் ப்ரண்டன் கூறுகிறார். ஆனால் பால் ப்ரண்டனுடைய எண்ணங்கள், ஆசைகள், இலட்சியங்கள் பற்றி எல்லாம் கூற முற்பட்ட போது அவை மிகச் சரியாகவே இருந்தன. இது போன்ற ஹிப்னாட்டிச நிலைக்குக் கூட எதிர்காலம் புரியாத புதிராகவே இருக்கிறது என்று பால் ப்ரண்டன் நினைத்துக் கொண்டார்.

இந்த இடத்தில் ஓர் உண்மையை அறிந்து கொள்வது மிக முக்கியம். ஹிப்னாட்டிசம் மூலம் மனதில் உள்ளதையும், ஆழ்மனதிற்குத் தெளிவாகத் தெரிந்ததையும் சொல்லலாமே ஒழிய ஆழ்மனமே அறியாத இரகசியங்களை அறிந்து கொள்ளுதல் சாத்தியமல்ல. உதாரணத்திற்குத் தன் கணவரின் குணாதிசயங்கள் அந்தப் பெண்மணிக்கு நன்றாகத் தெரிந்து இருந்ததால் அந்தப் பெண்மணியின் கணவரின் முழு விவரங்களை மார்கரைட்டால் சொல்ல முடிந்தது. அதே போல் பால் ப்ரண்டனின் இலட்சியம் மற்றும் எண்ணங்களை அவர் அறிந்திருந்ததால் அவற்றையும் அவர் மனம் மூலம் மார்கரைட் அறிய முடிந்தது. பால் ப்ரண்டனின் எதிர்காலம் பால் ப்ரண்டனே அறியாத ஓர் இரகசியமாக இருந்ததால் மார்கரைட்டிற்கு அவர் மனம் மூலம் அதை அறிய முடியவில்லை. ஆனாலும் அவர் ஏதோ முயற்சி செய்ய அது பொய்யாய்ப் போயிருக்கிறது. எதிர்காலத்தை அறிய ஹிப்னாடிசத்தை விட உயரிய யோக நிலைக்குப் போனால் ஒழிய அது சாத்தியமில்லை என்பதற்கு இது ஒரு நல்ல உதாரணம்.

அடுத்ததாக ஹிப்னாட்டிசத்தின் மூன்றாம் நிலைக்குத் தன் மனைவியை எட்வர்டு அடெஸ் அழைத்துச் சென்றார். அந்த நிலையில் ஒரு கூர்மையான ஊசியை எடுத்து மார்கரைட்டின் கையில் குத்தினார். ஊசி அரையங்குலம் உள்ளே சென்றாலும் மார்கரைட் வலியை உணரவில்லை. மாறாக, எட்வர்டு அடெஸ் ஒரு கோமாளி எதிரே நின்று கொண்டு நகைச்சுவையாகப் பேசிக் கொண்டிருக்கிறார் என்று சொல்ல மார்க்கரைட் விழுந்து விழுந்து சிரித்தார்.

அந்த ஊசியை வெளியே எடுத்த போது குத்திய இடத்தில் இருந்து ஒரு துளி இரத்தம் கூட வெளி வரவில்லை என்பது தான் ஆச்சரியம். குத்திய இடத்தில் அடையாளமாக ஒரு கரும்புள்ளி மட்டுமே தெரிந்தது.

பின்னர் எட்வர்டு அடெஸிடம் பேசும் போது, இந்த அற்புதமான சக்திகளைப் பற்றி பால் ப்ரண்டன் கேட்டார். ஒரு காலத்தில் ஒரு கல்லூரியில் மனோதத்துவ விரிவுரையாளராக இருந்த எட்வர்டு அடெஸ் பால் ப்ரண்டனிடம் சொன்னார்: ''உண்மையைச் சொல்லப் போனால் இந்த சக்திகளைப் பற்றி முழுவதும் எனக்குத் தெரியும் என்று என்னால் சொல்ல முடியாது. ஏன் ஆகிறது? எதனால் ஆகிறது? எப்படி ஆகிறது? என்ற கேள்விகளுக்கெல்லாம் பதில் சொல்வது மிகவும் கஷ்டம். ஆனால் ஒவ்வொருவரிடமும் இந்த சக்தி புதைந்து கிடக்கிறது என்பதை மட்டும் என்னால் உறுதியாகச் சொல்ல முடியும். சில பயிற்சிகள் மூலம், சில முறைகள் மூலம் இந்த சக்திகளை நம்மால் பயன்படுத்த முடிகிறது என்பது மட்டும் உண்மை.''

'' இதை உணர்ந்த போது நான் இந்த சக்திகளைப் பயன்படுத்திக் கொள்ள முடிவு செய்தேன். நான் முன்பே சொன்னது போல ஆரம்பத்தில் என் மனைவியை ஹிப்னாட்டிசத்தில் ஆழ்த்த நிறைய நேரம் தேவைப்பட்டது. அந்த நிறைய நேரத்திலிருந்து இரண்டு நிமிடங்களுக்குள் அவளை ஹிப்னாட்டிசத்தில் ஆழ்த்த முடிந்தது முறையான, தொடர்ந்த பயிற்சியால் தான். ஹிப்னாட்டிசத்தை முழுமையாக ஏற்றுக் கொள்ளும் மனோநிலை உள்ளவர்களை மட்டுமே அதில் ஆழ்த்த முடியும். மேலும் ஹிப்னாடிசம் செய்பவர்களுக்கும் தங்கள் சக்தி மேல் முழு நம்பிக்கை இருந்தால் ஒழிய மற்றவர்களை ஹிப்னாட்டிசம் செய்ய முடியாது.''

பால் ப்ரண்டன் கேட்டார்: ''கண்களைக் கட்டிய பின்பும் அவரால் அந்தப் புத்தகத்தைப் படிக்க முடிந்ததும், உங்கள் செயல்களைக் காண முடிந்ததும் எப்படி?''

எட்வர்டு அடெஸ் சொன்னார்: ''நம் ஐம்புலன்களும் வேலை செய்வது அந்தந்த உறுப்புகளால் தான் என்று நாம் எண்ணினாலும்





நம்முடைய ஆழ்மனம் அந்த உறுப்புகளின் உதவியில்லாமலேயே அதைச் செய்ய முடிகிறது என்பதும் உண்மை தான். அதைத் தான் நீங்களே நேரில் பார்த்தீர்களே! ஆனால் நம் மேலோட்டமான மனதிற்கு அது சாத்தியமாவதில்லை. ஏனென்றால் நம் மேல்மனம் நம்மை மட்டுப்படுத்துகிற எத்தனையோ தவறான நம்பிக்கை களைக் கொண்டுள்ளது. ஆழ்மனதின் ஆதிக்கத்திற்குச் செல்லும் போது அந்த நம்பிக்கைகள் அறுபட்டுப் போகின்றன.''

பால் ப்ரண்டன் கேட்டார்: ''சிலர் ஹிப்னாட்டிசம் செய்யும் போது ஏதாவது சொல்லிக் கொண்டே கைகளை அசைத்து ஹிப்னாட்டிசம் செய்வதை நான் பார்த்திருக்கிறேன். ஆனால், நீங்கள் அதெல்லாம் செய்யவில்லையே, அப்படி எல்லாம் செய்யத் தேவையில்லையா?''

''அது அந்தந்த நபர்களைப் பொறுத்தது. நான் என் உள்ளே உள்ள சக்தியை நம்புகிறேன். பயிற்சி பெற்றுத் தேர்ந்த பின் அவை அவசியமில்லை என்று நான் நினைக்கிறேன்.''

எட்வர்டு அடெஸும், மார்கரைட்டும் சித்தர்கள் அல்ல என்றாலும் மனோவசியம் என்ற ஹிப்னாட்டிச அறிவியல் முறையில் பால் ப்ரண்டனுக்குச் செய்து காட்டிய பல சித்திகள் வியப்பளிக்க வைக்கின்றன அல்லவா?

அடுத்ததாக பால் ப்ரண்டன் சந்தித்த நபர் சென்ற நூற்றாண்டின் ஆரம்பத்தில் உலகமெங்கும் பரபரப்பாகப் பேசப்பட்ட ஒரு பக்கிரி. உடலெல்லாம் ஆணியாலும், கத்தியாலும் பல முறை குத்திக் கொண்டும் பாதிக்கப்படாமல் இருந்தவர். தண்ணீரினுள்ளும், மணலின் உள்ளும் மணிக்கணக்காய் ஒரு நாளுக்கும் மேல் புதைந்து கிடந்து பின் பாதிக்கப்படாமல் மேல் எழுந்தவர். பல சர்ச்சைகளில் பேசப்பட்டவர். ஆனால் அலட்சியமாக ஒதுக்க முடியாத மனிதராக அந்தக் காலத்தில் பலர் கவனத்தையும் கவர்ந்தவர். பால் ப்ரண்டன் அந்தப் பக்கிரியைக் காண ஆவலுடன் சென்றார்.

அந்தப் பக்கிரி யார் தெரியுமா?




அந்தப் பக்கிரி டெஹ்ரா பே.

ருமேனியா, இத்தாலி போன்ற நாடுகளின் அரசர்களும், முசோலினி போன்ற சர்வாதிகாரிகளும் பல முறை தங்கள் இருப்பிடங்களுக்கு அழைத்துப் பேசிய பெருமையுடைவர் அந்தப் பக்கிரி. பலருடைய விமரிசனங்களுக்கு ஆளான போதும் தன் அபூர்வ சக்திகளின் வெளிப்பாடுகளை ஆராய விரும்பியவர்களைத் தட்டிக் கழிக்காதவர் அவர். இந்தியாவில் பல யோகிகளின் சக்திகளையும் ஆப்பிரிக்காவில் சில மனிதர்களின் சக்தியையும் நேரடியாகக் கண்டிருந்த பால் ப்ரண்டனுக்கு டெஹ்ரா பே செய்து காட்டியதாகக் கேள்விப்பட்ட தகவல்கள் சந்தேகத்தை ஏற்படுத்தவில்லை. முறையாக யோக சக்திகளைப் பயின்றவர்களுக்கு முடியாதது தான் என்ன?

பால் ப்ரண்டன் நேரில் சென்று பார்த்த அந்தப் பக்கிரி வித்தியாசமானவராகத் தெரிந்தார். தாடியுடன் இருந்த அவர் சராசரிக்கும் குறைவான உயரமானவராகவே இருந்தார். சில சமயம் அரபுகளின் பாரம்பரியமான உடை மற்றும் தலைக் கவசம் அணியும் அந்தப் பக்கிரி, சில சமயம் ஐரோப்பியர்களின் உடை மற்றும் தொப்பியுடன் காணப்பட்டார். விடாமல் சிகரெட் பிடிப்பவராகவும் இருந்தார். ஒரு மனிதரை முழுமையாக அறிய அவரின் வாழ்க்கையை ஆராய்ந்தால் போதும் என்று நினைத்த பால் ப்ரண்டன், கூர்மையான பார்வை, அமைதியான தன்மை கொண்டிருந்த அந்தப் பக்கிரியிடம் அவரைப் பற்றிச் சொல்லும்படி கேட்க அவர் சொன்னார்: "நான் 1897 -இல் நைல் நதிக்கரையோரம் இருந்த டேண்டா என்ற சிறிய நகரத்தில்





பிறந்தேன். என்னைப் பிரசவித்த உடனேயே என் தாய் இறந்து விட்டாள். என் தந்தையும் சக்தி வாய்ந்த பக்கிரிகளிடம் தொடர்பு கொண்டிருந்ததால் இளமையிலேயே நான் இந்த அற்புத சக்திகளுக்கு இணக்கமான சூழ்நிலையிலேயே வளர்ந்தேன். என் தந்தையும் சில பக்கிரிகளும் தான் என் ஆசிரியர்களாக இருந்தார்கள். நான் தேவையான பயிற்சிகளையும், ஞானத்தையும் அவர்களிடம் இருந்து பெற்றேன். அப்போது உள்நாட்டு அமைதியில்லாத சூழ்நிலை காரணமாக நான், என் தந்தை, ஓர் ஆசிரியர் மூவருமாக துருக்கிக்குச் சென்று கான்ஸ்டாண்டிநோபிள் நகரத்தில் வசித்தோம்.

அங்கு நான் நவீனக் கல்வி கற்றேன். மருத்துவம் படித்து டாக்டரானேன். அந்தக் கல்வி எனக்கு மிக உபயோகமாக இருந்தது. என்னுடைய அபூர்வ சக்திகளை நானே விஞ்ஞான ஆராய்ச்சிக்கு உட்படுத்திக் கொள்ள எனக்கு மருத்துவக் கல்வி பெரும் உதவியாக இருந்தது. நான் கிரீசில் மருத்துவமனை ஒன்றை ஆரம்பித்து என் சுய ஆராய்ச்சிகளை அங்கே தொடர்ந்தேன்.

மிகக் குறுகிய காலத்தில் அங்கு நான் செய்து காட்ட முடிந்த அற்புதம், நான் பெற்ற சக்திக்கு ஒரு நல்ல எடுத்துக் காட்டாக இருந்தது. 28 நாட்கள் மண்ணுக்கு அடியில் புதைந்து கிடக்க தீர்மானித்த போது அங்குள்ள பாதிரியார்கள் கடுமையாக அதற்கு எதிர்ப்புத் தெரிவித்தார்கள். அரசாங்கத்திடம் சொல்லித் தடுத்து நிறுத்தப் பார்த்தார்கள். கிறிஸ்து உயிர்த்தெழுவது போல் நான் செய்து காட்ட நினைப்பது என்று எண்ணினார்கள் போல இருந்தது. ஆனால் அரசாங்கம் டாக்டரான எனக்கு, நான் செய்யப் போவதன் அபாயத் தன்மையை விளக்க வேண்டியதில்லை என்று சொல்லி என்னைத் தடுத்து நிறுத்த முற்படவில்லை. நான் டாக்டராக இருந்தது அங்கு மட்டுமல்லாமல் மற்ற இடங்களிலும் நான் இது போன்ற நிகழ்வுகளைச் செய்து காட்ட உதவியது. நான் 28 நாட்கள் மண்ணில் புதைந்து கிடந்து பின் வெற்றிகரமாக வெளியே வந்தேன்.

நான் பல்கேரியா, செர்பியா, இத்தாலி ஆகிய நாடுகளுக்குச் சென்று சில நிகழ்ச்சிகளைச் செய்து காட்டினேன். இத்தாலியில் பல விஞ்ஞானிகள் முன்னிலையில் அவர்கள் பரிசோதனை செய்யவும்

சம்மதித்து ஒரு நிகழ்ச்சியைச் செய்து காட்டினேன். காரீயத்தால் ஆன சவப்பெட்டியில் படுத்துக் கொண்டு என் உடல் எல்லாம் மண்ணால் மூடி, அந்தச் சவப்பெட்டியை ஆணிகளால் அடித்து மூடி, ஒரு நீச்சல் குளத்தின் அடியில் அந்த சவப்பெட்டியை இறக்கினார்கள். ஆனால் அரை மணி நேரத்தில் போலீசார் வந்து அந்த நிகழ்ச்சியைத் தடை செய்து என்னை வெளியே எடுத்து விட்டார்கள். ஆனால் அரை மணி நேரம் நான் அந்தச் சவப்பெட்டியில் பாதிக்கப்படாமல் இருந்தேன்.

பின் பிரான்ஸ் நாட்டிற்குச் சென்று அதே நிகழ்ச்சியைத் தொடரத் தீர்மானித்தேன். அங்குள்ள போலீசாரிடம் முன்பே, நான் டாக்டர் என்ற ஆதாரத்தைக் காண்பித்து அனுமதி பெற்றேன். அவர்கள் அனுமதி தந்ததோடு நான் பொது மக்களை ஏமாற்றி விடக்கூடாது என்பதற்காகத் தண்ணீருக்குள் இருந்த என் சவப்பெட்டியை 24 மணி நேரமும் வெளியே இருந்து காவல் காத்தார்கள். 24 மணி நேரம் கழித்து அவர்கள் சவப்பெட்டியைத் திறந்த போது நான் உயிருடன் வெளியே வந்தேன்'' என்ற டெஹ்ரா பே அந்த நிகழ்ச்சியின் புகைப்படங்களையும் பால் ப்ரண்டனிடம் காட்டினார்.

டெஹ்ரா பே தொடர்ந்தார். ''நீங்கள் இந்தியாவிலும் இது போன்ற நிகழ்ச்சிகள் நடந்துள்ளதாக உங்கள் நூலில் தெரிவித்து இருந்தீர்கள். ஆனால் பல இடங்களில் இது போன்ற நிகழ்வுகளில் ஏமாற்று வேலை நடைபெறுவதாகப் பலரும் குற்றம் சாட்டினார்கள். சில போலி யோகிகளும் பக்கிரிகளும் மண்ணில் புதைக்கப்படும் போது மூச்சு விட உதவுகிற ரகசிய சுரங்கப் பாதைகளை உருவாக்கி ஏமாற்றுகிறார்கள் என்ற விமரிசனம் பல இடங்களில் வருவதை நான் கேள்விப்பட்டுள்ளேன். பிரான்சில் நடந்த அந்த நிகழ்ச்சியில் தண்ணீருக்குள் அப்படி எந்த ரகசியப் பாதையையும் உருவாக்க வாய்ப்பே இல்லை என்பதாலும் போலீஸ் மற்றும் பொதுமக்கள் தொடர்ந்து கண்காணித்திருந்தனர் என்பதாலும் பல விமரிசகர்களும், சந்தேகத்தோடு ஆரம்பத்தில் என்னைப் பார்த்தவர்களும் என்னை முழுமையாக நம்பியதோடு பாராட்டவும் செய்தார்கள்.





இந்த நிகழ்ச்சி பத்திரிகைகளில் வெளி வந்த பிறகு ஸ்பெயின் நாட்டின் அரசி, அவர்கள் நாட்டிற்கு வர எனக்கு அழைப்பு விடுத்தார். நான் இதையெல்லாம் பெருமைக்குச் சொல்லவில்லை. உண்மையான சித்தர்களும், யோகிகளும், பக்கிரிகளும் இது போன்ற வெளிப்பகட்டுகளில் ஆர்வம் கொள்வதில்லை. விருப்பு வெறுப்பில்லாமல் தாமரை இலைத் தண்ணீர் போல வாழ்வது தான் அவர்கள் குறிக்கோள். ஐரோப்பிய சொகுசு வாழ்க்கையில் நான் வாழ்ந்தாலும் உள்ளூர இந்த உண்மையை நான் உணர்ந்தே இருந்தேன். மேலும் பல பக்கிரிகள் மற்றவர்களின் பரிசோதனைகளுக்கு உட்பட மறுக்கிறார்கள். தங்கள் இடத்தை விட்டு வேறு இடங்களுக்குச் செல்ல மறுக்கிறார்கள். அவர்கள் மேலை நாடுகளின் கல்வியையும் ஏற்றுக் கொள்வதில்லை. நான் இந்த நிலையில் இருந்து மாறுபட நினைத்தே இந்த மேற்படிப்புகளைப் படித்து, இந்த அதீத சக்திகளையும் வெளிப்படுத்தி, பலர் என்னைப் பரிசோதனை செய்யச் சம்மதித்தேன். நான் செய்து காட்டியதெல்லாம் இயற்கையின் விதிக்கு உட்பட்டவையே. அதில் எனக்கு ஆழ்ந்த ஞானம் இருந்ததால் எனக்குப் பயமும் சந்தேகமும் இருக்கவில்லை. முக்கியமாகப் பல டாக்டர்கள் நான் செய்து காட்டிய நிகழ்ச்சிகளின் பின் அதிக ஆர்வம் காட்டினார்கள்.''

அந்தப் பக்கிரி சொன்னதை எல்லாம் பால் ப்ரண்டன் வியப்புடன் கேட்டுக் கொண்டிருந்தார். அதீத சக்திகளை இந்தியாவில் பார்த்தும் கேள்விப்பட்டும் இருந்த பால் ப்ரண்டனுக்கு இது போன்ற அதீத சக்திகள் எல்லாம் நடக்க முடியாத அதிசயங்கள் அல்ல என்ற நம்பிக்கை இருந்தது. ஆனால் மேலை நாடுகளின் படிப்புடன் சித்தர்களின் சக்தியையும் பெற்றிருந்த ஒரு மனிதரைப் பால் ப்ரண்டன் சந்திப்பது அது தான் முதல் முறை. அது தான் அவருக்குப் பெரும் சுவாரசியத்தை அந்த மனிதர் மேல் ஏற்படுத்தி இருந்தது.

பால் ப்ரண்டன் டெஹ்ரா பேயிடம் கேட்டார். ''நானும் இந்த சக்திகளில் ஆர்வம் காட்டும் அறிஞர்களையும் டாக்டர்களையும் அழைத்து வருகிறேன். எங்கள் முன் நீங்கள் உங்கள் சக்திகளை வெளிப்படுத்திக் காட்டுவீர்களா?'' ஆர்வத்துடன் கேட்ட பால் ப்ரண்டனிடம் டெஹ்ரா பே சம்மதித்தார்.



# மருத்துவர்கள் முன்னால் மனோசக்தி சாகசங்கள்

அறிஞர்கள் மற்றும் மருத்துவர்கள் முன் தன் சக்திகளை வெளிக்காட்ட டெஹ்ரா பே சம்மதித்தவுடன் பால் ப்ரண்டன் சில மருத்துவர்களையும், சில அறிஞர்களையும் அழைத்துப் பேசி அவர்கள் கண்காணிப்பில் ஒரு பொது நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்தார்.

அந்த நிகழ்ச்சிக்கு டெஹ்ரா பே அரபு உடையில் இரண்டு உதவியாளர்களுடன் வந்தார். நிகழ்ச்சி நடக்கும் அறையில் ஒரு மேசையில் அவர் பயன்படுத்த இருக்கும் ஆயுதங்கள் வைக்கப்பட்டிருந்தன. கூர்மையான வாள்கள், கத்திகள், அரிவாள்கள், நீண்ட ஊசிகள், உடைந்த கண்ணாடித் துண்டுகள் வைக்கப்பட்டிருந்தன. இன்னொரு மேசையில் நீண்ட கூர்மையான ஆணிகள், சுத்தியல், ஒரு பெரிய கனமான பாறைக்கல், எடை பார்க்கும் கருவி ஆகியவை இருந்தன. ஒரு கூடையில் ஒரு வெள்ளைக் கோழியும், சாம்பல் நிற முயலும் இருந்தன. பெரிய சவப்பட்டி, அதை விடப் பெரிய இன்னொரு பெட்டி ஆகியவையும் அங்கு வைக்கப்பட்டிருந்தன.

முதலில் மருத்துவர்களும், கண்காணிக்க வந்த மற்ற அறிஞர்களும் ஒவ்வொரு பொருளையும் தனித்தனியே பரிசோதித்துப் பார்த்தனர். எல்லாம் உண்மையானவை தானா என்பதை உறுதிப்படுத்திக் கொண்டனர். பின் அவர்கள் முன்னிலையில், தன் சாகசங்களைச் செய்து காட்ட டெஹ்ரா பே ஆரம்பித்தார்.





முதலில் தன் கழுத்தின் பின்புறத்தில் மண்டையின் அடிப்பகுதியில் கை விரல்களால் அழுத்தினார். இன்னொரு கைவிரல்களால் தன் நெற்றிப் பொட்டுகளை அழுத்தியபடி நன்றாக மூச்சை உள்ளே இழுத்த அவர், சில நொடிகளில் ஒருவித மயக்க நிலைக்குப் போய் விட்டார். அவர் கண்கள் மூடின. ஒரு அமானுஷ்யமான சத்தம் அவருள்ளில் இருந்து எழுந்தது. உடல் மரக்கட்டை போல ஆகியது. அப்படியே சாய்ந்த அவரை அவருடைய உதவியாளர்கள் மட்டும் பிடித்திருக்கவில்லை என்றால் கீழே விழுந்திருப்பார்.

ஓர் உதவியாளர் நீண்ட வாள்கள் இரண்டை எடுத்து ஒரு நீளமேசையில் கூர்மையான பகுதிகள் மேலிருக்கும்படி பதித்து வைத்தார். பின் டெஹ்ரா பேயின் இடுப்பு வரை உள்ள உடைகளைக் களைந்து, அப்படியே அந்த வாள்கள் மீது அவரை உதவியாளர்கள் இருவரும் மல்லாக்க படுக்க வைத்தனர். ஒரு வாள் அவருடைய தோள்பட்டைகளுக்கு அடியிலும், இன்னொரு வாள் அவருடைய முட்டிகளுக்கு அடியிலும் இருக்கும்படி படுக்க வைத்திருந்தனர். மருத்துவர்கள் அவருடைய நாடித்துடிப்பைப் பரிசோதித்தனர். நாடித்துடிப்பு அதிகமாய் (130) இருந்தது.

அங்கு வைத்திருந்த பாறையை எடுத்து அங்கிருந்த எடை பார்க்கும் கருவியில் எடை பார்த்தனர். 90 கிலோகிராம் எடை இருந்தது. அதை இருவரும் தூக்கி டெஹ்ரா பேயின் வயிற்றின் மீது வைத்தனர். அவருடைய உதவியாளர்களில் ஒருவன் பெரிய சுத்தியலை எடுத்து அந்தப் பாறையை ஓங்கி ஓங்கி அடிக்க ஆரம்பித்தான். டெஹ்ரா பேயின் உடலோ இரும்பாய் இறுகி இருந்தது. அவர் உடலில் எந்த பெரிய பாதிப்பும் தெரியவில்லை. சிறிது நேரத்தில் அந்த பாறை இரண்டாகப் பிளந்து தரையில் விழுந்தது.

டெஹ்ரா பேயை அவர்கள் எழுப்பி உட்கார வைத்தனர். மருத்துவர்கள் அவர் உடலைப் பரிசோதித்த போது அவர் வயிற்றில் பாறை இருந்து அழுத்திய அறிகுறிகள் தெரிந்தாலும் அவர் முதுகுத் தோலில் எங்குமே வாள் அழுத்திய காயம் தென்படவில்லை. எந்த

வலியாலும் அவர் அவஸ்தைப்பட்டது போலவும் தெரியவில்லை. ஏதோ மலர்ப் படுக்கையில் படுத்து எழுந்தது போல் இருந்த டெஹ்ரா பேயை மருத்துவர்களும், அறிஞர்களும் ஆச்சரியத்துடன் பார்த்தனர். அந்தக் காட்சி, பால் ப்ரண்டனுக்கு இந்தியாவில் உள்ள காசியில் கண்ட சில பரதேசிகளை நினைவுறுத்தியது. கூர்மையான ஆணிகளில் அமர்ந்தும் படுத்தும் எந்தப் பாதிப்பும் இல்லாமல் இருந்த அந்தப் பரதேசிகளை, யோகிகளாய் அவரால் நினைக்க முடியவில்லை என்றாலும் அவர்கள் அந்தச் சமயத்தில் அவரை ஆச்சரியப்படுத்தாமல் இருந்ததில்லை.

அடுத்ததாக, ஒரு மரப்பலகை முழுவதும் ஆணிகளின் கூரிய முனைகள் மேற்பக்கம் நீட்டிக் கொண்டிருக்க, அந்த ஆணிகள் மேல் டெஹ்ரா பேயைப் படுக்க வைத்தார்கள். உதவியாளர்களில் ஒருவன் தாவிக் குதித்து ஆணிகள் மீது படுத்திருந்த அவர் மீது நின்றான். ஒரு கால் அவர் நெஞ்சிலும், ஒரு கால் அவர் வயிற்றிலும் இருந்தன. பார்வையாளர்கள் ஒரு கணம் காணக் கூசி கண்களை மூடினார்கள். ஆனால் அந்த உதவியாளன் கீழே இறங்கிய பின் அவரைச் சோதித்துப் பார்த்த மருத்துவர்கள் அவர் முதுகில் ஆணிகள் எந்தக் காயத்தையும் ஏற்படுத்தவில்லை என்பதை வியப்புடன் கவனித்தனர்.

மயக்க நிலையிலிருந்து மீண்ட டெஹ்ரா பே சில நிமிட ஓய்வுக்குப் பின், தன் உடல், வலிக்கு அப்பாற்பட்டது என்பதை நிரூபிக்க வேறு சில சோதனைகளுக்கும் தன்னை உட்படுத்திக் கொண்டார். மருத்துவர்களைப் பெரிய ஊசிகள் எடுத்துத் தன் கன்னங்களில் குத்தச் சொன்னார். இரு கன்னங்களில் குத்திய ஊசிகள் வாய் வழியே வந்த போதும் அவர் சிறிது கூட முகம் மாறவில்லை. முகத்தில் சில இடங்கள் இது போன்ற ஊடுருவலில் காயம் அடைவதில்லை என்பதை உணர்ந்திருந்த மருத்துவர்களை, டெஹ்ரா பே எங்கு வேண்டுமானாலும் குத்திக் கொள்ளலாம் என்று அனுமதித்தார்.

அவருடைய தாடையில் பெரிய ஊசிகளைக் குத்தினார்கள். முழு விழிப்பு நிலையில் இருந்த போதும் டெஹ்ரா பே எந்த





வலியும் இல்லாமல் இருந்தார். மருத்துவர்களில் ஒருவர், ஒரு பெரிய கத்தியை அவர் கழுத்தின் முன் பகுதியில் ஒரு அங்குல தூரம் உள்ளே செலுத்திய போதும் அவர் சாதாரணமாக அமர்ந்திருந்தது அனைவரையும் திகைப்படைய வைத்தது. தொடர்ந்து, முகத்திலும் மார்பிலும் உடைந்த கண்ணாடித் துண்டுகளால் கீறிய போதும் அவர் காயமடையாதது மட்டுமல்ல, ஒரு துளி இரத்தம் கூட அவர் உடலில் இருந்து சிந்தவில்லை. அவர் ஏதாவது மருந்து உட்கொண்டிருந்தாரா என்ற சந்தேகத்தில் மருத்துவர்கள் செய்த பரிசோதனைகளிலும் அதற்கான அறிகுறி கிடைக்கவில்லை.

ஒரு மருத்துவர் இரத்தம் வருவதைக் காண வேண்டும் என்று சொன்னார். சம்மதித்த டெஹ்ரா பே அடுத்ததாக அவர் மார்பில் கத்தியால் குத்தி இரத்தத்தை வரவழைத்தார். இரத்தம் அவர் மார்பை நிறைத்த வரை பார்த்த அந்த மருத்துவர், போதும் என்று சொன்ன போது உடனடியாக இரத்தம் வெளி வருவதைத் தன் சக்தியால் டெஹ்ரா பே நிறுத்தினார். அடுத்த பத்தே நிமிடங்களில் அந்த மார்புக் காயம் இருந்த இடம் தெரியாமல் போகுமாறு குணப்படுத்தியும் காட்டிய போது அனைவரும் பிரமித்துப் போயினர். எரியும் கொள்ளியால் அவருடைய கால்களில் பாதம் முதல் தொடை வரை சூடு போட்டனர். அதிலும் மனிதர் எந்த விதத்திலும் பாதிக்கப்படவில்லை. சுமார் 25 நிமிடங்கள் அப்படித் தன் முழுக் கட்டுப்பாட்டில் உடலை வைத்திருந்த அவர் இயல்பு நிலைக்கு வந்த பின்னர் சொன்னார்: "நான் முன்கூட்டியே தயார் நிலையில் இல்லாத நேரத்தில் எதிர்பாராதவிதமாய் என்னைக் கத்தியால் சிறிது கீறினாலும் வலி தாங்காமல் கத்தி விடுவேன்."

அடுத்ததாக அவர் கோழி, முயல் இரண்டையும் தனித்தனியாக முற்றிலும் நகர சக்தியற்றதாக்கிக் காட்டினார். உயிர் உள்ளது என்பதற்கு அறிகுறியாக அவற்றின் கண்கள் அசைந்தனவே தவிர, மேசையின் மீது இருந்த அவற்றால் வேறெந்த விதத்திலும் நகர முடியவில்லை. பின் சிறிது நேரம் கழித்து அவர் லேசாகத் தட்டிக் கொடுத்த பின்னர் தான் அவை அங்குமிங்கும் ஆனந்தமாக ஓடின.

பின் டெஹ்ரா பே உயிருடன் சமாதி ஆகிக் காட்டும் பரி சோதனையில் தன்னை உட்படுத்திக் கொண்டார். சமாதியான பின்

முன்கூட்டியே தெரிவித்த நேரத்தில் மீண்டும் உயிர்பெற்றுக் காட்டுவதாகச் சொன்னார். 28 நாட்கள் மண்ணில் புதைந்ததாக அவர் சொல்லி இருந்தாலும், நேரில் பார்த்தவர் என பால் ப்ரண்டன் திரட்டிய குழுவில் யாரும் இல்லை என்பதால் அவர்கள் நேரில் காண ஆவலாக இருந்தனர். ஒன்றரை மணி நேரம் அந்த இடத்தில் சமாதியாகி விடுவதாகவும், பின் ஐந்து நிமிடத்தில் உயிருடன் திரும்புவதாகவும் அவர் உறுதியளித்தார்.

முன்பு மயக்க நிலைக்குச் சென்றது போல முதலில் தன் கழுத்தின் பின்புறத்தில் மண்டையின் அடிப்பகுதியில் கை விரல்களால் அழுத்தி, இன்னொரு கைவிரல்களால் தன் நெற்றிப் பொட்டுகளை அழுத்தி, பின் நன்றாக மூச்சை உள்ளே இழுத்த அவர், சில நொடிகளில் உயிரற்ற பிணம் போல சாய, அவருடைய உதவியாளர்கள் அவரைப் பிடித்துக் கொண்டனர். அவர் மூச்சு நின்றது. இரத்த ஓட்டமும் நின்றது. இதை அங்கிருந்த மருத்துவர்கள் உறுதி செய்தனர். பின் அவர் மூக்கிலும், காதுகளிலும் பஞ்சை அடைத்து ஒரு சவப்பெட்டியில் கிடத்தினார்கள். சவப்பெட்டி உண்மையானது தானா, இல்லை ஏதாவது ரகசியக் கதவு இருக்கிறதா என்பதையும் அவர்கள் முன்பே பார்த்து வைத்திருந்தனர். அவரை அதில் கிடத்திய பின், அந்தச் சவப்பெட்டியைச் சிவப்பு மணலால் நிரப்பி ஆணி அடித்து மூடினார்கள். இன்னொரு பெரிய பெட்டியில் சவப்பெட்டியை வைத்து அதையும் மண்ணால் நிரப்பி மூடினார்கள். இது நடைபெற்ற இடம் கெய்ரோவில் உள்ள அடுக்குமாடிக் கட்டடத்தின் மாடியில் உள்ள ஒரு பெரிய வீட்டில் என்பதால் இரகசியச் சுரங்கப்பாதை தரையில் இருக்க வழியில்லை என்றாலும் அதையும் ஒரு முறை பரிசோதித்து அங்குள்ள அறிஞர்கள் திருப்தி அடைந்தார்கள்.

ஒன்றரை மணி நேரம் அனைவரின் பார்வையும் அந்தத் தற்காலிக சமாதிப் பெட்டியில் தான் இருந்தது. ஒன்றரை மணி நேரம் கழிந்த பின் அந்தப் பெட்டி திறக்கப்பட்டு மணல் எடுக்கப்பட்டது. உள்ளிருந்த சவப்பெட்டி எடுக்கப்பட்டு ஆணிகளைக் களைந்து அதையும் திறந்தனர். பின் அவரை எடுத்து ஒரு நாற்காலியில் உட்கார வைத்தனர். அவர் முன்பே கூறியபடி, சில நிமிடங்களில்





அவர் கண்கள் அசைந்தன, மூச்சு விடவும் ஆரம்பித்தார். தனது ஆழ்ந்த சமாதி உறக்கம் புத்துணர்ச்சி தரக்கூடியதாக இருந்தது என்றும், உடல் முன்பே தன்னால் குறிக்கப்பட்ட சரியான நேரத்தில் மறுபடி இயங்க ஆரம்பித்தது என்றும் கூறினார். பால் ப்ரண்டனும், அங்கு கூடியிருந்த மருத்துவர்கள் மற்றும் அறிஞர்களும், பார்வையாளர்களும் மனிதன் நினைத்தால் என்ன எல்லாம், செய்ய முடியும் என்பதற்கான ஒரு சில உதாரணங்களிலேயே உணர்ந்த சிலிர்ப்பில் இருந்தனர்.

பின்னர் ஒரு நாள் அவரைப் பால் ப்ரண்டன் சந்தித்த போது மனித சக்தி எல்லையற்றது என்பதை இந்தியா மற்றும் ஆப்பிரிக்க நாடுகளில் பல காலமாக அறிந்திருந்ததுடன் அதில் கற்பனைக்கும் எட்டாத அளவு மூன்னோர்கள் தேர்ச்சி பெற்றிருந்தனர் என்றும் கூறினார். இதையெல்லாம் வைத்துப் பணமாக்கும் எண்ணம் அவர்களுக்கு ஏற்பட்டதில்லை என்றும், தான் விரும்பா விட்டாலும் இதை ஒரு வியாபாரம் போலச் செய்வதற்குத் தான் வருத்தப்படுவதாகவும் டெஹ்ரா பே தெரிவித்தார். “ உண்மையில் இது ஒரு விஞ்ஞானம். இதில் நான் பெரிய விஞ்ஞானியாக ஆசைப்பட்டேன். ஆனால் உலகம் என்னை வியாபாரியாக்கி விட்டது.”

ஆனாலும் பால் ப்ரண்டனுக்கு டெஹ்ரா பே மீது ஒரு தனி மரியாதை ஏற்பட்டது. இது போன்ற சித்திகள் பெற்ற ஒரு சிலர் தங்களை மிக உயர்ந்தவர்களாகக் காட்டிக் கொள்கையில் இது எல்லாம் மனிதனால் முடிந்தவையே என்றும் தகுந்த பயிற்சியாலும், மன உறுதியாலும் ஒருவர் பெற்று விட முடியும் என்றும் சொல்ல முடிந்த அடக்கம் எத்தனை பேருக்கு வரும் என்ற வியப்பு அவர் மனதில் ஏற்பட்டிருந்தது. பால் ப்ரண்டன் அவரைக் கேட்டார். “இந்த அற்புதங்களை எப்படிச் செய்கிறீர்கள் என்று விளக்க முடியுமா?”



# அற்புதங்களின் அறிவியல் விளக்கம்



"இந்த அற்புதங்களை எப்படிச் செய்கிறீர்கள் என்று விளக்க முடியுமா?"

இந்தக் கேள்விக்கு உண்மையான விளக்கத்தைச் சொல்ல முன் வருபவர்கள் வெகு சிலரே. விளக்கி விட்டால் தங்களைக் குறித்து அடுத்தவர்கள் வைத்திருக்கும் அதீத மதிப்பு குறைந்து விடும் என்று நினைப்பது இயல்பே. ஆனால் டெஹ்ரா பே அப்படி நினைக்காமல் பால் ப்ரண்டனிடம் விளக்க முன் வந்தார்.

"எல்லாவற்றிற்கும் ஆரம்பம், நமக்குள்ளே இருக்கும் பிரம்மாண்டமான சக்தியை நாம் கண்டு கொள்வதே. அதைக் கண்டு கொள்ளும் வரை அறியாமை என்ற சங்கிலியால் கட்டுண்டே இருக்க நேரிடும். கண்டு கொண்டால் மட்டுமே ஆழ்மன சக்திகளையும், மற்ற பெரிய சக்திகளையும் பயன்படுத்த முடியும். நான் செய்து காட்டியவற்றைச் சிலர் கண்கட்டு வித்தை என்று நினைக்கலாம், அல்லது அமானுஷ்ய சக்தியைப் பெற்றிருக்கிறேன் என்று நினைக்கலாம். ஆனால் இந்த இரண்டு கருத்துகளும் சரியல்ல. நான் செய்த அனைத்துமே இயற்கை விதிகளுக்கு உட்பட்டதே. அறிவியல் உண்மையைச் சார்ந்ததே."

"மற்றவர்களுக்கு அற்புதமாகத் தோன்றும் இந்தச் செயல்களை நான் செய்ய இரண்டு விஷயங்கள் உதவுகின்றன. ஒன்று, உடலின் சில நாடி நரம்பு மையங்களைப் பற்றி அறிந்து அவற்றில் அழுத்தம் தருவது. இரண்டாவது, நாக்கை உள்ளிழுத்துக்





கொண்டு உணர்வற்று ஆழ்மயக்க நிலைக்கு என்னால் போக முடிவது. இந்த இரண்டையும் செய்யத் தவறினால் என்னாலும் வலியைப் பொறுத்துக் கொள்ள முடியாது. இதில் ஆன்மீகம் எதுவும் கிடையாது. ஆன்மீகம் என்று நான் ஏதாவது சொல்ல வேண்டுமானால் இதையெல்லாம் செய்யும் போது பற்றுதல் இல்லாத நிலையில் நான் இருப்பதை வேண்டுமானால் சொல்லிக் கொள்ளலாம். மற்றபடி இதில் ஆன்மீகமோ, மந்திரவாதமோ கிடையாது."

பால் ப்ரண்டனுக்கு அவர் வெளிப்படையாக ஒத்துக் கொண்டு விளக்கிய விதம் அவர் மேல் இருந்த மரியாதையை, அதிகப்படுத்தியது. அவர் கேட்டார்: "அந்த இரண்டு அம்சங் களையும் விளக்கிச் சொல்ல முடியுமா?"

டெஹ்ரா பே சொன்னார்: "நரம்புகள் மூலமாகவே வலி மூளைக்கு உணர்த்தப்படுகிறது. அவற்றின் சில சூட்சும மையங்களை அறிந்து விரல் அழுத்தத்தினால் அந்த மூளைக்கு இரத்த ஓட்டம் செல்லத் தடை செய்தால் அந்த நரம்பு மையங்கள் அனஸ்தீஷியா (மயக்க மருந்து) கொடுத்தது போல உணர்விழந்து போகும். வலி தெரியாது. ஆனால் இதைக் கடும் பயிற்சி மூலம் தான் கற்றுத் தேற முடியும். அப்படியில்லாமல் அரைகுறையாகத் தெரிந்து கொண்டு இதை யாராவது முயற்சித்தால் உயிருக்கு ஆபத்தாகவே முடியும். இதைச் செய்யும் போது மன ஒருமைப்பாடு இருக்க வேண்டும். அதே நேரத்தில் இறுக்கமற்ற முறையில் தசைகளையும் நரம்புகளையும் வைத்திருக்க வேண்டும். நாக்கை உள்ளிழுத்து ஆழ்மயக்க நிலைக்குப் போவதற்கும் முறையான பயிற்சிகள் செய்து தேர்ந்திருக்க வேண்டும். இதில் இந்திய யோகிகள் கைதேர்ந்தவர்கள்."

பால் ப்ரண்டன் சுவரசியத்துடன் கேட்டார்: "ஆழ்மயக்க நிலைக்குச் சென்ற பிறகு என்ன ஆகிறது?"

"ஆழ்மயக்க நிலைக்குச் செல்லும் முன்பே எந்த நேரத்தில் திரும்ப சுயநினைவுக்கு வரவேண்டும் என்பதனை ஆழ்மனதில்

முன்பே குறித்துக் கொண்டு விட வேண்டும். குறித்த காலத்தில் ஆழ்மனம் தானாக இயல்பு நிலைக்குக் கொண்டு வந்து விடும். மேல்மனம் உறங்கி விட்டாலும் ஆழ்மனம் எப்போதும் உறங்குவதில்லை. இது பெரிய விஷயமல்ல. மறு நாள் இத்தனை மணிக்கு எழ வேண்டும் என்று முடிவு செய்து, அப்படியே அலாரம் இல்லாமல் விழித்தெழுவது பலருக்கும் முடிகிறது. அதே போல் தூக்கத்தில் நடக்கும் வியாதி இருப்பவர்கள் அந்த உறக்க நிலையிலும் எத்தனையோ வேலைகளைத் தங்களை அறியாமலேயே செய்வதையும் நாம் சர்வ சகஜமாகப் பார்க்கிறோம். நரம்பு மையங்களுக்கு அழுத்தம் கொடுத்து ஆழ்மயக்க நிலைக்குச் சென்றவுடன் உடலில் இரத்த ஓட்டம் நின்று விடுகிறது. சுருக்கமாக, உடலின் எல்லா இயக்கமும் ஸ்தம்பித்து நின்று விடுகிறது.''

''பல முறை குத்திய பிறகும் உங்கள் உடலில் காயமோ, காயத்தின் தழும்போ இல்லாமல் இருந்தது எப்படி?''

''அதை நான் இரு விதங்களில் சாதிக்கிறேன். முதலில் என் இரத்த ஓட்டத்தைத் தற்காலிகமாக அதிகரிக்க வைக்கிறேன். அதனால் இதயத்துடிப்பு அதிகமாகிறது என்றாலும் அது தாக்குப் பிடிக்கும் அளவிலேயே இருக்கும்படி பார்த்துக் கொள்கிறேன். இரத்த ஓட்டம் அத்தனை வேகமாகச் செல்வதால் காயங்கள் என் மன உறுதியின் தன்மையிலேயே குணமாகி விடுகின்றன. அடுத்ததாக இரத்தத்தின் சூட்டை நான் அதிகமாக்குகிறேன். அந்தச் சூட்டில் ஏதாவது கிருமிகள் காயங்களில் நுழைந்திருந்தாலும் அவை உடனடியாக அழிந்தும் போகின்றன. இந்த இரண்டையும் செய்வதால் சாதாரண காயங்கள் உடனடியாகவும், ஆழமான காயங்கள் சில மணிகளுக்குள்ளும் ஆறி விடுகின்றன.''

டெஹ்ரா பே எல்லாவற்றையும் மிகவும் எளிமையாக விளக்கிய விதம் பால் ப்ரண்டனை வியப்பில் ஆழ்த்தியது. அவர் அடுத்தபடியாக அவரை மிகவும் பிரமிக்க வைத்த முக்கிய நிகழ்ச்சி பற்றிக் கேட்டார்: ''உயிரோடு புதைந்து பல மணிகள் கழித்தும், பல நாட்கள் கழித்தும் பின் பிழைத்தது எப்படி?''





# உயிரோடு புதைந்து பின் எழுவது எப்படி?



''உயிரோடு புதைந்து பல மணிகள் கழித்தும், பல நாட்கள் கழித்தும் பின் பிழைத்தது எப்படி?'' என்ற கேள்விக்கு டெஹ்ரா பே விரிவான விளக்கம் தந்தார்.

''ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பே இந்தியாவைப் போல எகிப்திலும் இது போன்ற சாகசங்கள் சர்வ சாதாரணமாகச் செய்யப்பட்டன. அந்த காலத்தில் இன்றைய காலத்தைப் போல பணம், பகட்டு, பொருள் மீது மக்களின் கவனம் அதிகமாய்ச் செல்ல ஆரம்பித்திருக்கவில்லை. ஆத்மஞானத்தை அனைவரும் நம்பினார்கள். அதனால் இது போன்ற சாகசங்கள் குறித்து அவர்கள் தெளிவாக அறிந்திருந்தார்கள்.

ஆத்மா, உடலல்ல என்பதையும் அது உடலை விட்டும் இருக்கக் கூடிய சக்தி என்பதையும் உடலையும், விழிப்புணர்வையும் இயக்கும் சக்தி என்பதையும் அனைவரும் நம்பினார்கள். உடல் அழிந்து அதன் வேதியியல் அணுக்கள் கார்பன், பொட்டாசியம், ஹைட்ரஜன், ஆக்ஸிஜன் ஆகிய வடிவங்களில் திரும்ப மண்ணிற்கே திரும்பச் செல்லும் போது, அதை இயக்கிய ஆன்ம சக்தி, தன் மூல சக்தியாகிய நாம் முழுவதும் அறியாத, என்றும் நிலைத்திருக்கக் கூடிய, அந்தப் பெரும் சக்திக்கே திரும்புகிறது. இதை லௌகீகத்தில் மூழ்கி விட்ட இன்றைய மனிதர்கள் உணரத் தவறி விடுகிறார்கள்.

என்னுடைய தந்தை இது போன்ற செயல்களுக்காக, என்னை, நான் நான்கு மாதக் குழந்தையாக இருந்த போதிலிருந்தே தயார்ப்படுத்த ஆரம்பித்து விட்டார். அதனால் இன்று என் விருப்பப்படி பல நாட்கள் மண்ணில் புதைந்திருந்து எந்த பாதிப்பும் அடையாமல் திரும்புவது முடிகிறது.''

பால் ப்ரண்டன் சொன்னார்: ''ஆனால் சந்தேகப்படுபவர்கள் கேட்கிறார்கள்- ''மனிதனால் மூச்சு விடாமல் மண்ணுக்கடியில் வாழ்வது எப்படி முடிகிறது? என்று''

டெஹ்ரா பே பல உதாரணங்களைச் சொன்னார். ''கிழக்கு ஆப்பிரிக்க நாடுகளை ஒட்டிய கடல்களில் முத்து எடுப்பவர்கள் கிட்டத்தட்ட எட்டு அல்லது ஒன்பது நிமிடங்கள் மூச்சு விடாமல் கடலுக்கடியில் தங்குகிறார்கள். தவளை வேகமாக மூச்சு விடக்கூடியது. ஆனால் அது தண்ணீருக்கடியில் இருக்கையில் நான்கு மணி நேரம் மூச்சு விடாமல் இருக்க முடிகிறது. வெளியே இருக்க முடிந்த கடல் ஆமைகளும் அப்படியே சில மணி நேரங்கள் கடலுக்கடியில் இருக்க முடிகிறது. ஆனால் கடல் ஆமையைக் கட்டாயப்படுத்தித் தண்ணீருக்குள் அமுத்தி வைத்தால் அது மூச்சு முட்டி இறந்து போகும். காரணம், கடல் ஆமை தண்ணீருக்குள் மூச்சு விடாமல் இருக்க முன்னமே தன்னைத் தயார் செய்து கொண்ட பிறகு தான் அப்படி மணிக்கணக்கில் இருக்க முடியும்.''





அப்படியே முதலைகளும் வவ்வால்களும் கூட மூச்சு விடாமல் நீண்ட காலத்திற்கு இயக்கமில்லாமல் இருக்க முடிவதை டெஹ்ரா பே விளக்கிய போது பால் ப்ரண்டனுக்கு வியப்பாக இருந்தது.

டெஹ்ரா பே கேட்டார்: ''விலங்குகளாலேயே முடிகிற விஷயம் மனிதனால் ஏன் முயன்றால் முடியாது? அதை எங்களைப் போன்ற பக்கிரிகள் செய்தும் காட்டி நிரூபித்து இருக்கிறோம். ஆனால் கடல் ஆமையைச் சொன்னது போல நானும் முன்னமே தயாராகி அரை மயக்க நிலைக்குச் சென்றால் தான் அப்படிப் புதைந்து கிடக்க முடியும். இல்லா விட்டால் நானும் பத்து நிமிடங்களில் மூச்சுமுட்டிச் செத்து விடுவேன்.''

பால் ப்ரண்டன் சற்று யோசித்து விட்டு ஒரு பொருள் பொதிந்த கேள்வியைக் கேட்டார். '' அப்படி புதைந்து கிடக்கையில் உங்கள் ஆத்மா உடலை விட்டு வெளியேறுகிறதா? அப்படி வெளியேறி நீங்கள் சொன்னது போல மூலமான பெரும் சக்தியுடன் கலக்கிறதா? அந்தச் சமயத்தில் என்ன தான் நடக்கிறது?''

டெஹ்ரா பே நேர்மையுடன், அந்த நேரத்தில் நிகழ்வது என்ன என்பதைத் தன்னால் சொல்ல முடியவில்லை என்பதை ஒத்துக் கொண்டார். '' புதைந்த நிலையில் மிக ஆழமான உறக்கத்தில் இருப்பதைப் போல இருக்கிறோம். நினைவு திரும்பும் போது எதுவுமே நினைவுக்கு வருவதில்லை. அந்த மயக்க நிலையில் ஆன்மா நாமறிய முடியாத பயணங்களை மேற்கொண்டு இருக்கக் கூடும். ஆனால் விழிப்புணர்வு முடக்கப்பட்ட அந்த நிலையில் நடப்பது எதுவும் நினைவுக்கு வந்ததில்லை.''

பல முறை அப்படி மண்ணில் புதைந்த மனிதனாலேயே கூட அந்த மயக்க நிலையில் ஆன்மாவின் செயல்பாடு என்ன என்பதைச் சொல்ல முடியவில்லை என்பது பால் ப்ரண்டனுக்கு ஏமாற்றமாக இருந்தது. அதைப் புரிந்து கொண்ட டெஹ்ரா பே சொன்னார்: ''சில யதார்த்த உண்மைகளை நாம் ஏற்றுக் கொண்டே ஆக வேண்டும். ஆனால் ஒன்று மட்டும் உறுதி. கிட்டத்தட்ட மரணத்தைப் போன்ற நிலையில் விலகி மறுபடி அந்த உடலில் ஆன்மா சேர முடிவதே

அது மரணமில்லாதது, நிலையானது என்பதற்கு ஆதாரமாக எனக்குத் தெரிகிறது.''

பால் ப்ரண்டனுக்கு அவருடைய நேர்மை பிடித்திருந்தது. தெரியாததைத் தெரியாது என்று அந்த அளவு சாதனை புரிந்த மனிதரால் சொல்ல முடிந்தது உண்மையிலேயே பாராட்டத்தக்கது என்று எண்ணிக் கொண்டார்.

டெஹ்ரா பே இப்படி உயிரோடு மண்ணில் புதைவதில் இருந்த வெற்றி தோல்விகளையும் மற்ற சாதனையாளர்களையும் உதாரணம் காட்டிச் சொன்னார். ''நான் சிறுவனாக இருந்த போது எங்கள் நகரத்தில் ஒரு பக்கிரி மண்ணில் புதைந்து பல வருடங்கள் கழித்துக் குறிப்பிட்ட நாளில் தன்னை எழுப்பச் சொன்னார். அப்படியே பல வருடங்கள் கழிந்து தோண்டி எடுத்த போதும் அவர் உயிரோடு இருந்தார். ஆனால் பேச்சு சக்தியை மட்டும் இழந்திருந்தார். ஆறு மாத காலம் கழித்து இறந்து போனார். மூச்சு இல்லாமல் சில நாட்கள் இருப்பது விரத சமயத்தில் வயிற்றைப் பட்டினி போடுவது போல உடல் ஆரோக்கியத்திற்கு நல்லது. அப்படி எழும் போது உடலுக்கு அருமையான ஓய்வு கிடைத்திருப்பதால் எத்தனையோ வியாதிகள் கூட குணமாகி இருப்பதைக் கண்டிருக்கிறோம். ஆனால் இப்படி வருடக்கணக்கில் செய்யும் போது சில அபாயங்கள் இருக்கத் தான் செய்கின்றன.''

''எனக்குத் தெரிந்த சையது என்ற 18 வயது பக்கிரி சரியான பயிற்சி பெற்று பல முறை மண்ணில் புதைந்து மறுபடி எழுந்தவன். ஒரு முறை அவன் ஆறு வருடங்கள் மண்ணில் புதைந்து காட்ட முடிவெடுத்து அப்படியே ஒரு பிரத்தியேக சமாதியில் புதைக்கப்பட்டான். அவனுடைய முஸ்லிம் நண்பர்கள், வருடா வருடம் ரம்சான் நோன்பு சமயத்தில் அவன் உடலை எடுத்துப் பார்த்து மறுபடி புதைத்தனர். முதலிரண்டு வருடங்களில் அவன் உடல் நன்றாகவே இருந்தது. மூன்றாம் வருடம் திறந்து பார்க்கையில் அவன் உடல் பூச்சிகளால் அரிக்கப்பட்டிருந்ததைப் பார்த்து அதிர்ச்சி அடைந்தனர்.''

''ஏன் அப்படி ஆயிற்று?'' பால் ப்ரண்டன் கேட்டார்.

''இது போன்ற சாகசங்களில் ஈடுபடும் முன் தகுந்த முன்னேற்பாடுகளை முழுமையாக மேற்கொள்ள வேண்டும். உடலை மென்மையான மெழுகால் பூச வேண்டும். இதனால் இப்படி அரை மயக்க நிலைக்குச் சென்ற உடலில் ஆக்சிஜன் சுத்தமாக இல்லாத போது எந்த மைக்ரோப்களும், பூச்சிகளும் உடலைத் தீண்டாமல் இருக்கும். சவப்பெட்டியில் உள்ள தூசிகளை முழுமையாக அப்புறப்படுத்தி விட வேண்டும். இது போன்ற முன்னேற்பாடுகளை சையது செய்யத் தவறி விட்டான். மூன்றாவது வருடம் எகிப்தில் உள்ள சிறிய சக்தி வாய்ந்த பாம்புகளில் ஏதாவது ஒன்று சவப்பெட்டியில் புகுந்திருக்கலாம். சவப்பெட்டியில் புகுந்த சிறிய பாம்பு சையதின் மூக்கில் நுழைந்திருக்கலாம். அந்த நேரத்தில் சையதின் உடலில் ஆக்சிஜன் சிறிதும் புகாமலிருக்கும் அளவு கட்டுப்பாட்டை வைக்கத் தவறி இருக்கலாம். அதன் விளைவாக் உடல் தன் பாதுகாப்பை இழந்திருக்கலாம். அது புழுக்களும் பூச்சிகளும் படையெடுத்து உடலை உண்ண வழி செய்திருக்கலாம்.''

சிறிது ஏமாந்தாலும் இதில் எப்படிப்பட்ட அபாயங்கள் எல்லாம் உள்ளன என்பதை உணர்ந்த பால் ப்ரண்டன், பிரமிடுகளில் புதைக்கப்பட்டிருந்த மம்மிகளின் உடலைப் பாதுகாத்திருந்த விதத்தையும், அவற்றை மிக உறுதியான கற்களால் மூடியிருந்த விதத்தையும் நினைவுகூர்ந்தார்.

டெஹ்ரா பே சிரித்துக் கொண்டே தொடர்ந்தார். ''நான் புதையுண்டிருந்த சமயங்களில் ரகசிய பைப்கள் வழியாகக் காற்று வரும்படி செய்திருக்கக் கூடும் என்று சந்தேகப்பட்டவர்களின் சந்தேகம் அர்த்தமில்லாதது என்பதை நீங்கள் தற்போது உணர்ந்திருப்பீர்கள் என்று நம்புகிறேன்.''

பிறகு பால் ப்ரண்டன் அவரிடம், இது போன்ற அற்புதங்களைச் செய்யும் சிலர் அதற்கு மத ரீதியாக விளக்கம் அளிப்பது பற்றிக் கேட்டார்.

டெஹ்ரா பே தன் கருத்தை வெளிப்படையாகச் சொன்னார்: ''இது போன்ற சாகசங்கள் உடலியல் அறிவியல் விதிகளுக்கு உட்பட்டுச் செய்யப்படுபவை. இதில் ஆழ்மன சக்தியும் சேரும் போது அற்புதங்களாகத் தோன்றுகின்றன. இதில் மதத்தையோ, மூட நம்பிக்கைகளையோ சேர்த்து விளக்கம் அளிப்பது உண்மை

சார்ந்ததாக இருக்காது. அவர்கள் செய்கின்ற அற்புதங்கள் உண்மையானவை என்றாலும் விளக்கங்கள் மூட நம்பிக்கையை வளர்க்கும் விதங்களில் இருந்து விடுகிறதை நான் அதிகம் பார்க்கிறேன். அவர்களில் சிலர் தாங்களே இதை நம்புகிறார்கள். பலர் மற்றவர்கள் முன்னால் அசாதாரண மனிதர்களாகவும், கடவுளருள் பெற்றவர்களாகவும் காட்டிக் கொள்ள அப்படிச் செய்கிறார்கள். உள்ளதை உள்ளபடியே பார்க்க வேண்டுமே ஒழிய, இதில் கற்பனைகளைச் சேர்ப்பதையும், மூட நம்பிக்கையை வளர்ப்பதையும் நான் ஏற்றுக் கொள்ளவில்லை.''

டெஹ்ரா பே ஆன்மாவையும் ஆழ்மன சக்தியையும் நம்பிய அளவிற்கு மதக்கோட்பாடுகளைப் பெரிதாக நம்பவில்லை. அதில் ஈடுபட்டு உண்மையான தெய்வீக உணர்வுகளை அனுபவித்தவர்கள் ஒருசிலர் இருக்கக்கூடும் என்று ஒத்துக் கொண்ட அவர், தன் ஆராய்ச்சிகளும், பயிற்சிகளும் மதக் கோட்பாடுகளுக்கு அப்பாற்பட்டதாகவே இருந்ததாகச் சொன்னார்.

இப்படியாக டெஹ்ரா பேயிடம் பேசிய போது பால் ப்ரண்டன் கேட்டறிந்தவை எல்லாமே அறிவியல் ரீதியாகவும் அறிவுபூர்வமாகவும் இருந்தன. எந்த இடத்திலும் டெஹ்ரா பே தன்னைத் தெய்வீக மனிதராகச் சொல்லிக் கொள்ளவில்லை என்பதோடு, எதிலும் கற்பனை கலக்காமல் தெரிந்ததை விளக்கமாகச் சொல்லியும், தெரியாததைத் தெரியாது என்று ஒப்புக் கொண்டும் பால் ப்ரண்டன் மதிப்பில் உயர்ந்து போனார்.







# ப்ரண்டன் வியந்த இஸ்லாம்



ஆன்மீகத் தேடலில் எகிப்திற்குச் சென்ற பால் ப்ரண்டன் கெய்ரோ நகரத்தில் தங்கிய நாட்களில் இஸ்லாமியர்களின் தொழுகை முறையால் மிகவும் கவரப்பட்டார். கிறிஸ்துவராக இருந்தாலும் மதங்களுக்கு அப்பாற்பட்ட ஆன்மீக ஞானத்தைத் தேடிய அவருக்கு எல்லா இடங்களில் இருந்தும் கிடைத்த மேன்மையான விஷயங்களை அறியவும், மதிக்கவும் முடிந்தது.

மசூதிகளில் தொழுகை நேரத்தில் பரம தரித்திரனுக்கு அருகில் பெரும் செல்வந்தன் உட்கார்ந்து தொழுவதை அவர் பல இடங்களிலும் சர்வ சாதாரணமாகப் பார்க்க முடிந்தது. புனித குரானின் வாசகங்களை உச்சரித்தபடி அவர்கள் செய்த தொழுகை முறையில் பல்லாண்டு காலமாகப் பின்பற்றப்படும் ஒரே மாதிரியான ஒழுங்கு அவரைக் கவர்ந்தது. தொழுகை என்பது தினசரி வாழ்க்கையில் பின்னிப் பிணைந்த விஷயமாக இருப்பது அவரை வியக்க வைத்தது.

ரயிலில் பயணம் செய்கையில் ப்ளாட்ஃபாரங்களில் கூட, குறிப்பிட்ட நேரமானால் சிறிய பாய்களை விரித்து இறைவனுக்காக ஆறேழு நிமிடங்கள் ஒதுக்க முடிந்த இஸ்லாமியர்களின்

சிரத்தையை அவரால் சர்வ சாதாரணமாகக் காண முடிந்தது. ஒரு மதிய வேளையில் ஓட்டலுக்குச் சாப்பிடப் போன போதும் பரிமாறிக் கொண்டிருந்த சர்வர் தொழுகை நேரமானவுடன் தொழுகையை ஓட்டலிலேயே ஓர் ஓரத்தில் செய்ய ஆரம்பித்ததையும், இன்னொரு சமயம் ஓர் உயர் போலீஸ் அதிகாரியுடன் அவர் பேசிக் கொண்டிருந்த நேரத்தில் அவரது அனுமதி வாங்கிக் கொண்டு அந்த உயர் அதிகாரி தொழுகையை நடத்தியதையும் தன் நூலில் பால் ப்ரண்டன் குறிப்பிடுகிறார்.

தொழுகை என்பது வழிபாட்டுத் தலங்களில் என்று ஒதுக்கப்பட்டு விடாமல் அந்தந்த நேரங்களில் எந்த இடமானாலும் சரி, அந்த இடத்தில் நடத்தப்படும் உறுதியான விஷயமாய் இருப்பது இஸ்லாத்தின் தனித்தன்மையாகப் பால் ப்ரண்டன் கண்டார். கெய்ரோவில் கண்டது போல் லண்டன், நியூயார்க் போன்ற மேலை நாடுகளில் காணமுடியாதென்பதை ஒப்புக் கொண்டார். இந்த வழிபாட்டு ஒழுங்குமுறையும், உறுதிப்பாடும் இஸ்லாத்திடம் இருந்து மற்றவர்கள் கற்றுக் கொள்ள வேண்டியவை என்று அவர் நினைத்தார்.

எகிப்தில் இருந்த நாட்களில் இஸ்லாத்தையும் ஆழ்ந்து படித்த பால் ப்ரண்டன், அவர்களது தொழுகை முறையையும் கற்றுக் கொண்டு கெய்ரோ நகரப் பழமையான மசூதிகளில் தானும் தொழுதார். இறை சக்தி ஒன்றே என்பதில் மாற்றுக் கருத்து இல்லாதிருந்த பால் ப்ரண்டனுக்கு அப்படித் தொழுவதில் எந்தத் தயக்கமும் வரவில்லை.

தன்னைப் பின்பற்றுவோர் மனதில் பெருமையான ஓர் இடத்தைப் பெற முகமது நபி தேவையற்ற அற்புதங்களை நிகழ்த்திக் காட்டவும் முனையவில்லை என்பதனை இஸ்லாத்தைப் பற்றி விரிவாகப் படிக்கையில் அவர் அறிந்தார். அரேபியாவில் இஸ்லாமியர்களுக்கு இழைக்கப்படும் கொடுமைகள் அதிகரிக்கையில் சிலர் அவரிடம் சென்று, 'நீங்கள் ஏதாவது அற்புதம் நிகழ்த்தி நீங்கள் தெய்வத்தன்மை வாய்ந்தவர் என்று நிரூபியுங்கள்'' என்று வற்புறுத்திய போது முகமது நபி வானை





நோக்கி பார்வையைச் செலுத்தியவராய், ''இறைவன் என்னை அற்புதங்கள் நிகழ்த்த அனுப்பவில்லை. நான் அல்லாவின் செய்தியை மனித குலத்திற்குக் கொண்டு வந்திருக்கும் தூதன் மாத்திரமே'' என்று சொன்ன செய்தி அவரை வெகுவாகக் கவர்ந்தது.

இஸ்லாம் பற்றிய தன் சந்தேகங்களைத் தீர்த்துக் கொள்ளவும், மேலும் அறிந்து கொள்ளவும், எகிப்து இஸ்லாமியர்களின் தலைவரும், இஸ்லாமியக் கல்விக்கூடங்களின் தலைமைப் பேரறிஞருமான ஷேக் முஸ்தபா எல் மராகியை சந்தித்துப் பேசினார். இறைவன் ஒருவனே என்ற இஸ்லாத்தின் மிக உறுதியான, முக்கியக் கொள்கையில் ஆரம்பித்து எல்லா முக்கிய அம்சங்களையும் ஷேக் முஸ்தபா விளக்கினார். இறைவனுக்கும் மனிதனுக்கும் இடையே வேறொரு நபர் தேவையில்லை என்பதை இஸ்லாம் நம்புகிறது என்றார் ஷேக் முஸ்தபா.

இஸ்லாம் இறைவனை அறிந்து கொள்ளவும், பிரபஞ்சத்தை அறிந்து கொள்ளவும் அறிவியல் ஆராய்ச்சிகளை ஊக்குவிக்கிறது. திறந்த மனத்துடன் தொடர்ந்து செய்யும் ஆராய்ச்சிகளும், புரிந்து கொள்ளலுமே மூட நம்பிக்கைகளையும், புனிதக் கோட்பாடுகளுக்குத் தங்களுக்குத் தேவைப்படும்படி பொருள் கொள்ளும் போக்கையும், அவ்வப்போது விலக்கி ஒரு மதத்தைக் கலப்படமற்ற புனிதத்துடன் வைத்துக் கொள்ள முடியும் என்று உறுதியாகத் தெரிவித்தார் ஷேக் முஸ்தபா.

அவரிடம் நீண்ட நேரம் உரையாடிய போது பால் ப்ரண்டன், இஸ்லாம் பற்றிய தன் சந்தேகங்களைத் தயக்கமில்லாமல் கேட்டார். அவர் கேட்ட முக்கிய கேள்விகளும் ஷேக் முஸ்தபா சொன்ன பதில்களும் இதோ-

'' ஆத்மாவைப் பற்றி தங்கள் கருத்து என்ன?''

''குரான், ஆத்மா பற்றி எதையும் குறிப்பிடவில்லை. பிற்காலத்தி'' சில இஸ்லாமிய மகான்களும், அறிஞர்களும் சில அறிவுபூர்வமான கருத்துகளைத் தெரிவித்திருக்கின்றனர் என்றாலும், அதைக்

குரானில் சொன்னதாக ஏற்றுக் கொள்ள முடியாது. ஆனால் நியாயத் தீர்ப்பு நாளில், செய்த நன்மைகளுக்கு வெகுமதியும், செய்த தீமைகளுக்குத் தண்டனையும் கிடைப்பது உறுதி என்பதைக் குரான் தெரிவிக்கிறது. ''எவனொருவன் அணு அளவு நன்மை செய்திருந்தாலும் அதற்குத் தகுந்த வெகுமதியைப் பெறுவான். அதே போல அணுவளவு தீமை செய்திருந்தாலும் அதற்கேற்ற தண்டனையை அடைவான் என்று அல்லா கூறுகிறார்.''

''இஸ்லாத்தில் மசூதிகள் முக்கியமா?''

''இல்லை. மக்கள் பிரார்த்திக்கும் இடங்களாகவும், வெள்ளிக் கிழமை அன்று பிரசங்கங்கள் கேட்கச் செல்லும் இடங்களாகவும் அவை இருந்தாலும் இஸ்லாத்தைப் பின்பற்ற மசூதிகள் அத்தியாவசியம் என்று சொல்ல முடியாது. இஸ்லாமியர்கள் எங்கு வேண்டுமானாலும் பிரார்த்தனை செய்ய முடியும். சுத்தமான தரை இருந்தால் போதும். மசூதிகளைக் கட்டுவது பிரார்த்திப்பதில் சகோதரத்துவத்தையும், சமூக ஒற்றுமையையும் வளர்க்கவே. அந்த வகையில் தான் மசூதியில் பிரார்த்திப்பதற்கு முக்கியத்துவம் தரப்படுகிறது.''

''தினமும் ஐந்து முறைத் தொழுகை என்பது அதிகமில்லையா?'' என்று பால் ப்ரண்டன் கேட்ட போது, ஷேக் அப்துல்லா பொறுமையாகப் பதில் சொன்னார்:

''இல்லை. தொழுகைகள் இறைவனைப் பிரார்த்திக்கும் கடமை மட்டுமல்ல, மனிதன் ஆன்மீக முறைப்படி தன்னை நெறிப்படுத்திக் கொள்ள உதவும் அவசியமும் கூட. திரும்பத் திரும்ப இறைவனையும், இறைவனது செய்தியையும் சொல்லும் மனிதன் மனதில் இறைக் குணங்கள் தானாக ஆழப்படுகின்றன. உதாரணத்திற்கு இறைவனிடம் தொடர்ந்து கருணையை வேண்டும் மனிதன் அதன் அவசியத்தை உணர்ந்தவனாக இருப்பதால் தானும் கருணையுள்ளவனாக சிறிது சிறிதாக மாற ஆரம்பிக்கிறான். எனவே தொழுகைக்காகக் குறித்து வைத்திருக்கும் நேரங்களில் தொழுகை செய்வது வற்புறுத்தப்படுகிறது. ஏதாவது அவசர சூழ்நிலை, அந்த நேரத்தில் தொழுகை செய்வதைத் தடுக்குமானால் அந்தச் சூழ்நிலை முடிந்தவுடனேயே தொழுகை செய்ய வேண்டும்.''





''நோய்வாய்ப்பட்டால் என்ன செய்வது?''

''நிற்கவோ, மண்டியிடவோ முடியாத நிலையில் ஒருவன் இருந்தால் பிரார்த்தனையைப் படுத்த நிலையிலேயே கூட செய்யலாம். அவனால் கைகளை நெற்றிப் பொட்டு வரை மடக்க முடிந்தால் கூடப் போதும்.''

''மெக்காவிற்குச் செல்வதன் நோக்கம் என்ன?''

''மசூதிக்குச் செல்வது எப்படி உள்ளூர் சமூக சகோதரத்துவத்தை மேம்படுத்துவதற்கோ அப்படித்தான் மெக்கா செல்வது உலகளாவிய மனிதகுல சகோதரத்துவத்தை மேம்படுத்துவதற்கு. எல்லோரும் இஸ்லாத்தில் சரிசமமானவர்களே. அல்லாவை நம்பி மசூதியில் கூடினாலும் சரி, ஹஜ் யாத்திரையில் கூடினாலும் சரி, அங்கு அவர்கள் சமமாகவே கருதப்படுகிறார்கள். மசூதியிலும் சரி, யாத்திரையிலும் சரி, ஓர் அரசனுக்கருகில் ஒரு பிச்சைக்காரன் பிரார்த்தனை செய்யலாம். எல்லா வேறுபாடுகளையும் ஒதுக்கி வைத்து விட்டு ஒருமித்துப் போகும் இடமாகவும் சந்தர்ப்பமாகவும் கருதப்படுகிறது. இஸ்லாத்தைப் பொறுத்தவரை அவரவர் நற்செயல்களால் மட்டுமே ஒவ்வொருவரும் உயர்ந்தவர்களாகக் கருதப்படுகிறார்கள்''

உண்மையான இஸ்லாம், உண்மையை அறிய ஊக்குவிப்பதாகவும், கண்மூடித்தனமான பின்பற்றுதலைக் கண்டிப்பதாகவும் ஷேக் முஸ்தபா கூறி புனித நூலில் வரும் ஒரு வாசகத்தையும் கூறினார். ''இறைவன் சொன்னதைப் பின்பற்றுங்கள் என்று சொல்லப்படும் போது அவர்கள் நாங்கள் எங்கள் தந்தையர் செய்ததைப் பின்பற்றுகிறோம் என்கிறார்கள். உங்கள் தந்தையரே அறியாதவர்களாக இருந்தால், வழிநடத்தப்படாதவர்களாய் இருந்தால் என்ன செய்வீர்கள்?''

நீண்ட நேரம் தொடர்ந்த அவருடைய விளக்கங்களில் பால் ப்ரண்டனுக்கு, இஸ்லாத்தை வித்தியாசமான புதுமையான கோணங்களில் அறியவும், முன்பு கொண்டிருந்த சில தவறான அபிப்பிராயங்களைக் களைந்து கொள்ளவும் முடிந்தன.

# ஓசிரிஸ் கோயில்களில் ரகசிய தீட்சை



முகமது நபி தோன்றுவதற்கு ஏழாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே எகிப்தியர் உருவ வழிபாட்டில் ஈடுபட்டு வந்தனர். மிகப் புராதன காலத்திலேயே அவர்கள் ஓசிரிஸ் (Osiris) என்ற கடவுளை வணங்கி வந்தனர். ப்ரண்டனின் ஆன்மீகத் தேடலின் போதும் எகிப்தில் சில இடங்களில் மசூதிகளுக்கு அருகிலேயே ஓசிரிஸின் பழங்காலக் கோயில்கள் இருந்திருக்கின்றன. பால் ப்ரண்டன் அந்தப் பழங்காலக் கோயில்களுக்குச் சென்று அவை சொல்லும் செய்தியை அறிய முற்பட்டார்.

ஒரே இறைவனை ஒவ்வொரு காலத்திலும், ஒவ்வொரு நாட்டிலும் ஒவ்வொரு விதமாக மனிதர்கள் வழிபட்டார்கள். எல்லாவற்றிலும் ஏதோ ஒரு செய்தி இருக்கிறது என்று பால் ப்ரண்டன் ஆழமாக நம்பினார். மிகப் புராதனமான அந்தக் கோயில்களில் பல, பால் ப்ரண்டனின் காலத்திலேயே சிதிலமாக ஆரம்பித்திருந்த போதிலும் பல்லாயிரம் ஆண்டு களாக வணங்கப்பட்ட அந்தத் தலங்களில் ஆன்மீக அலைகள் பரவியிருந்ததை அவரால் அங்கு சென்ற போது உணர முடிந்தது.





அப்படி அவர் உணர்ந்த ஒரு சக்தி வாய்ந்த இடம் அபிடோஸ் (Abydos) என்ற இடத்தில் இருந்த புராதனக் கோயில். கோயிலின் புறத்தோற்றம் கால ஓட்டத்தின் சிதைவுகளைக் கண்டிருந் தாலும் அங்கிருந்த பெரிய தூண்களின் சிற்பங்களிலும், மங்கிய சித்திரங்களிலும் விவரிக்கப்பட்டு இருந்த கதைகளில் எத்தனையோ ரகசியங்கள் மறைந்திருந்ததாகப் பால் ப்ரண்டனுக்குத் தோன்றியது. எகிப்தின் பழங்காலக் கதைகளின் படி பூமிக்கடவுளுக்கும், ஆகாயத் தேவதைக்கும் பிறந்த முதல் மகன் ஓசிரிஸ். அவன் மனைவி ஐசிஸ். பூமியை ஆண்டு வந்த ஓசிரிஸ் மீது பொறாமைப்பட்டு அவன் தம்பி செட் சூழ்ச்சி செய்து அவனைத் துண்டம் துண்டமாக வெட்டிக் கொன்று விடுகிறான்.

மந்திர தந்திரங்களில் தேர்ச்சி பெற்ற ஐசிஸ், நீண்ட நாள் பிரார்த்தனைகளும், சடங்குகளும் செய்து துண்டமான உடலை ஒன்று சேர்த்து உயிர் பெறச் செய்து விடுகிறாள். மாண்டவர் உலகிற்குச் சென்று வந்ததால் அனைத்தையும் உணர்ந்து பல மடங்கு சக்தி வாய்ந்தவனாகத் திரும்பி வந்த ஓசிரிஸ் சில நாட்கள் வாழ்ந்து மனைவி ஐசிஸைக் கருத்தரிக்க வைத்து விட்டு மறுபடி மாண்டவர் உலகிற்குத் திரும்பி விடுகிறான். ஐசிஸ் பெற்றெடுத்த ஹோரஸ் என்ற அவனுடைய மகன் பெரும் சக்தி வாய்ந்தவனாக வளர்ந்து தந்தையைக் கொன்ற சித்தப்பா செட்டை அழிக்கிறான்.

எகிப்திய கடவுள்களில் பிரதானமான கடவுளான ஓசிரிஸ் இறப்பின் கடவுளாகவும், நியாயத் தீர்ப்புக் கடவுளாகவும் எகிப்திய பழங்கதைகளில் சித்தரிக்கப்படுகிறான். ஹோரஸ் தீயவற்றை அழிக்கும் தெய்வமாகவும், எல்லா புதிய நல்ல மாற்றங்களுக்கான தெய்வமாகவும் சித்தரிக்கப்படுகிறான். அந்தக் கதைகளே அந்தக் கோயிலில் சிற்பங்களிலும், சித்திரங்களிலும் விவரிக்கப்பட்டு இருந்தன.

வழக்கமாகக் கோயில் வழிபாட்டின் போது ஒலிக்கும் இசைக் கருவிகளின் இசையோ, பாடல்களோ பிரதான கடவுளான ஓசிரிஸின் அந்தக் கோயிலில் ஒலிக்க அனுமதிக்கப்படவில்லை என்று ஸ்ட்ரேபோ என்ற தொல்பொருள் ஆராய்ச்சியாளர்

அங்கிருந்த பழைமையான எழுத்துகளில் இருந்த தகவல்களை வைத்துக் கூறுகிறார். மயான அமைதி என்பார்களே, அது போன்ற அமைதியே வழிபாட்டு நேரத்தில் கடைப்பிடிக்கப்படுவதாகச் சொல்கிறார்.

அந்தக் கோயிலில், மிக அபூர்வமான, தகுந்த வெகுசிலருக்கு மட்டும் ஆன்மீக ரகசியங்கள் கற்றுத் தரப்பட்டன என்றும், அதற்குக் கடுமையான விதிமுறைகள் இருந்தன என்றும், சில நாட்கள் ரகசியச் சடங்குகள் கழிந்த பின்னர் அவர்களுக்குக் குருமார்களால் உணர்த்தப்பட்டது என்றும் பழைமையான எகிப்திய ஏடுகள் சொல்கின்றன. அந்தச் சடங்குகள் குறித்த சில சித்திரங்களும் அங்கிருந்தன. மிகப் பெரிய உண்மைகள் ஆரவாரத்திலும், கூட்டங்களிலும் உணரப்படுவதில்லை; பேரமைதியில் ஒருவன் தனக்குள்ளே ஆழ்ந்திருக்கும் போதே உணரப்படுகின்றன என்பதற்காகவே அமைதி அங்கு வலியுறுத்தப்படுகின்றது என்று பால் ப்ரண்டன் நினைத்தார்.

(கற்பனைக் கதைகளாகச் சித்தரிக்கப்படும் எத்தனையோ கதைகளைக் கற்பனைக் கதைகளாகவே எடுத்துக் கொண்டு பிற்கால உலகத்தினரில் பெரும்பாலானோர் பார்த்தாலும், விஷயமறிந்த சிலர் அதன் பின்னால் உள்ள செய்தியைப் படித்துப் பலன் அடைகிறார்கள். அந்தப் பலனையும், ஞானத்தையும் கதைகளாய்ப் படித்து விட்டுப் போகிறவர்கள் பெறத்தவறி விடுகிறார்கள்.)

அங்கிருந்த சித்திரங்களிலும், சிற்பங்களிலும் இருந்த சில சங்கேதக் குறிகள், ரகசியக் கலைகளைக் கற்றவர்களுக்கு மட்டுமே புரியும்படி இருந்தன. ஆயிரக்கணக்கான ஆண்டுகளில் சிதிலமடைந்து பாழ்பட்டுப் போன அந்தக் கோயிலைச் சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் எகிப்தை ஆண்ட மன்னன் ஒருவன் புனரமைத்ததோடு, எகிப்தில் இருந்த ஹீலியோபோலிஸ் என்ற மிகப்பழங்கால நூலகத்தில் இருந்த ஓசிரிஸ் கோயில் பற்றிய தகவல்களைக் கொண்ட நூல்களை எல்லாம் தக்க அறிஞர்களைக் கொண்டு ஒன்று திரட்டி, அந்தப் பழைய தீட்சைக்கான சடங்குகளைத் தன் பிற்காலச் சந்ததிகளுக்கு விட்டுப் போனதாக





வரலாறு கூறுகிறது. அந்த மன்னனால் தான் இன்று அந்த தீட்சைகள் பற்றியும் சடங்குகள் பற்றியும் விரிவாக அறிய முடிகிறது. அந்த நூல்களில் இருந்த தகவல்களின் படியே அதே கட்டமைப்புடன் பல கோயில்களை அந்த மன்னன் புதிதாகக் கட்டினான் என்றும் வரலாறு கூறுகிறது.

ஆனால் பால் ப்ரண்டன் எகிப்திற்குச் சென்ற காலத்தில் அதுவும் பழைமையாகிப் போன போதும் முழுவதுமாக அழிந்து விடாமல் தப்பிய ரகசியத் தகவல்கள் பல, அன்றைக்கும் ஆன்மீக வல்லுநர்களை ஈர்த்த வண்ணம் இருந்தன. எத்தனையோ ஆயிரக்கணக்கான ஆண்டுகள் கழிந்த பின்னும் அவ்வப்போது, உலகின் பல பகுதிகளிலிருந்தும் ஏராளமானோர் ஆன்மீகத் தேடலுடன் அந்த ரகசிய தீட்சை பெற முயன்றாலும் தக்க குருமார்கள், பல சோதனைகளுக்குப் பிறகு வெகுசிலரையே தேர்ந்தெடுத்து அவர்களுக்கு அந்த ரகசிய தீட்சை தந்தனர் என்று சொல்லப்படுகிறது. அப்படி ரகசிய தீட்சை பெற்றதாகச் சொல்லப்படுபவர்களுள் ஒரு சிலர் மிகப் பிரபலமானவர்கள்.





# ரகசிய தீட்சை - இரண்டாம் பிறப்பு

ஓசிரிஸ் கோயில்கள் எப்போதும் இரண்டு பகுதிகளாக இருந்தன. முதல் பகுதி பொது ஜனங்கள் வந்து வணங்கிச் செல்வதற்காக இருந்தது. இரண்டாம் பகுதி ரகசிய தீட்சை தரும் இடமாகவும், அதைத் தரத்தக்க குருமார்களின் பயிற்சி, தியானம் மற்றும் பிரார்த்தனை இடமாகவும் இருந்தது. இந்த இரண்டாம் பகுதிக்குச் செல்ல சாதாரண பொது ஜனங்களுக்கு அனுமதி இருக்கவில்லை.

ரகசிய தீட்சை பெற சுய கட்டுப்பாடு அதி முக்கியமானதாகக் கருதப்பட்டது. அங்கு ரகசிய தீட்சை பெற்று ஆன்மீகப் பேருண்மைகளை அறிய விரும்புபவர்கள் உடனே ஏற்றுக் கொள்ளப்படவில்லை. கடுமையாகச் சோதித்துப் பார்த்த பின்னரே ரகசிய தீட்சை பெற அவர்கள் அனுமதிக்கப்பட்டனர், அல்லது திருப்பி அனுப்பப்பட்டனர். அப்படி ரகசிய தீட்சை தருவது கூட எல்லோருக்கும் ஒரே மாதிரியாக இருக்கவில்லை. அவரவர் தன்மைக்கும், பக்குவத்திற்கும் ஏற்ப தருவதற்குப் பல தரப்பட்ட தீட்சைகள் இருந்தன.

பால் ப்ரண்டன், அபிடோஸ் ஓசிரிஸ் கோயிலில் ரகசிய தீட்சை தரும் இரண்டாம் பகுதியின் சிதிலமடைந்த பகுதியில் உள்ள சிற்பங்களையும், சித்திரங்களையும் ஆராய்வதற்கு முன்பு அங்குத் தியானத்தில் அமர்ந்து, அங்கிருந்த ஆன்மீக அலைகளில் இருந்து அந்த ரகசிய தீட்சைகளின் சூட்சுமத்தை அறிய முற்பட்டார்.





எதையும் அறிய முற்படும் போது பல நேரங்களில் உள்ளதை உள்ளபடி எடுத்துக் கொள்ளாமல் நம் மன நிலைகளுக்கும், நம்பிக்கைகளுக்கும் தக்கபடி எடுத்துக் கொண்டு அதுவே உண்மை என்று கருதும் வழக்கம் நமக்கு உண்டு. அதனால் திறந்த மனத்துடன் நம் சொந்த அபிப்பிராயங்களை ஒதுக்கி விட்டு உண்மையான தகவலையும், ஞானத்தையும் நம்மால் பெற முடியாமல் போகிறது. அதுவும் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் உள்ள ஒரு பழைமையான நாகரிகத்தின் தகவலைக் கலப்படமில்லாத தூய்மையுடன் அறிய வேண்டுமானால் அது மிகவும் கஷ்டமான விஷயமே. எனவே தான் உண்மையான ஞானத்தைப் பெற விரும்பிய பால் ப்ரண்டன், அந்தக் கோயிலின் இரண்டாம் பகுதியில் இருந்த சித்திரங்களையும், சிற்பங்களையும் பார்த்துத் தனக்குத் தோன்றிய விதத்தில் எடுத்துக் கொண்டு விடக்கூடாது, அதன் உண்மையான தன்மையிலேயே எடுத்துக் கொள்ள வேண்டும் என்ற உயர்ந்த நோக்கத்திலேயே, அப்படித் தியானம் செய்து அந்த பழங்கால மகாத்மாக்கள் தந்த ஞானத்தின் தன்மையை அறிய முற்பட்டார்.

சுமார் இரண்டு மணி நேரங்கள் அங்கு அமர்ந்து தியானித்த அவர் அந்தக் காலத்திற்கே சென்று விட்டார் என்றே சொல்ல வேண்டும். அது மிக அருமையான அனுபவமாக இருந்தது என்று பின்னர் கூறுகிறார். ஓசிரிஸின் துண்டான உடல்கூறுகளும் அவை ஒன்று சேர்ந்து உயிர் பெற்றமையும் காட்சிகளாகத் திரும்பத் திரும்ப அவருடைய தியானத்தின் போது மனத்திரையில் வந்து நின்றன. ரகசியத் தீட்சையில் அந்தக் காட்சி மிக முக்கியமான இடம் வகிப்பதாக அவர் நினைத்தார். அது ஏதோ உணர்த்த வருகிறது என்று அவர் உணர்ந்தார்.

பிரமிடுக்குள் ஒரு நள்ளிரவைக் கழித்த போது அவருடைய ஆன்மா உடலை விட்டு ஒரு பயணம் மேற்கொண்டது நினைவுக்கு வந்தது. தன் உணர்ச்சியற்ற உடலைக் கண்களின் துணையின்றித் தெளிவாகப் பார்த்ததும் பின்னர் தன் உடலுக்குள் திரும்ப வந்ததும் ஒரு விதத்தில் மரணமும், பின் ஜனனமும் போலவே அல்லவா என்று நினைத்தார். தியானம் முடிந்தபின் உள்ளே ரகசிய தீட்சை நடந்த பகுதிகளில் கண்ட சித்திரங்களும் சிற்பங்களும் அவர்

தியானத்தில் உணர்ந்த உண்மைகளுக்கு வலுவூட்டுவனவாகவே இருந்தன.

கோயிலின் முதல் பகுதியிலும் பூஜை நேரங்களில் கூட சத்தம், ஆரவாரம் எதுவுமில்லாமல் இருக்குமாறு பார்த்துக் கொள்ளப்பட்டது என்று முன்பே சொல்லியிருந்தோம். உள்ளே இருந்த இரண்டாம் பகுதியில் வெளிப்புற அமைதி மட்டுமல்லாமல் மன அமைதியும் மிக முக்கியமானதாகக் கருதப்பட்டது. அபிடோஸில் இருந்த ஓசிரிஸின் அந்தப் பிரதான கோயிலின் உட்பக்கம் இருந்த இரண்டாம் பகுதியில் ரகசிய தீட்சை நடக்கும் இடத்தில் இருந்த சித்திரங்களிலும், சிற்பங்களிலும் இருந்த மனிதர்களின் முகத்தில் பேரமைதியைக் கண்டார் பால் ப்ரண்டன்.

அங்கு ஓசிரிஸின் மரணமும், உயிர்த்தெழுதலும் தத்ரூபமாக வரையப்பட்டும், செதுக்கப்பட்டும் இருந்தன. ஓசிரிஸின் உடற்கூறுகள் சிதறிக் கிடந்த காட்சிகளில் கூட அங்கு மரணத்தின் போது இருக்கும் ஒரு துக்ககரமான சூழ்நிலை தெரியவில்லை. மாறாக வாழ்க்கையைக் கற்றுக் கொள்கிற, வாழ்கிற ஒரு சூழ்நிலையே அங்கிருந்த குருமார்களின் முகத்திலும், ரகசிய தீட்சை பெற வந்தவர்களின் முகத்திலும் தெரிந்தது. ரகசிய தீட்சையின் சடங்குகள் கிட்டத்தட்ட ஓசிரிஸின் மரணம், உயிர்த்தெழுதல் போலவே தெரிந்தன. அங்கு ரகசிய தீட்சைக்கு வந்த அவர்கள் ஒரு விதத்தில் மரணித்துப் பின் புதிய பிறப்பு எடுப்பது போலவே சித்தரிக்கப்பட்டிருந்தது.

ரகசிய தீட்சை பெறத் தேர்ந்தெடுக்கப்படும் மாணவன் அஸ்தமன காலத்திற்குப் பின்னரே கோயிலுக்குள் இருக்கும் இரண்டாம் பகுதிக்கு அனுமதிக்கப்படுகிறான். மந்திர தந்திரங்களிலும், ஹிப்னாட்டிசம், மெஸ்மெரிசம் போன்ற கலைகளிலும் மிக மிகத் தேர்ச்சிப் பெற்றவர்களாக இருந்த அந்தக் கால எகிப்திய குருமார்கள், தங்கள் சக்தியால் அவனை மிக ஆழ்ந்த உறக்கத்தில் ஆழ்த்துகிறார்கள். கிட்டத்தட்ட மரணிப்பது போலவே அந்தக் காட்சி சித்தரிக்கப்படுகிறது. உணர்ச்சியற்ற நிலையில் 'எகிப்திய மம்மி' போலவே கிடக்கும் அவனை ஒரு சவப்பெட்டியில் வைத்து





இறுக்கமாக மூடி வைக்கிறார்கள். அவனுக்கு அந்த ஆழ்ந்த மரண நிலை மயக்கத்திலேயே குருமார்கள் பலவித அனுபங்களை ஏற்படுத்தி, உண்மை ஞான நிலையை உணர வைக்கிறார்கள். அவனுடைய ஆன்மா வேறொரு மேலான உலகத்திற்கு அழைத்துச் செல்லப்பட்டு மேலான உண்மைகளை உணர்த்தப்படுவது போல காண்பிக்கப்படுகிறது.

அந்தக் காட்சிகளின் விளக்கச் சித்திரங்களில் அந்த ஆன்மாவின் பயணங்கள் மிக சக்தியும், நுண்ணிய உணரும் தன்மையும் வாய்ந்த குருமார்களுக்கே முழுமையாகக் காண முடிவது போல் சித்தரிக்கப்படுகின்றது. அந்தக் குறிப்பிட்ட மாணவனின், தன்மைக்கும் தரத்துக்கும் ஏற்ற நிலைப்படி தான் ஞானம் அவனுக்கு அறிவிக்கப்படுகின்றது. அந்தத் தீட்சையின் கால அளவும் அதற்கு ஏற்றபடி கூடவோ, குறையவோ செய்கின்றது. அந்த உடல் வைக்கப்பட்ட சவப்பெட்டியின் அருகிலேயே குருமார்கள் நிற்கின்றனர். அந்த நேரத்தில் இரவுப் பிரார்த்தனைகளும் மிகுந்த பக்தியுடன் செய்யப்படுகின்றன.

அந்தத் தீட்சைக்கு உட்படுத்தப்படும் மாணவனின் ஆன்மா ஓசிரிஸின் ஆன்ம சக்தியுடன் இணைந்து அறிய வேண்டியவற்றை அறிந்து திரும்புவது போல ஐதீகம். ஓசிரிஸ் மரணித்தது போல அவனும் மரணிக்கிறான். ஆனாலும் உடல் உணர்ச்சியற்று இருப்பினும் ஆன்மாவின் நுண்ணிய பிணைப்பில் கட்டுண்டே இன்னும் உடல் இருக்கின்றது. ஆன்மாவிற்கு உடல் ஓர் ஆடையைப் போன்றதே, மரணம் என்பது என்றும் ஆன்மாவிற்கு இல்லை என்பதைத் தன் நிஜ அனுபவம் மூலமே அவன் சந்தேகத்திற்கிடமில்லாமல் அறிகிறான். இன்னும் பல்வேறு அனுபவங்களை அடைகிறான். தன் ஆன்மீக முன்னேற்றத்திற்கு வேண்டிய உண்மைகளை அறிகிறான். உடலோடு ஆன்மா இணைந்திருக்கும் போது அவன் உணர முடியாத எத்தனையோ ரகசியங்களை அந்த தீட்சையின் போது அவன் உணர்கிறான். தன் இயல்பான எத்தனையோ நன்மைகளையும், சக்தியையும் மறுபடி உணர்கிறான். ஓசிரிஸ் போல பல மடங்கு சக்தியுடன் அவன் மீண்டும் உயிர் பெறுகிறான்.

சடங்குகள் முடிந்து மத குருமார்களின் அற்புத சக்திகளால் அவன் உணர்வுநிலை திரும்பவும் உடலுக்குத் தருவிக்கப்படுகிறது. அந்த சவப்பெட்டியைத் திறந்து அதிகாலையின் சூரிய கிரணங்கள் அவன் மீது விழும்படி வைக்கிறார்கள். அவன் புதிய மனிதனாய்ப் புத்துணர்வுடன் திரும்புகிறான். இந்த ரகசிய தீட்சை பெற்றவர்களை 'இருமுறை பிறந்தவர்கள்' அல்லது 'வாழ்க்கையைப் புதுப்பித்துக் கொண்டவர்கள்' என்று எகிப்தியர்கள் அழைத்தார்கள்.

மத குருமார்கள் தேர்ந்தெடுக்கப்பட்ட மாணவனை ஹிப்னாட்டிசத்திற்கு உள்ளாக்குவதற்கும், அவனை அந்த நிலையில் இருந்து மீட்டுக் கொண்டு வருவதற்கும் மந்திரக்கோல் போன்ற ஒருதடியை உபயோகப்படுத்துகிறார்கள். மத குருமார்களின் ஹிப்னாட்டிச சக்திகள் இன்றைய ஹிப்னாட்டிச சக்திகள் போலவே வெளிப்பார்வைக்குத் தெரிந்தாலும் அவர்கள் சக்திக்கும், இன்றைய ஹிப்னாட்டிச சக்திக்கும் இடையே பெருத்த வேறுபாடு உள்ளது. இன்றைய ஹிப்னாட்டிச சக்தியில் அந்த நிலைக்குக் கொண்டு போகப்பட்டவன் விழிக்கும் போது அந்த நிலையில் நடந்த, உணர்ந்த எதையும் நினைவில் வைத்துக் கொள்ள முடிவதில்லை. ஆனால் அந்த மத குருமார்கள் ஏற்படுத்தும் ஹிப்னாட்டிச சக்தியில், அந்த உணர்வற்ற நிலையில் பெற்ற அனைத்து அனுபவங்களும் அவன் உணர்வுநிலைக்குத் திரும்பும் போது நினைவில் தெளிவாக இருக்கின்றன. அவன் இனி வாழப்போகும் நிலைக்கு வழிகாட்டும் உன்னத அனுபவப் பாடங்களாக அமைகின்றன.

ஆரம்பத்தில் எகிப்தியர்களுக்கு மட்டுமே இந்தத் தீட்சை தரப்பட்டது. பின்னர் காலப் போக்கில் தகுதி வாய்ந்த வெளிநாட்டினருக்கும்தரப்படஆரம்பிக்கப்பட்டது. அப்படித்தரப்பட்டவர்களில் உலகப்புகழ்பெற்ற அறிஞர்கள் சிலர் அடங்குவர்.





# ரகசிய தீட்சை பெற்றவர்களின் அனுபவங்கள்



ஓசிரிஸ் கோயிலில் ரகசிய தீட்சை பெற்ற எகிப்தியர்களின் பெயர்கள் வரலாற்றில் பதிவு செய்யப்படவில்லை. ஞானம் பெற்ற அவர்களுக்கு அந்த ஞானமே போதுமானதாக இருந்தது. அதை அடுத்தவர்களுக்குத் தெரிவிக்கும் அவசியத்தை அவர்கள் உணரவில்லை, அல்லது வரலாற்றைப் பதிவு செய்வது முக்கியம் என்பதை அவர்கள் முக்கியமாக நினைக்கவில்லை என்று எடுத்துக் கொள்ளலாம்.

ஆனால் பண்டைய கிரேக்க மேதைகள் பலர் ரகசிய தீட்சை பெற்றது அவர்களுடைய வரலாற்றில் பதிவு செய்யப்பட்டு இருக்கிறது. அவர்கள் அபுல்லியஸ், ப்ளேடோ, ஹோமர், பித்தகோரஸ், தேல்ஸ், லிகர்கஸ், சோலோன், லம்ப்லிசஸ், ப்ரோடஸ், ப்ளூடார்க் மற்றும் ஹெரொடோடஸ்.

வரலாற்றின் தந்தை என்று அழைக்கப்படும் ஹெரொடோடஸ், '' ஓசிரிஸ் கோயில் ரகசியங்கள் அனைத்தையும் நான் அறிந்தவன் என்றாலும் அவற்றை என் உதடுகள் உச்சரித்து விடாமல் ஆன்மீகப் பிரமாணம் என்னைத் தடுக்கிறது'' என்றார். மற்றவர்களும் தாங்கள் எடுத்திருந்த ரகசிய பிரமாணத்தை மீறவில்லை என்றாலும், அவர்களில் சிலர் ரகசிய தீட்சை உண்மையானது என்பதையும், கடுமையான சோதனைகளுக்குப் பின்னரே தேர்ந்தெடுக்கப்படுவர் என்பதையும் அந்த அனுபவம் எப்படி இருந்தது என்பது பற்றிய சொல்லக் கூடிய தகவல்களையும் சொல்லி இருக்கிறார்கள்.

அபுல்லியஸ் என்ற மேதை இரண்டாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். லத்தீனில் பல புத்தகங்களை எழுதியவர். அவர் படைப்புகளில் முழுமையாகப் பிற்காலத்தவர்களுக்குக் கிடைத்தது தங்கக் கழுதை என்ற நாவல். லூசியஸ் என்ற அந்த நாவலின் கதாநாயகன், மேஜிக் மற்றும் ரகசிய வித்தைகளை அறிந்து கொள்ளும் ஆவலுடன் இளமையிலேயே பல்வேறு இடங்களுக்குச் சென்று கழுதையாக மாறி விடுகிறான். பிறகு பல கஷ்டங்களைத் தொடர்ந்து மனிதனாக மாறி அறிய வேண்டிய ரகசியங்களுள் மிக உயர்ந்த ரகசியம் என்று கருதப்பட்ட ஓசிரிஸ் கோயில் ரகசியத்தை அடைந்து உயர்வதாகக் கதை முடிகிறது. அந்த நாவல் நிஜமும் கற்பனையும் சேர்ந்து எழுதப்பட்ட கதை என்றும் அதில் லூசியஸ் பெற்ற ரகசிய தீட்சை அபுல்லியஸின் சொந்த அனுபவமே என்றும் கருதப்படுகிறது.

லூசியஸ் என்ற அந்த கதாபாத்திரம் மூலமாக அபுல்லியஸ் இப்படிச் சொல்கிறார்: ''நான் தினமும் ஓசிரிஸ் கோயிலின் தலைமைக் குருவைச் சந்தித்து எனக்கும் தீட்சை தர வேண்டுவேன். அவர் பெற்றோர் குழந்தைகளுக்குச் சில விஷயங்களை மறுப்பது போல பொறுமையுடன் மறுப்பார். ''எந்த உண்மையும் தகுந்த காலம் வராமல் யாருக்கும் உபதேசிக்கப்படுவதில்லை. யாருக்கு எந்த நேரத்தில் தகுந்த உண்மை உபதேசிக்கப்பட வேண்டும் என்பதை தேவதைகள் மட்டுமே நிர்ணயிக்க முடியும்'' என்று சொல்வார்.

அந்த பேருண்மைகளை அறியாமல் நாட்டுக்குத் திரும்பக் கூடாது என்று விடாப்பிடியாக நான் அடிக்கடி சென்று வேண்டிய





போது அவர் சொன்னார்: ''அளவுக்கு மீறிய அவசரமும், தாமதமும் மனிதனின் உண்மையான எதிரிகள். அவை இரண்டையும் உன்னிடமிருந்து நீக்குவது மிக முக்கியம். உனக்குச் சந்தர்ப்பம் வரும் முன் அவசரப்படுவதும், உனக்குச் சந்தர்ப்பம் வரும் போது தயார் நிலையில் இல்லாமல் தாமதிப்பதும் கூடாது. எனவே தகுதிகளை வளர்த்துக் கொண்டு பொறுமையாக, தயாராகக் காத்திரு.''

இறைவனிடம் அந்தத் தீட்சைக்காக உளமார பிரார்த்தனை செய்து கொண்டு சில காலம் காத்திருந்த நான், ஒரு நாள் இரவு நேரத்தில் உறக்கத்திலிருந்து விழித்து ஒரு பெரும் உந்துதலால், உந்தப்பட்டு நேராக ஓசிரிஸ் கோயிலுக்குச் சென்று தலைமைக் குருவைச் சந்தித்தேன். அவர் என்னை எதிர்பார்த்தது போலக் காத்திருந்தது எனக்கு ஆச்சரியமாக இருந்தது. அவரிடம் என்ன ஆனாலும் சரி நீங்கள் என்னைத் தீட்சைக்கு அனுமதித்தே ஆக வேண்டும் என்று வேண்டிக் கொண்டேன். அவர் தனக்கும் உத்தரவு வந்து விட்டது என்று கூறி சில உபதேசங்கள் செய்து இன்னும் பத்து நாட்கள் மது, அசைவம் இரண்டையும் விலக்கி, மனதையும் சுத்தமாக வைத்திருந்து விட்டு வரும்படி ஆணையிட்டார்.

அப்படியே பத்து நாட்கள் இருந்து விட்டு நான் அங்கு சென்றேன். தீட்சையும் பெற்றேன். அதன் பின் நான் அறிந்தவற்றையும், உணர்ந்தவற்றையும் சொல்ல விடாமல், நான் எடுத்துக் கொண்ட சத்தியபிரமாணம் தடுக்கின்றது. முழுமையாகச் சொல்ல முடியாது. சொன்னாலும் மற்றவர்களுக்குப் புரியாது. ஆனால் ஒன்று மட்டும் சொல்வேன். மரணத்தின் விளிம்பு வரை சென்றேன். பல உலகங்களுக்குச் சென்றேன். படைப்பின் பரிமாணங்களை உணர்ந்தேன். இரவிலும் பிரகாசிக்கும் சூரியனைக் கண்டேன். திரும்ப இவ்வுலகத்திற்கு எல்லாம் கண்டவனாக, எல்லாம் உணர்ந்தவனாக வந்தேன்.''

கண்டவர் விண்டிலர், விண்டவர் கண்டிலர் என்று நம் முன்னோர் சுருக்கமாகக் கூறிய அதையே தான் அவரும் இந்த அனுபவத்தில் கூறுகிறார்.

ரகசிய தீட்சை பெற்ற இன்னொரு அறிஞரான ப்ளூடார்க் கூறுகிறார்: ''ரகசிய தீட்சையின் போது மனித ஆத்மா மரணத்தின் போது அனுபவிக்கும் அத்தனையையும் அனுபவிக்கின்றது. அறிய வேண்டிய அனைத்தையும் அறிகின்றது. ஆனால் ஓசிரிஸ் குறித்து நடந்ததாகச் சொல்லப்பட்ட கதையை உண்மையாக நடந்தது என்று அப்படியே எடுத்துக் கொள்ள வேண்டியதில்லை. அந்தக் கதைகள் பாமரர்களுக்காகப் புனையப்பட்டவை. அவற்றுக்குப் பின்னால் தத்துவார்த்தமாக இருக்கும் உண்மைகளைப் புரிந்து கொண்டால் போதும். தீமைகளாலும் தவறுகளாலும் உண்மைகளை அழித்து விட முடியாது. தக்க சமயத்தில் உண்மை பன்மடங்கு பலத்தோடு மீண்டு வரும் என்று அறிந்தால் போதுமானது.''

அதன் பிறகு இன்னொரு இடத்தில் கூறுகிறார்: ''அறியாமையில் இருந்து மனித ஆன்மா விடுபடுகையில், மகத்தான உண்மைகளை உணரும் போது உருவமில்லாத, மாற்றமில்லாத, பரிசுத்தமான இறைவனை அறியும் போது ஏற்படுகிற பேரானந்தத்தையும், காணும் பேரழகையும் வர்ணிக்க வார்த்தைகள் இல்லை.''

லம்ப்லிசஸ் கூறுகிறார்: ''இறை நிலையிலிருந்த மனிதன் விதியாலும் அறியாமையாலும் பற்பல சங்கிலிகளால் கட்டுண்டு கஷ்டப்படுகிறான். அந்த சங்கிலிகளை உடைத்துக் கொண்டு விடுதலையாகி தன் இறைநிலையை உணரும் நிலைக்கு ஓசிரிஸ் தீட்சை ஒருவரை அழைத்துச் செல்கிறது.''

மேலே குறிப்பிட்ட அறிஞர்கள் மட்டுமல்லாமல் பைபிளில் குறிப்பிடப்படும் மோசஸ் கூட ஓசிரிஸ் கோயிலில் ரகசிய தீட்சை பெற்றவர் என்று கூறப்படுகிறது. புதிய ஏற்பாட்டில் பைபிள் ''மோசஸ் எகிப்தின் எல்லா ஞானத்தையும் போதிக்கப்பட்டிருந்தார்'' என்று கூறுவது முக்கியமாக இந்த ரகசிய தீட்சை ஞானத்தையே என்று சிலர் கூறுகிறார்கள்.

ஒட்டு மொத்தமாகப் பார்த்தால் இந்த உலகத்தில் அவர்கள் மூழ்கியிருந்த அறியாமையை முற்றிலும் விலக்கி விட்டு அவர்கள் இறைவன் படைப்பின் ரகசியங்கள், தத்துவங்களை அனைத்தும்





அறிந்து புதிய மனிதர்களாகத் திரும்பி வந்தார்கள் என்றே சொல்ல வேண்டும்.

ஓசிரிஸ் கோயில் மத குருக்கள் ரகசிய தீட்சை பெற முடியாத பொதுமக்களையும் புறக்கணித்து விடவில்லை. கடவுள்களையும், வரலாற்று நாயகர்களையும் மையமாக வைத்துப் பல விதமான பழங்கதைகள், நாடகங்கள் படைத்து அவற்றைப் பொதுமக்களிடையே பரப்பினார்கள். அந்தக் கதைகள் அனைத்தும், ''தீமை தற்காலிகமாக வெல்வது போல தோன்றினாலும், கடைசியில் நிரந்தரமாக வெல்வது நன்மையே'' என்ற செய்தியையே கருவாகக் கொண்டிருந்தன. மிக மேலான ஞானத்தைப் பெற முடியாவிட்டாலும், உண்மைக்கு ஒரு போதும் அழிவில்லை, பொய்மையால் என்றும் நன்மை இல்லை என்பது மட்டும் சாதாரண மனிதன் மனத்தில் உறுதியாகப் பதிந்து விட்டால், கண்டிப்பாக அவன் அதற்கு மேற்பட்ட நிலைகளை உணர்ந்து கடைத்தேறுவான் என்பது அவர்களின் நம்பிக்கையாக இருந்தது.

நம்முடைய இதிகாசங்களும் இதே செய்தியைத் தான் பலவிதங்களில் பல இடங்களில் தெரிவிக்கின்றன அல்லவா? பாரதியின் வரிகளில் அர்ஜுனன் பாஞ்சாலி சபதத்தில் கூறுவான்: ''தர்மத்தின் வாழ்வதனைச் சூது கவ்வும்; தருமர் மறுபடி வெல்லும் எனும் இயற்கை மர்மத்தை நம்மாலே உலகம் கற்கும்.'' இந்தச் செய்தியே, இந்த நோக்கமே பெரும்பாலான உலகப் பழம் புராணக் கதைகளின் மையக் கருத்தாக இருக்கின்றது என்பதற்கு எகிப்தின் பழங்கதைகளும் சான்று.





# ரகசிய தீட்சை பெறத் தகுதிகள் எவை?

ஓசிரிஸ் கோயில்களில் மட்டுமல்லாமல் பழங்கால எகிப்தில் வேறுசில கோயில்களிலும் ரகசியத் தீட்சை முறைகள் இருந்தன. அங்கும் தகுதி இருப்பதாக நினைப்பவர்களுக்கு மட்டுமே ரகசியத் தீட்சை தரப்பட்டது. மதம், மொழி, இனம், சமூக அந்தஸ்து ஆகியவற்றிற்கு அப்பாற்பட்டே, தனிமனிதப் பக்குவத்தைப் பொறுத்தே, தகுதி நிர்ணயிக்கப்பட்டது. ஆயிரக்கணக்கானவர்கள் ரகசிய தீட்சைக்காகச் சென்ற போது விரல் விட்டு எண்ணக்கூடிய அளவில் தான் பொருத்தமானவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

ரகசிய தீட்சை பெற்றவரும், தத்துவாசிரியரும், கணித மேதையுமான பித்தகோரஸ், அக்காலத்தில் சிறப்புக் கல்வி பயிற்றுவிக்க அகாடமி ஒன்றை நடத்தி வந்தார். அக்காலத்தில் அங்குக் கல்வி பயிலத் தேர்ந்தெடுக்கப்படுவது பெரிய விஷயமாகக் கருதப்பட்டது. பலர் சென்றாலும் சிலர் மட்டுமே அங்கு அனுமதிக்கப்பட்டார்கள். அதற்குக் காரணம் கேட்ட போது ஒரு முறை பித்தகோரஸ் சொன்னார்: ''எல்லா மரங்களும் சிற்ப வேலைக்குப் பொருத்தமாக இருக்காது.'' அவர் சொன்னது அந்தச் சிறப்புக்கல்வியை விட ரகசிய தீட்சைக்கு மிகவும் பொருத்தமான பதிலாக இருந்ததாகப் பால் ப்ரண்டன் நினைத்தார்.

ஒரு ரகசிய தீட்சை முறையில் தீட்சை பெறுவதற்கு முன் கடைசியாகச் சொல்லி அனுப்பும் வாக்கியம் இதுவாக இருந்தது: ''இது வரை அனுபவித்திராத ஒரு புதிய அனுபவத்தைப் பெறப் போகிறாய். மனிதனாக இருந்தவன் தெய்வமாக மாறப் போகிறாய். போய் வா.''





பல ரகசிய தீட்சை முறைகளில் தெய்வீக நிலைக்கு முன் சில அபூர்வ சக்திகளைத் தந்து பயங்கரமான, மோசமான நிலைகளைக் காண வைத்தனர் என்றும், அதில் தளர்ந்து விடாமல் தாக்குப் பிடிப்பவர்களையே அடுத்த தெய்வீக நிலைக்குத் தேர்வு செய்து அனுப்பியதாகவும் சொல்லப்படுகிறது. அது போன்ற சில பயங்கரமான அனுபவங்களில் உயிருக்கே ஆபத்து விளைவிக்கும் நிலை கூட இருக்கும் என்றும் சரியான தகுதி இல்லாத நபர்கள் நிலை குலைந்து போகவோ, பைத்தியமாக மாறி விடவோ, இறக்கவோ கூட வாய்ப்பு இருப்பதாகவும் கருதுகிறார்கள். அந்த அபூர்வ சக்திகளைத் தன் வசப்படுத்தும் திறமையோ, தகுதியோ இல்லாதவர்களுக்கு அதைக் கற்றுத் தந்தால் கண்டிப்பாக அந்த மனிதர்களுக்கும், மற்றவர்களுக்கும் நல்லது நடக்காது என்கிற ஞானம் அவர்களுக்கு இருந்ததாகத் தெரிகிறது.

இதையெல்லாம் படிக்கையில் மிக உறுதியும், வலிமையும் உள்ள மனிதர்கள் தான் இந்தத் தீட்சை முறைகளைப் பெற முடியும் என்பது சந்தேகத்திற்கு இடமில்லாமல் தெரிகிறது. ஞானமல்லாத வேறு நோக்கத்தோடு செல்பவர்கள், பலவீனர்கள் எல்லாம் ஆரம்பத்திலேயே அடையாளம் காணப்பட்டுத் திருப்பி அனுப்பப்படுவார்கள் என்பதால், கிடைக்கும் ஞானம் கலப்படமில்லாமல் தூய்மையாகவும் ரகசியமாகவும் பாதுகாக்கப்பட்டது என்பதை அறிய முடிகிறது. அதில் தேர்ந்த பின் தான் இறைநிலையை ஒருவரால் அடைய முடிகிறது. அந்த நிலை வார்த்தைக்கெட்டா நிலை, பேரமைதியும், பேரானந்தமும் உள்ள நிலை என்று கிட்டத்தட்ட எல்லா தீட்சை முறைகளிலும் பல விதமான வர்ணனைகளில் சொல்கிறார்கள்.

தீட்சை முறையில் கிட்டத்தட்ட ஹிப்னாட்டிச முறையில் மயக்க நிலைக்கு ஒருவரை அழைத்துச் சென்று தான் வேறுபல அனுபவங்களையும், மேலான உணர்வு நிலைகளையும் அடைய வைக்கிறார்கள் என்றாலும், சாதாரண, நவீன ஹிப்னாட்டிசத்திற்கும், அக்காலத் தீட்சை முறை ஹிப்னாட்டிசத்திற்கும் இடையே பெரிய வித்தியாசம் இருக்கிறது. இன்றைய ஹிப்னாட்டிச முறையில் ஹிப்னாட்டிசம் செய்பவர், தான் செயல் புரிபவராகவும்,

ஹிப்னாட்டிசம் செய்யப்படுபவர் முன்னவர் விருப்பப்படி செயல்பட முடிபவராகவும் தான் இருக்கிறார். ஹிப்னாட்டிசம் முடிந்த பின் என்ன நடந்தது என்பது கூடத் தெரியாமல் தான் ஹிப்னாடிசத்தில் கட்டுண்டு இருந்தவர் இருக்கிறார். ஆனால் அக்காலத் தீட்சை முறையில் உபயோகப்படுத்திய ஹிப்னாட்டிசத்தில் ரகசியத் தீட்சை பெறுபவர் கிட்டத்தட்ட மரண நிலையிலேயே உடலளவில் ஆழமாகச் செல்லக்கூடிய அளவில் இருக்கிறார். ஆனாலும் கூட அவர் நடப்பவை அனைத்தையும் மிகத் தெளிவாக உணர முடிபவராகவும், அந்த அனுபவங்களில் முழுப்பங்கு வகிப்பவராகவும் இருக்கிறார். நவீன ஹிப்னாட்டிசத்தில் ஹிப்னாட்டிசம் முடிந்த பிறகு முன்போலவே ஹிப்னாட்டிசம் பெற்றவர் இருக்கிறார். ஆனால் ரகசிய தீட்சை ஹிப்னாட்டிசத்தில் எல்லா அறியாமைகளும் நீங்கி புது ஜென்மம் எடுத்தவராகத் தீட்சை பெற்றவர் நினைவு திரும்புகிறார். எல்லா விஷயங்களிலும் மேம்பட்டவராகவும், ஞானியாகவும் மாறுகிறார். சாக்ரடீஸ் சொல்கிறார்: ''இது போன்ற ரகசிய ஞானத்தைப் பெற்றவர்கள் உண்மையான மரணம் வரும் போது கூட நம்பிக்கையோ, தைரியமோ இழக்காமல் சற்றும் வருத்தமில்லாமல் இனிமையாக மரணத்தைச் சந்திக்கிறார்கள்.'' உண்மைக்காக விஷம் தரப்பட்டுச் சாக முன்வந்த மனிதர் வாயால் அதைக் கேட்கும் போது அதில் உள்ள நூறு சதவீத உண்மையை நம்மால் புரிந்து கொள்ள முடிகிறது.

பால் ப்ரண்டன் இந்த இடத்தில் அவருடைய நண்பர் ஒருவரின் அனுபவத்தையும் கூறுகிறார். அவருடைய நண்பர் விமானப்படை அதிகாரியாக இருந்து ஓய்வு பெற்றவர். ஆத்மா, இறந்த பின் உள்ள வாழ்க்கை என்பதில் எல்லாம் சிறிதும் நம்பிக்கை இல்லாதவர். அப்படிப்பட்டவருக்கு ஓர் அறுவை சிகிச்சையின் போது மயக்க மருந்து தரப்பட்டது. அது அவருக்கு நூதன அனுபவத்தை ஏற்படுத்தியது. உடல் உணர்ச்சிகள் அனைத்தும் அற்றுப் போன அவர், காற்றில் மிதப்பது போல உணர்ந்த பின்னர் தன்னுடைய அறுவை சிகிச்சையையே அடுத்தவர் அறுவை சிகிச்சையைப் போல அமைதியாகப் பார்க்க முடிந்ததாம். அந்த அனுபவம் அவரை முற்றிலும் புதியவராக மாற்றியதாக அவர் கூறுகிறார்.





இப்படி நம்மால் விளக்க முடியாத அபூர்வ நிகழ்வுகளிலும் அரைகுறையாகச் சில அனுபவங்கள் கிடைப்பதுண்டு.

ரகசிய தீட்சை விஷயத்தில் இன்னொரு உண்மையையும் நாம் கவனிக்க வேண்டும். ரகசிய தீட்சை பெற்றவர்களின் எண்ணிக்கையை ஒட்டு மொத்தமாகப் பார்த்தால் கணிசமாக இருந்திருக்க வேண்டும். முன்பு சொன்ன அக்கால ஞானிகள் மட்டுமல்லாமல் பெயரே தெரியாத, பிரபலமல்லாத எத்தனையோ பேர் ஓசிரிஸ் கோயிலில் ரகசிய தீட்சை பெற்றிருந்த போதும், அத்தனை பேரும் அந்த ரகசியத்தைக் காத்த விதம் பிற்கால வரலாற்றாசிரியர்களுக்கு மட்டுமல்ல, நமக்கும் கூட ஆச்சரியத்தை அளிப்பதாகவே இருக்கிறது. ''மூன்று செவிக்கு எட்டிய செய்தி மூடு மந்திரமாகாது'' என்பார்கள். ஆனால் இந்த ரகசியத் தீட்சை விஷயத்தில் அது பொருந்தாத பழமொழியாகவே போய் விட்டது என்று தோன்றுகிறது.

மேலும் ஒருவன் உண்மையான மரணத்தின் போது என்னவெல்லாம் உணர்வானோ, அதை எல்லாம் ரகசிய தீட்சையின் போது முன்கூட்டியே உணர்கிறான் என்று ப்ளூடார்க்கும் கூறுகிறார். இன்னொரு இடத்தில், ரகசிய தீட்சைகளின் தேவை என்ன, நோக்கம் என்ன என்று கூறுகையில் மிக அழகாக அவர் சொல்கிறார் ''உலகில் வாழும் காலத்தில் மனிதன் தன் உடலோடு பின்னிப் பிணைந்திருப்பதால் இறை சக்தியுடன் கலப்பது முடியாத காரியமே. முயன்றால் தத்துவச் சிந்தனையால் அபூர்வமாய்ச் சில நேரங்களில் கனவில் இருப்பது போல தொட்டு மட்டுமே வர முடியும். எல்லா பிணைப்புகளில் இருந்தும் ஆன்மா விடுபடும் போது மட்டுமே மனிதன் பவித்திரமான, கண்ணால் காண முடியாத, மாற்றம் இல்லாத பிரதேசத்தில் சஞ்சரிக்க ஆரம்பிக்கின்றான். அங்கு அவன் இறைவனை உணர்வது மட்டுமல்ல, அந்த இறை சக்தியே அவனை வழி நடத்துவதாக இருக்கிறது. அந்த அழகையும் ஆனந்தத்தையும் வர்ணிக்க மனித உதடுகளால் ஒரு போதும் முடியாது.''

இது வரை அது பற்றி அனுபவப்பட்ட சான்றோர் சொன்னதை வைத்துப் பார்த்தால் மொத்தத்தில் அன்றைய ரகசிய தீட்சை

பெற்றவர்களிடம் தூய்மை, பொறுமை, மன வலிமை, ரகசியம் காக்கும் தன்மை ஆகிய நான்கும் பிரதானமாக இருந்ததாகத் தெரிகிறது. ஓசிரிஸ் இறந்து மறுபடி உயிர்த்தெழுந்தது போல, மனிதனும் அப்படி ரகசிய தீட்சையில் உயிர்த்தெழுவதற்கு அவன் இந்த நான்கு தன்மைகளையும் பெற்றுப் பொருத்தமானவனாக இருக்க வேண்டும்.

ஓசிரிஸ் கோயிலில் அமர்ந்து தியானம் செய்து கிடைத்த மேலான உணர்வு அனுபவத்தோடு, மற்றவர்களின் அனுபவங்களையும் சேர்த்து எழுதியதில் பால் ப்ரண்டனுக்குச் சலிக்கவே இல்லை என்றே தோன்றும் அளவு நிறைய அந்தப் புத்தகத்தில் எழுதியுள்ளார். பலருடைய அனுபவங்களும் கிட்டத்தட்ட ஒன்று போலவே இருப்பினும் பல இடங்களில் அவற்றை மாறி மாறி அவர் குறிப்பிடக் காரணம் இல்லாமல் இல்லை. இத்தனை வார்த்தைகளில் ஏதாவது ஒன்று படிப்பவர் மனதில் பதிந்து, தானடைந்த பெரும் பலனை அவர்களும் அடைய மாட்டார்களா என்று அவர் ஆசைப்பட்டது போலவே தெரிகிறது.

எத்தனையோ பேருக்கு ஞானத் தீட்சை அளித்த ஓசிரிஸ் கோயில்களின் ஞானக்கதவுகள், பிற்காலத்தில் என்றென்றைக்குமாய் மூடப்பட்டன. அப்படி அந்தப் புனித கோயில்களில் ரகசிய தீட்சை மூலமாகக் கிடைத்த புனிதமான ஆன்மிக ஞானம் காலம் செல்லச் செல்ல மறைந்தே போகக் காரணம், ஆன்மிகம் தனிப்பட்ட தேடலாக இல்லாமல், அமைப்புகள், மற்றும் மதம் சார்ந்த விஷயமாக பிற்காலத்தில் மாறியது தான் என்கிறார் பால் ப்ரண்டன். ஒரு காலத்தில் தூய்மையும் மேன்மையும் நிறைந்தவர்களிடத்தில் இருந்த ஓசிரிஸ் கோயில்களின் கட்டுப்பாடு, பிற்காலத்தில் அரைகுறை ஞானமும், பலவீனமான, தூய்மையற்ற மனமும் கொண்டவர்கள் கையில் கிடைக்க, உண்மையான ஞானம் அங்குப் பெறுவது சாத்தியமில்லாமல் போயிருக்க வேண்டும் என்று அவருக்குத் தோன்றியது. மற்ற இடங்களிலும் நாளாவட்டத்தில் ஆன்மிக ஞானத்திலும் கலப்படம் ஆரம்பித்து உண்மையின் சாராம்சம் அதில் மிகவும் குறைந்து விட்டது என்று அவர் நினைத்தார்.








# இறைவனின் மொழியும் இறந்தவர்களின் புத்தகமும்

எகிப்தின் பழங்கால வழிபாடுகளும், நம்பிக்கைகளும் காலப் போக்கில் பழங்கதைகளாகின. அதற்கு ஆன்மீகத்தின் சரிவு ஒரு மிக முக்கிய காரணம் என்றாலும் வேறு சில வரலாற்றுக் காரணங்களும் இருந்தன. கிறிஸ்துவ மதத்தைச் சார்ந்த ரோமானியச் சக்கரவர்த்தி தியோடோசியஸ் தன் ஆதிக்கத்திற்குட்பட்ட எகிப்தின் பழங்கால வழிபாட்டு முறைகளை கி.பி 379-380 களில் சட்டபூர்வமாக நீக்கி ஆணையிட்டான். பழங்கால எகிப்திய கோயில்கள் பல, அவனது பிரதிநிதியான சைனிஜியஸ் என்பவனால் அழிக்கப்பட்டன. பெரும்பாலான சிலைகள் உடைக்கப்பட்டன. பழங்கால வழிபாட்டு முறைகளைப் பின்பற்றுபவர்கள் தண்டிக்கப்பட்டனர். முன்பே பலவீனமாக இருந்த அந்த மத வழிபாடுகளுக்கும், நம்பிக்கைகளுக்கும் அது மரண அடியாகி விட்டது.

ஆனால் ஆழமாக ஒரு தேசத்தில் பதிந்திருந்த எதையுமே எந்த சக்தியுமே முழுமையாக அழித்து விட முடியாது என்பதால், இருபதாம் நூற்றாண்டின் முன் பகுதியில் எகிப்திற்கு ஞானம் தேடி வந்த பால் ப்ரண்டனால் இன்னும் மிஞ்சி இருந்த அந்த வழிபாட்டுச் சுவடுகளை, சிதிலமாகி இருந்த பழம்பெரும் கோயில்களில், காண முடிந்தது. முன்பு குறிப்பிட்டது போல அந்தப் பழைமையான ஆன்மீக அலைகளை அந்த இடங்களில் அவரால் உணர முடிந்தது.

இறக்கும் போது அறிய முடிவதை இருக்கும் போதே அறிந்து அதை முழுமையாக வாழ்க்கைக்குப் பயன்படுத்திக் கொள்ளும் கலையை அறிந்திருந்த ஓசிரிஸ் தீட்சை பெற்றவர்கள் தாங்கள் எடுத்துக் கொண்டிருந்த ரகசிய பிரமாணத்தை மீறாமலேயே

அந்த ஞானத்தைப் பெறும் வழியைக் கோடிட்டுக் காட்டி விட்டுச் சென்றிருந்தனர்.

பழங்கால எகிப்தியர்களின் எழுத்து முறை வித்தியாசமானது. அந்த எழுத்துகள் சிறிய சித்திரங்கள் போன்றவை. அந்த எழுத்து முறை 'சொல், தெரிவி, மறை' என்ற கோட்பாடுகளைக் கொண்டது. எடுத்த எடுப்பில் பார்த்தால் முதலாவதாக, பாமர மக்கள் புரிந்து கொள்கிறதாக, பேச முடிந்ததாக இருக்கும். பாமரர்கள் அதற்கு மேல் அதிலிருந்து எதையும் அறிய முடியாது. இரண்டாவதாக, சற்று அதிகமாக அறிந்தவர்கள், அறிவுக்கூர்மை உடையவர்கள் மாத்திரமே அறிந்து கொள்ளக்கூடியதாக இருக்கும். அவர்களுக்கு மட்டுமே கூடுதல் தகவல்கள் தெரிவிப்பது போல் இருக்கும். மூன்றாவதாகவும் ஒரு மறைந்த பொருள் அதற்கு இருக்கும். அந்த மறைபொருளைத் தீட்சை கொடுக்கும் தகுதி உள்ள மத குருமார்களும், தீட்சை பெற்றவர்களும் மட்டுமே அறிய முடிந்ததாக இருக்கும். அது பாமரருக்கும் புரியாது, படித்தவர்களுக்கும் புரியாது.

அந்த எழுத்துகளை அவர்கள் 'இறைவனின் சொற்கள்' என்றழைத்தார்கள். அந்த எழுத்து முறை இறைவனால் அளிக்கப்பட்டது என்று அவர்கள் நம்பியது ஒரு காரணம் என்றால், இன்னொரு காரணம் பாமரர்களுக்கும், வெறுமனே படித்தவர்களுக்கும் மறைந்திருக்கும் அந்த மூன்றாவது அறிய முடியாத அர்த்தம்.

அந்தக் காலத்திலேயே அப்படி இருந்த அந்த எழுத்து முறை ரோமானியர்களின் ஆதிக்கத்தில் எகிப்து வந்தவுடன் மறையத் தொடங்கியது. அவர்கள் கிரேக்கத்திற்கே முக்கியத்துவம் கொடுத்தார்கள். கிரேக்க மொழி அறிந்தவர்களுக்கே அரசாங்க உத்தியோகம் தரப்பட்டது. பயிற்று மொழியாகக் கிரேக்கமே மாற ஆரம்பித்தது. பழங்கால எகிப்திய மொழியை அறிந்த மத குருமார்கள் புறக்கணிக்கப்பட்டனர். ஹீலியோபொலிஸ் நகரத்தில் இருந்த எகிப்திய புராதன புனிதக் கல்லூரி இழுத்து மூடப்பட்டது. எகிப்தின் புராதன எழுத்து முறையில் தேர்ச்சியும் ஈடுபாடும் கொண்டிருந்த ஒருசிலர் மட்டும் ரகசியமாக அதைப்





படித்துக் கொண்டிருந்தார்களே தவிர மற்றவர்கள் அதனைக் கைவிட்டார்கள்.

இது நடப்பதற்குப் பல நூறு ஆண்டுகளுக்கு முன்பே ஹெர்மிஸ் என்ற எகிப்திய தீர்க்கதரிசி எழுதி விட்டுப் போயிருந்தார்: ''எகிப்தே, எகிப்தே! புனித பூமியான நீ கடவுள்கள் இல்லாத இடமாக ஆக்கப்படுவாய். உன் மதம் கதைகளில் மட்டுமே சொல்லப்படும் மதமாகவே ஒரு நாள் மாறும். அந்த நாளில் உன்னுடைய எழுத்துகளின் உண்மையான பொருள் அறியாமல், அறிய முடிந்ததையே பொருளாகச் சொல்வார்கள். மத அடையாளங்களையே கடவுளாக வணங்கும் தவறு நடக்கும். சைத்தான்களை வணங்கும் தேசமாக உன்னைக் குற்றம் சாட்டுவார்கள்.'' அவர் எழுதியது போலவே எகிப்தில் பிற்காலத்தில் அத்தனையும் நடந்ததை வரலாறு பதிவு செய்தது.

இறைவனின் மொழியாக எகிப்தியர்கள் நம்பிய அந்த மொழி, உபயோகிப்பவர்கள் இன்றி மறைந்து போனாலும், அந்த ஏடுகள் அழிக்கப்பட்டாலும், கோயில்களின் சுவர்களில் எழுதி வைக்கப்பட்டிருந்த அந்த எழுத்துகளை எதிர்ப்பாளர்களாலும், காலத்தாலும் கூட அழித்து விட முடியவில்லை. சிதிலமடைந்த கோயில்களில் அழியாத வார்த்தைகளாய் அவை தங்கிப் போனது தான் ஆச்சரியம்.

காலத்தின் ஓட்டத்தில் மறைந்து போன மொழியைப் புதுப்பிக்க விதி அனுப்பிய ஆள் போல சுமார் 1500 ஆண்டுகள் கழித்து நெப்போலியன் எகிப்தின் மீது படை எடுத்தான். நெப்போலியனின் படையெடுப்பைத் தொடர்ந்து வந்த மேலைநாட்டு மேதைகள் ஒருசிலர் பண்டைய எகிப்திய மொழியில் ஆர்வம் காண்பிக்க ஆரம்பித்தார்கள். மூன்று முகம் கொண்ட அந்தப் பண்டைய மொழி அவர்களுக்குக் கடினமானது, முற்றிலும் புதியது என்றாலும் அவர்கள் பெரும் முயற்சி எடுத்துக் கொண்டு மொழி பெயர்க்க ஆரம்பித்தார்கள். அவர்களால் பாமர மக்கள் புரிந்து கொண்ட முதல் படி அளவு தான் அறிய முடிந்தது என்றாலும், பிற்காலத்தில் ஓரளவு இரண்டாவது படி அளவு கூடுதலாகவும் அறிந்து கொள்ள முடிந்தது. மூன்றாவது பரிமாணம் அன்று போலவே இன்றும்

புரியாத புதிராகவே தங்கிய போதும் அந்த மொழி புனர்ஜென்மம் எடுத்தது அந்த மொழி ஆர்வலர்கள் தயவில் தான்.

அந்த முயற்சியில் 'இறந்தவர்களின் புத்தகம்' (The Book of the Dead)என்ற புத்தகம் புரிந்த அளவில் மொழி பெயர்க்கப் பட்டது. இதில் இறந்த பின்பு அறிய வேண்டிய அல்லது செய்ய வேண்டிய விஷயங்களாக எகிப்தியர்கள் நிறைய சொல்லி இருக்கிறார்கள்.

இறப்பிற்குப் பிறகும் மனிதன் இல்லாமல் போய் விடுவதில்லை; அவன் அழியாத ஆன்மா என்று நம்பி வந்த எகிப்தியர்கள் இறந்த பின்னும் அவனுக்கு வழி நடத்தக் கூடிய சில விஷயங்களைப் பிரமிடுகள் காலத்திலேயே அவற்றின் உட்சுவர்களில் நிறைய எழுதி வைத்தனர். அவை பிரமிடு நூல்கள் (Pyramid Texts)என்றழைக்கப்பட்டன. இதில் எழுத்துகள் மிகக் கடினமானவையாக இருந்தன. இவை அரசர், அரசியர்களுக்கு மட்டுமே உபயோகப்படுத்தப்பட்டன. காலப்போக்கில் சவப் பெட்டி நூல்கள் (Coffin Texts) உருவாகின. இவை அரசர், அரசியர் தவிர பிரபுக்கள், உயரதிகாரிகள் மற்றும் முக்கியஸ்தர்களுக்காகவும் சவப்பெட்டியில் எழுதி வைக்கப்படுபவையாக இருந்தன. காலம் செல்லச் செல்ல அறிஞர்கள், ஆன்மீக நாட்டம் உடையவர்கள், செலவு செய்யத் திராணி உள்ளவர்கள் அனைவருக்குமாக 'இறந்தவர்களின் புத்தகம்' (The Book of the Dead) உருவாகியது. இது முதலிரண்டை விட எளிமையாக இருந்தது. அந்தப் புத்தகத்தைப் சவப்பெட்டியில் பிணத்துடன் வைத்துப் புதைத்தனர்.

இறந்தவர்களின் புத்தகத்தில் ஒருவரைக் கட்டுப்படுத்தக் கூடிய வசிய மந்திரங்கள் நிறைய இருந்தன. அத்துடன் ஆன்மீகப் பொருள் பொதிந்த பல வாசகங்கள் இருந்தன. இறந்தவர்களின் புத்தகம் பொதுவான ஒன்றாக இருக்கவில்லை. எகிப்தியர்களின் பழைமை வாய்ந்த மந்திரங்கள் ஏராளமாக இருந்தன. அவற்றில் சிலவற்றைத் தேர்ந்தெடுத்து அந்தப் புத்தகத்தை உருவாக்கினர். சிலர் தங்களுக்கு இறந்த பின் தேவைப்படும் என்று ஒருசில மந்திரங்கள் உயிரோடு இருக்கையிலேயே தேர்ந்தெடுத்து உருவாக்கிக் கொள்வதும் அக்காலத்தில் இருந்ததாகத் தெரிகிறது.





அந்தப் புத்தகத்தில் இறந்த ஒவ்வொருவரும் தன்னை ஓசிரிஸாகவே பாவித்து சொல்லக் கூடிய வாசகங்கள் நிறைய இருந்தன. ஒவ்வொருவருள்ளும் ஓசிரிஸின் தன்மை இருப்பதாக எகிப்திய ஞானிகள் நம்பினார்கள். ஓசிரிஸ் துண்டுபட்டது போல மனிதன் தன் பலவீனங்களாலும், அறியாமையாலும், உணர்ச்சிகளின் மிகுதியாலும் பல துண்டங்களாகப் பிரிந்து அல்லல்படுகிறான். பின் ஞானத்தால் அந்தப் பிரிவினைகள் நீங்கி முழு மனிதனாகி இறை சக்தியுடன் ஒருமைப்பட்டு புது சக்தியுடன் உயிர்த்தெழுவதாக வாசகங்கள் சொல்லப்படுகின்றன.

இறந்த மனிதர்களுக்குக் கடைசி வழித்துணையாக எழுதப்பட்ட அந்த வாசகங்களிலும் இன்னும் உயர்வான ஒரு மறை பொருள் அல்லது சூட்சுமம் இருக்கலாம். அவை அக்காலத்திலேயே மறைக்கப்பட்டன என்கிற போது பல்லாயிரக்கணக்கான ஆண்டுகள் கழிந்து மொழி பெயர்க்கையில் பிடிபட வாய்ப்பில்லை. ஆனால் மொழி ஆர்வலர்களுக்குப் புலப்படாதது. ஞான ஆர்வலர்களுக்கு உண்மையான ஞான வேட்கை மூலம் புலப்படலாம். இந்த விஷயத்தில் கால ஓட்டம் எந்த மாற்றத்தையும் ஏற்படுத்தி இருக்க வாய்ப்பில்லை. அன்றும் இன்றும் இறைவனின் சொற்களில் மாற்றம் இல்லை. ஆனால் புரிந்து கொள்வது எல்லோருக்கும் எளிதாக இருக்கவில்லை. அலெக்சாண்டிரியாவில் வாழ்ந்த ப்ளோட்டினஸ் என்ற கிரேக்க ஞானி இது பற்றிக் குறிப்பிடுகையில் சொல்கிறார்:

''உண்மையின் தீவிரத் தேடலுக்குப் பதிலாக இந்த வாசகங்களை வழங்கிய எகிப்திய ஞானிகள் அந்த வாசகங்களுக்கு விரிவான அர்த்தத்தை விளக்கி விடவில்லை. தேடலுடன் செல்லும் மனிதர்கள் சித்திர எழுத்துகளில் உள்ள அந்த நிரந்தர வாசகங்களை எடுத்துக் கொண்டு அலசி தாங்களாகவே விடை கண்டு பிடித்து தெளிவடைய வேண்டி இருக்கிறது.''

நமக்குள் இருக்கும் ஓசிரிஸை நாம் அடையாளம் கண்டு கொண்டு தீவிரமாகத் தேட ஆரம்பிக்கும் போது நாமும் எல்லா ரகசியங்களுக்கும் விடை கண்டுபிடிக்கலாம்.

# கர்னாக் கோயில்களில் ரகசியக் குறிப்புகள்



பால் ப்ரண்டன் எகிப்தின் பாழடைந்த பழம் கோயில்களில் பயணம் செய்ததில் ஆன்மீகம் மட்டுமல்லாமல் வேறு பல விஷயங்களிலும் அன்றைய எகிப்தியர்களின் பாண்டித்தியம் இருந்ததை அறிய முடிந்தது. குறிப்பாக டெண்டேரா என்ற கோயிலின் கூரையில் பன்னிரண்டு ராசிகளின் படங்களையும், குறிப்புகளையும் அவரால் காண முடிந்தது. அவற்றில் இருந்த பல புள்ளி விவரங்கள், பண்டைய எகிப்தியர்கள் ஜோதிட சாஸ்திரத்திலும் பெரும் புலமை பெற்றிருந்தார்கள் என்பதைப் பறைசாற்றின.

டெண்டேரா கோயிலிற்கு அடுத்தபடியாக கர்னாக் நகரக் கோயிலை நோக்கி பால் ப்ரண்டன் புறப்பட்டார். போகும் வழியில் நைல் நதியின் பேரழகை ரசித்துக் கொண்டே சென்ற அவர், பழம் எகிப்திய நாகரிகத்திற்குச் சாட்சியாக இருந்த புண்ணிய நதி எத்தனை எழுச்சிகளையும் வீழ்ச்சிகளையும் சந்தித்திருக்கும் என்று வியந்தார்.





ஒரு காலத்தில் எகிப்திய குருமார்கள் ஒரு நாளில் இரு முறை அந்த நதியில் குளிப்பதை வழக்கமாகக் கொண்டிருந்தார்கள் என்பதை நினைவு கூர்ந்தார். இதே போலத் தான் இந்தியாவிலும் பிராமண குருக்களும் கங்கை, கோதாவரி போன்ற புண்ணிய நதிகளில் இருமுறை குளித்துத் தங்களைத் தூய்மைப்படுத்திக் கொண்டனர் என்பதை முந்தைய இந்தியப் பயணத்தின் போது கண்டிருக்கிறார். எகிப்தியர்களும், இந்தியர்களும் இந்த ஒரு விஷயத்தில் மிகவும் ஒத்துப் போவதாக அவருக்குத் தோன்றியது. காலையும் மாலையும் அந்தப் புண்ணிய நதிகளில் நீராடுவதன் முக்கிய நோக்கம் மற்றவர்களுடன் பழகும் போது அவர்களிடமிருந்து தொற்றிக் கொள்ளும் ஒவ்வாத சில சூட்சுமப் பாதிப்புகளை அவ்வப்போது நீக்கிக் கொள்ளத் தான். வெளிப்பார்வைக்குத் தெரியாத, விரும்பத்தகாத பாதிப்புகளையும், மற்றவர்களின் தேவையற்ற தாக்கங்களையும் அந்தப் புண்ணிய நதிகள் நீக்கி, அவர்களைத் தூய்மைப்படுத்தும் சக்தி அந்த புண்ணிய நதிகளுக்கு இருப்பதாக அவர்கள் நினைத்தார்கள்.

எகிப்தின் தெற்குப் பகுதியில் இருந்த கர்னாக் நகரம் வரலாற்றுச் சிறப்பு மிக்கது. ஹோமர் 'நூறு கதவுகளின் நகரம்' என்று வர்ணித்த திபெஸ் நகரம் அழிந்து பின் கர்னாக் நகரம் உருவாகியது. ஒரு காலத்தில் மத குருமார்களின் தலைமை இடமாகக் கோலோச்சிய கர்னாக் நகரத்தில் தான் இடிபாடுகளுக்கிடையே எகிப்தின் மிகப் பெரிய கோயில்கள் காணக் கிடைக்கின்றன. மிகப் பரந்த விஸ்தீரணத்தில் நிறைய கோயில்கள் அடுத்தடுத்து உள்ளன. அந்தக் கர்னாக் கோயில்கள் தான் எகிப்தின் மற்ற பல கோயில்களுக்கும் தலைமையகமாக இருந்திருக்கிறது. எனவே தான் பால் ப்ரண்டன் ஆவலுடன் அந்தக் கோயில்களைக் காணச் சென்றார்.

லக்சார் என்ற இடத்திலிருந்து கர்னாக் கோயில் வரை இருக்கும் சுமார் மூன்று மைல் தூரம் வழிநெடுக சிறிய ஆட்டுத்தலை உடைய ஸ்பிங்க்ஸ் சிலைகள் சாலையின் இரண்டு பக்கங்களிலும் இருந்தன. ஒரு காலத்தில் அது பிரமிக்கத்தக்க காட்சியாக இருந்திருக்கலாம் என்றாலும், பால் ப்ரண்டன் சென்ற காலத்தில் அவற்றில் பெரும்பாலானவை பல நிலைகளில் உடைந்து அரைகுறையாகப்

பழங்கதையைப் பறைசாற்றிக் கொண்டிருந்தன. அந்தச் சிலைகள் உடைந்து மண்ணில் புதையுண்டு அரைகுறையாய் எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தன.

கர்னாக் கோயில்களின் பிரம்மாண்டம் தொலைவிலேயே அவரைப் பிரமிக்க வைத்தது. கால ஓட்டத்தில் இயற்கையாலும், வெறியர்களாலும் சிதிலமாக்கப்பட்டிருந்த போதும் இன்னும் அந்தப் பழைய அற்புதம் அங்கு முற்றிலும் அழிக்கப்பட்டிருக்கவில்லை. இன்றே இப்படி இருக்கிறது என்றால் ஒரு காலத்தில் அந்தக் கோயில்கள் எப்படி இருந்திருக்க வேண்டும் என்று, பிரமிப்புக் கலையாமலேயே கோயில்களின் முகப்பை அவர் அடைந்தார்.

முதலாவதாக அவர் கண்டது கோன்ஸு தெய்வக் கோயிலின் வெளிப் பிரகாரம். கோன்ஸு கழுகுத் தலை கொண்ட தெய்வம். முழு மதியைத் தன் தலைக்கு மேல் சுமந்து கொண்டிருக்கும் தெய்வம். புது வாழ்க்கையைத் தரக்கூடிய சக்தி வாய்ந்த தெய்வமாக அது எகிப்தியர்களால் கருதப்பட்டது. அது அவர்களால் இரவின் தெய்வமாகவும், நோய் தீர்க்கும் கடவுளாகவும் கூட நம்பப்பட்டது. இங்கும் ஓசிரிஸ் கோயிலைப் போலவே எல்லோரும் வந்து தொழுது விட்டுப் போகக் கூடிய வெளிப் பிரகாரம், தீட்சை பெறுதல் நடக்கும் உள் சன்னதி இரண்டும் இருந்தன.

வெளிப்பிரகாரத்தின் பிரம்மாண்ட தூண்களிலும், சுவர்களிலும் ஏராளமான படங்கள், சிற்பங்கள் ஆகியவை அக்கால வழிபாட்டு நம்பிக்கைகளைத் தெரிவிப்பனவாக இருந்தன. அவற்றை எல்லாம் மிகுந்த கவனத்தோடு பால் ப்ரண்டன் ஆராய்ந்தார். உள் சன்னதிக்கு உள்ளே செல்லக்கூடிய பிரகாரத்தின் வெளியே கிழக் குச் சுவரில் இருந்த மிகச்சிறிய சிற்பங்கள் அவர் கவனத்திற்கு வராமலேயே போயிருக்கும் - அவர் எகிப்திற்குள் வந்தவுடனேயே வணங்கிப் பிரார்த்தித்த ஸ்பிங்க்ஸ் சிற்பம் அவர் கண்களில் படாமல் இருந்திருந்தால். ஏனென்றால் மிகச்சிறிய சிற்பங்களும், சித்திரங்களும் ஏராளமாக எல்லா இடங்களிலும் இருப்பதால் எல்லாவற்றையுமே அலசுவது என்றால் அவர் வருடக்கணக்கில் அங்கே கழிக்க வேண்டி இருந்திருக்கும். அதுவும் சுவரின்





கீழ்ப்பகுதியில் இருந்திருந்த அந்தச் சிற்பங்கள் அவர் பார்வையில் படாமல் போயிருக்கக் கூடிய சாத்தியங்கள் அதிகம்.

ஸ்பிங்க்ஸ் அவர் கவனத்தைக் கவர, அவர் அந்தச் சிற்பங்களை ஆராய்ந்தார். அந்தச் சிற்பங்கள் மூன்று வரிசைகளில் இருந்தன. முதல் வரிசையில் நான்காம் ராமெசஸ் என்ற சக்கரவர்த்தி, இரண்டு உருவங்கள் செதுக்கப்பட்டுள்ள ஒரு சிலையை ஆமெண்ட் தேவதைக்குத் தருகிறான். இந்த ஆமெண்ட் தேவதை இறந்தவர்கள் ஆவியுலகில் வரவேற்கும் தேவதையாகக் கருதப்படுகிறது. அந்த இரண்டு உருவங்களில் ஒன்று ஓசிரிஸ் கடவுளின் மகனான ஹோரஸ். ஹோரஸின் கிரீடத்தில் சூரியனும், நாகமும் உள்ளன, அவன் இடது கை முழங்கால் மீது இருக்க, வலது கை முகத்தருகே இருக்கின்றது. அவனது ஆட்காட்டி விரல் அவன் மூடிய உதடுகளில் இருக்கின்றது. ஹோரஸிற்குப் பின்னால் ஸ்பிங்க்ஸ் இருக்கிறது.

அந்தச் சிலையைக் கையில் வாங்கிக் கொண்டிருக்கிற ஆமெண்ட் தேவதையின் வலது கை, சக்கரவர்த்தியை நோக்கி நீண்டு கொண்டிருக்கிறது. அவளுடைய கையில் கைப்பிடியுள்ள ஒரு சிலுவை இருக்கிறது. அந்தச் சிலுவையின் நுனியை அவள் சக்கரவர்த்தியின் இரு புருவங்களுக்கு மத்தியை நோக்கிக் காட்டிக் கொண்டிருக்கிறாள்.

எகிப்திய கோயில்களின் உள்ளே இருக்கும் ரகசியத் தீட்சை மற்றும் ரகசிய வழிபாடுகள் நடக்கும் பகுதியைச் சுற்றி இருக்கும் பகுதிகளில் உள்ள சிற்பங்களும் சித்திரங்களும் எப்போதுமே ஆழ்ந்த பொருள் கொண்டதாக இருக்கும். எனவே பால் ப்ரண்டன் அந்த வித்தியாசமான சிற்பங்களை நிறைய நேரம் ஆராய்ந்தார். அவற்றின் பொருளையும் கண்டுபிடித்தார்.

இந்தச் சிற்பத்தின் மிக முக்கிய பகுதி ஆமெண்ட் தேவதையின் கையில் இருந்த கைப்பிடியுள்ள சிலுவை. உண்மையில் அது ரகசியங்களின் சாவி என்று கருதப்படுகிறது. அந்தச் சாவியைச் சக்கரவர்த்தியின் இரு புருவ மத்தியில் காண்பிப்பது சக்கரவர்த்தியின் நெற்றிக்கண் அல்லது ஞானக்கண்ணை

அவள் திறக்க இருக்கிறாள் என்பதன் பொருள். இந்துக்கள் போல எகிப்தியர்களும் நெற்றிக்கண் அல்லது சகலத்தினையும் அறிய முடிந்த ஞானக்கண் அல்லது ஆக்ஞ சக்ரா பகுதியை நம்பினார்கள். ஹோரஸின் உதடுகள் மீது இருக்கும் வலது சுட்டு விரலும், எல்லா ரகசியங்களையும் காக்கும் காவல் தெய்வமான ஸ்பிங்க்ஸும், ரகசியம் காக்கும் முத்திரைகள். தானறிவதை என்றும் வெளியிடாமல் ரகசியம் காப்பேன் என்று அந்த இரண்டுமுள்ள சிலையை ஆமெண்ட் தேவதைக்குத் தருவதன் மூலம், சக்கரவர்த்தி ரகசிய பிரமாணம் எடுத்துக் கொள்கிறான். இங்கும் அவன் காக்க இருக்கும் ரகசியம், சாதாரணமாக ஒருவன் இறப்பிற்குப் பின் அறிய முடிந்த ரகசியங்களே. அதைத் தான் மரண தேவதையான ஆமெண்ட் கையில் அந்த ரகசிய சாவியான கைப்பிடி உள்ள சிலுவை உணர்த்துகிறது.

இரண்டாவது வரிசையில் சக்கரவர்த்தி, ஹோரஸ் தெய்வத்திற்கும், ஞானத்திற்கும், ரகசியக் கல்விக்கும் அதிபதியான தோத் என்ற கடவுளுக்கும் நடுவில் நிற்கிறான். தோத் சந்திரனுக்கான தெய்வமும் கூட. இரு கடவுளரும் இரு பாத்திரங்களை அவன் தலைக்கு மேல் சுமந்து கொண்டிருக்கிறார்கள். பாத்திரங்களில் இருந்து தண்ணீருக்குப் பதிலாகக் கைப்பிடி உள்ள சிலுவைகள் சக்கரவர்த்தி மீது விழுந்து கொண்டிருக்கின்றன. ரகசிய தீட்சை என்றுமே இரவில் ஆரம்பித்து அதிகாலையில் சூரிய கிரணத்துடன் முடியும் என்று முன்பே சொல்லி இருந்தோம். இதிலும் சந்திரக் கடவுளும், தலையில் சூரியனை வைத்திருந்த ஹோரஸும் அதைச் சூட்சுமமாகத் தெரிவிக்கின்றன. பல ரகசியங்களை அறியும் ஞானமும், பெரும் சக்தியும் அந்த இரு கடவுளர்களிடமிருந்தும் சக்கரவர்த்தி மீது பொழிவதை இரண்டாம் வரிசை காண்பிக்கின்றது.

மூன்றாவது வரிசையில் தீட்சை அளிக்கப்பட்ட சக்கரவர்த்தி ராமெசஸ் வேறிரண்டு தேவதைகளால் கடவுளர்களின் அரசனாக வும், சுயம்புவாகவும் எகிப்தியர்களால் கருதப்படும் ஆமென்-ரா கடவுளிடம் ஒரு சிலையைத் தருவதாகக் காட்டப்படுகிறது. அதில் தலையில் சிறகை வைத்து அமர்ந்த நிலையில் ஒரு தெய்வம்





உள்ளது. அது தான் உண்மைக் கடவுள். எகிப்தியர்கள் பண்டைக் காலத்தில் உண்மையை மிக லேசான இறகோடு ஒப்பிட்டார்கள். (இறந்தவர்கள் புத்தகத்திலும் கூட நியாயத் தீர்ப்பு நாளில் ஒரு பெரிய தராசில் உண்மை என்னும் இறகை ஒரு தட்டிலும் மனித மனத்தை இன்னொரு தட்டிலும் வைத்து எடை போடும் சித்திரங்கள் காட்டப் படுகின்றன. உண்மை என்றும் லகுவானது என்று காட்டத் தான் மென்மையான இறகைச் சின்னமாக வைத்தார்களோ?)

அந்தச் சிலையைத் தருவதன் மூலம், தான் இனி என்றென்றும் மனதாலும், செயலாலும் உண்மையாக நடந்து கொள்வதாகச் சக்கரவர்த்தி உத்தரவாதம் அளிக்கிறான். இதில் இன்னொரு சூட்சுமமும் உள்ளது. ஆமென்-ரா ஏழை எளியவர்களிடம் இரக்கம் கொண்ட கடவுளாகவும், அவர்கள் பிரார்த்தனைக்கு உடனடியாகச் செவி சாய்க்கும் கடவுளாகவும் இருக்கிறது. அந்தக் கடவுளிடம் இந்த உத்தரவாதம் அளிப்பது அந்த ஏழை எளிய மக்களைக் காப்பாற்றுவதிலும் தான் உண்மையாக நடந்து கொள்வேன் என்ற உத்தரவாதமாகவும் அது இருக்கலாம்.

ரகசிய தீட்சை சக்கரவர்த்திக்கும் அளிக்கப்படும் புதிய முறையை பால் ப்ரண்டன் கர்னாக்கில் கோன்ஸு கோயிலில் கண்டு பிடித்ததைப் பார்க்கையில், எகிப்தியர்களின் அக்காலத் தொலை நோக்கு எந்த அளவு முன்னேறி இருந்தது என்றே நம்மை வியக்க வைக்கிறது. தனக்கும் தன் மக்களுக்கும் உண்மையாக இருக்காத அரசனால், சக்தியும் ஞானமும் இல்லாத அரசனால் அவன் நாட்டுக்கும், பிரஜைகளுக்கும் எந்த நன்மையும் ஏற்பட்டு விட முடியாது என்பதை அவர்கள் உணர்ந்து வைத்திருந்தார்கள் என்றே தோன்றுகிறது. காலப் போக்கில் இந்த தீட்சை முறைகளும் வெறும் சம்பிரதாயமாக மாறி இருக்கக் கூடும் என்றாலும், ஆரம்ப காலத்தில் அந்தத் தூய்மையும், வாய்மையும் காக்கப் பட்ட காலத்தில் ஓர் உன்னத நாகரிகத்தின் அடையாளமாக இது இருந்திருக்கும் அல்லவா?


ட்டாளமி

# ரகசிய அறைகள் ஏன்?

கர்னாக் கோயில்கள் ஓரிரு நாட்களில் பார்த்து முடிகிற அளவில் இருப்பதாக பால் ப்ரண்டனுக்குத் தோன்றவில்லை. ஏனென்றால் அவர் அங்குள்ள எதையும் மேற்போக்காய்ப் பார்த்து விட்டுப் போக வரவில்லை. சென்ற அத்தியாயத்தில் சக்கரவர்த்தியின் தீட்சை முறை பற்றிய செய்தி ஒரு சுவரின் கீழ்த்தளத்தில் மூன்று வரிசைகளில் இருந்தது போல, எங்காவது ஒரு மூலையில் இருந்து அதைக் கவனிக்காமல் விட்டு விடுவோமோ என்ற எண்ணத்தில் அவர் கர்னாக் பகுதியில் சில நாட்கள் தொடர்ந்து தங்கி இருந்து, பகலும் இரவும் தொடர்ந்து அந்த கோயில்களினுள்ளே சஞ்சரித்துக் கொண்டிருந்தார்.

பகலில் வந்த போது அவரை அடுத்ததாகக் கவர்ந்தது மேற்குப் புறத்தில் இருந்த ஓசிரிஸின் சிறிய கோயில். ட்டாளமி (Ptolemy) என்ற கிரேக்க அறிஞர் ஓசிரிஸ் கடவுள் முன் அழைத்துச் செல்லப் படுவது போன்ற சித்திரங்கள் முகப்பில் வரையப்பட்டிருந்தன. அந்த கோயிலின் முன் வாசல் மரக்கதவு இழுத்து மூடப்பட்டு பூட்டப்பட்டு இருந்தது.

பால் ப்ரண்டன் எகிப்திற்கு வரும் முன்பே எகிப்தின் சுற்றுலா புத்தகங்கள் பல வாங்கிப் படித்திருந்தார். அவற்றில் ஒன்று கர்னாக்கின் இந்தக் கோயிலில் பார்க்க எதுவுமில்லை, பார்க்க லாயக்கில்லை என்று எழுதி இருந்தது. அதை உறுதிப் படுத்துவது போல பூட்டப்பட்டும் இருக்கவே பால் ப்ரண்டன் அதைத் திறந்து காட்ட காவலாளியைக் கேட்டுக் கொண்டார். அதன் சாவி காவலாளியிடமும் இருக்கவில்லை. பிறகு அவர்





உரிய அதிகாரிகளிடம் சென்று திறந்து காட்ட அனுமதி கேட்க வேண்டியதாயிற்று. இது போன்ற வேண்டுகோள் அவர்களுக்கு அபூர்வமாக இருந்திருக்க வேண்டும் என்றாலும், அவர்கள் காவலாளி மூலம் சாவியைக் கொடுத்தனுப்பினார்கள்.

உள்ளே சென்ற பிறகு தான் அது பூட்டப்பட்டிருந்ததன் காரணம் அவருக்கு விளங்கியது. உள்ளே அங்கங்கே தரையில் குழிகள், ஓட்டைகள் இருந்தன. ஓட்டைகள் வழியாக பாதாள அறைகள், ரகசியப் பாதைகள் எல்லாம் தெரிந்தன. அவற்றிலும் பல இடிபாடுகளால் நிரம்பி இருந்தன. ஓட்டைகள் இல்லாத மற்ற இடங்களிலும் இருந்த தூசியையும், மண்ணையும் கண்ட போது, இந்த இடம் ஆள் நடமாட்டம் கண்டு பல்லாண்டுகளாகி இருக்க வேண்டும் என்பது புரிந்தது. சிறிது ஏமாந்தால் அந்த ஓட்டைகள் வழியாக அந்த இடிபாடுகளுக்குள் சிக்கிக் கொள்ள நிறையவே வாய்ப்பிருந்தது.

ரகசிய தீட்சை பெறும் இடங்களிற்குச் செல்லும் பாதைகள் கூட இருட்டாக இருந்தன. சுவரில் இருந்த ஓரிரு துளைகள் வழியாக மெல்லிய நிலவொளி பரவி இருந்தது. அந்த காலத்தில் அப்படியும் இருந்திருக்க வாய்ப்பில்லை. முழுக் கும்மிருட்டாக இருந்திருக்க வேண்டும். உள்ளே ரகசியப் பாதையிலும் சரி, ரகசிய தீட்சை நடைபெறும் இடங்களிலும் சரி இப்போதும் ஒளி இல்லை. ஓட்டைகள், இடிபாடுகள் இருந்ததால், பால் ப்ரண்டன் டார்ச் விளக்கின் ஒளியில் தான் அந்த இடங்களைப் பார்த்துச் செல்ல வேண்டியதாக இருந்தது.

ரகசிய தீட்சை மற்றும் வழிபாடுகள் நடக்கும் இடங்களிற்குச் செல்லும் முகப்பிலேயே இருபதிற்கும் மேற்பட்ட நாகங்கள் படையெடுத்து நிற்பது போன்ற சிற்பங்கள் சுவர்களில் தத்ரூபமாகத் தெரிந்தன. ரகசிய அறைகள், பாதாள அறைகள், அறைக்குள் அறைகள் என்று உள்ளிருந்த இடங்கள் எல்லாம் கும்மிருட்டில் இருந்தன. ஒரு காலத்தில் இந்த இடங்களில் ஆன்மீக வேட்கையோடு வருபவர்கள் தங்களைத் தயார்ப்படுத்திக் கொண்டு தீட்சைக்காக வந்திருக்க வேண்டும். அவர்களைத் தக்க குருமார்கள் இதே

வழிகளில் வழி நடத்திச் சென்றிருக்க வேண்டும் என்றெல்லாம் தோன்ற ஒரு கணம் பால் ப்ரண்டன் அந்த காலத்திற்கே பயணித்து விட்டார் என்றே சொல்ல வேண்டும்.

பெரும்பாலும் ரகசிய தீட்சை நடைபெற்றது முக்கியக் கடவுளின் கர்ப்பக்கிரகத்தைத் தொட்டாற்போன்ற ரகசிய அறைகளிலோ, இல்லை மேல் தளத்தில் இருந்த சிறிய கோயில்களிலோ தான். அந்த இடங்கள் ஒளியே புக முடியாத இருட்டு இடங்களாக இருந்ததற்குச் சில காரணங்கள் இருந்தன.

ஒன்று, ரகசிய தீட்சை உண்மையாகவே ஒரு ஆபத்தான முயற்சி. அதைச் செய்யும் போது சிறிது கவனக் குறைவோ, கவனப் பிசகோ ஏற்பட்டால் அதன் விளைவுகள் விபரீதமாகவே முடியும். ஓர் அறுவைச்சிகிச்சை செய்யும் போது, அதற்கு வேண்டிய பயங்கரமான கருவிகளை உபயோகிக்கும் போது திடீர் என்று வெளி ஆட்கள் வந்து கவனத்தைத் திருப்பினால் எப்படி அபாயமோ, அப்படி இந்த ஆழ்மன அதீத ஞானச் சடங்குகளிலும் அபாயம் நிகழலாம். தீட்சை பெறும் நபருக்குப் பைத்தியம் பிடிக்கலாம் அல்லது உயிரே போகலாம். தீட்சை தருபவர், பெறுபவர் இருவருமே எந்த வெளி இடையூறும், பாதிப்பும் இல்லாமல் இருந்தால் தான், நூறு சதவீதக் கவனத்துடன் முழு மனதோடு அந்தச் சடங்குகளில் ஈடுபட முடியும். அதனால் அனுமதி இல்லாத நபர்கள் அந்த இடங்களுக்கு வருவது மிகப் பெரிய தண்டனைக்குரிய குற்றமாகக் கருதப்பட்டது.

இரண்டாவது, அந்த இடங்களில் வெளியாட்கள் வர முடியாதது மட்டுமல்ல, வெளிச் சத்தம் எதுவுமே கேட்க முடியாதது மட்டுமல்ல, சுற்றுப்புறச் சூழல் எல்லாமே தற்காலிகமாக இருட்டடிப்புச் செய்யப்படுவது சீக்கிரமே ரகசிய தீட்சைக்குத் தேவையான ஓர் அரை மயக்க நிலைமைக்கு ஒருவரை அழைத்துப் போக ஏற்றதாக இருக்கிறது.

மூன்றாவதாக, அறியாமை என்ற கும்மிருட்டில் இரவில் ஆரம்பித்த அந்த தீட்சை முறை, மறுநாள் அதிகாலை மெய்ஞ்ஞானம் என்ற சூரிய கிரணங்களைக் காண வைப்பதில் முடிகிறது என்பதை





முதலிலேயே நாம் கூறியதற்கு ஏற்ப, ஓர் ஆன்மீக அடையாளச் செய்தியாக இருப்பதற்காகக் கூட அந்த இருட்டிடத்தில் அந்தத் தீட்சை தரும் வழக்கம் இருந்திருக்கலாம்.

மேலும் ரகசிய தீட்சை முறையில் ஒரு குறிப்பிட்ட காலம் தீட்சை பெறுபவரின் உடல் பிணம் போல அந்த அறையிலேயே தனியாக இருக்க வேண்டியிருக்கும். அதிகாலை சூரியோதயத்தின் போது தான் அந்த உடலை வெளியே எடுத்துச் சென்று சூரிய கிரணம் படும்படியாக வைத்து விழிப்புணர்வுக்குக் கொண்டு வருவார்கள். அப்படி இருட்டில் அந்த உடல் தனியாக இருக்கும் போது வெளியாட்கள் நுழைவதோ, அந்த உடலைத் தொடுவதோ மிக ஆபத்தானது. வாழ்வும், சாவும் அவர்கள் பொறுப்பில் இருப்பதால் மத குருமார்கள் அந்த இடங்களை உள்ளே வைத்துப் பாதுகாப்பதில் குறியாய் இருந்திருக்க வேண்டும்.

ஓசிரிஸ் கோயிலின் இடிபாடுகளுக்கிடையில் ஆழ்ந்து யோசிக் கையில் இப்படி எல்லா விளக்கங்களும் பால் ப்ரண்டனுக்குத் தெளிவாயின. தொடர்ந்த நாட்களில் பால் ப்ரண்டன் அந்தக் கோயில்களில் தனியாக, அவசரமில்லாமல் எல்லாவற்றையும் பார்த்தார். பல அரசர்கள், அரசிகள் வழிபாடுகள் நடத்தும் சிற்பங்கள், பல கடவுள்கள் பல விதமாய் வழிபாடுகள் செய்யப்படும் சிற்பங்கள், சித்திரங்கள் எல்லாம் கண்டு அக்காலத்தைக் குறித்து மேலும் ஆழமாக அறிந்தார். கர்னாக் கோயில்கள் எகிப்தின் மிக உட்புறமாக இருப்பதும், அன்றைய சுற்றுலா பயணிகள் கவனத்தை அதிகம் கவராததும், தனிமையில் அனைத்தும் எந்த தொந்தரவும் இல்லாமல் கண்டு ரசிக்கவும், சில இடங்களில் தியான நிலைக்குச் செல்லவும் கூட அவருக்கு உதவியது.

இது போன்ற எல்லையில்லாத ஆர்வத்துடன் அந்தக் கோயில்களுக்கு வந்தவர்கள் மிக மிக அபூர்வமாகவே இருந்திருப்பர். அதனால் தான் அந்த கோயில்களின் பண்டைய ஆன்மீக சக்திகள் அவருக்கு நிறையவே தங்களை வெளிப்படுத்தி இருக்குமோ?

# கர்னாக் இரவுகள்

பால் ப்ரண்டன் கர்னாக் கோயில்களை இரவு நேரங்களிலும் விடவில்லை. சில சமயம் இரவு நேரங்களில் நைல் நதியில் படகு மூலம் செல்வார். சில சமயங்களில் ஒட்டகம் மீதேறிச் செல்வார். சில சமயம் லக்சார் நகரத்திலிருந்து நடந்தே செல்வார். ஒரு நாள் பௌர்ணமி அன்று அப்படித் தான் நடந்தே சென்றார். பௌர்ணமி இரவுகள் பண்டைய எகிப்தியர்களுக்கு விசேஷமானவை. ரகசிய தீட்சைகள், ரகசிய வழிபாடுகள் ஆகியவற்றிற்கு அந்த நாள் உகந்ததாக அவர்களால் கருதப்பட்டது. அதனால் அன்று நடந்தே சென்றார். வழியில் ஆங்காங்கே விவசாயிகளின் சிறிய வீடுகள் இருந்தன. அங்கிருந்த நாய்கள் அரை மனதுடன் அவரைப் பார்த்து குரைத்தன. விவசாயிகள் சில நாட்களாக அந்தப் பகுதியில் அவரைப் பார்த்து வருவதால் அவரைச் சட்டை செய்யவில்லை.

கர்னாக் சென்றவுடன் நன்றாக உறங்கிக் கொண்டிருந்த காவலாளியை எழுப்பினார். திடுக்கிட்டு எழுந்த அவன் அவரது டார்ச் விளக்கின் வெளிச்சத்தில் சிறிது நேரம் ஒன்றும் புரியாமல் விழித்தான். காவலாளிக்குப் பணம் தந்து பிரத்தியேகமாக அவர் கவனித்துக் கொள்வதால் அவன் சங்கடப்படாமல் எழுந்து கதவினைத் திறந்து அவரை உள்ளே விட்டு மறுபடியும் உறங்கிக் கொண்டான்.

அந்த நாளில் கர்னாக் கோயில்களின் உள்ளே செல்கையில் அவர் சற்று வித்தியாசமாக ஏதோ உணர்ந்தார். சில சக்திகள் அவரைக் கவனிப்பது போலவும் அந்த இடங்களில் இருப்பது போலவும் உணர்ந்தார். கோயில்களின் கடவுளர்களும், மதகுருமார்களும் அவரையே கூர்நோக்குடன் கவனிப்பது போலத் தோன்றியது. முழு நிலவின் ஒளியில் கோயில்களின் திறந்த வெளிகள் ஜொலித்தாலும், உள்ளே மிகவும் கும்மிருட்டாகவே இருந்தது. டார்ச் வெளிச்சத்தில் சில கோயில்களை ஆராய்ந்தார். கடைசியாக ப்டா என்ற கடவுளின் கோயிலுக்கு வந்த அவர் அந்தக் கோயிலையும் ஆராய்ந்து விட்டு டார்ச் விளக்கை அணைத்து விட்டு அங்கு இருந்த ஒரு கல்லின் மீது அமர்ந்து தியானம் செய்ய ஆரம்பித்தார். அப்போது அவருக்கு





நிஜமாகவே அங்கு அவர் தனியாக இல்லை என்பது போன்ற உணர்வு பலமாக மேலோங்கியது. உண்மையில் அந்தக் கோயில் சம்பந்தப்பட்ட அந்த கால சக்திகள் இது போன்ற விசேஷ பௌர்ணமி நாட்களில் அங்கு உலாவ வருமோ?

கெய்ரோவில் இருந்த அரசு அதிகாரி ஒருவர் அவருக்குத் தெரிந்த ஒரு இங்கிலாந்து சுற்றுலா பயணியைப் பற்றிச் சொன்னது அவருக்கு நினைவுக்கு வந்தது. அந்தப் பயணி ஆன்மீகம், மந்திர தந்திரங்கள் போன்றவற்றில் எல்லாம் சிறிதும் ஈடுபாடு இல்லாத இளைஞன். எகிப்தில் சுற்றுப் பயணம் வந்த அவன் லக்சாரிற்கும் சென்றான். ஒரு மதியம் லக்சாரின் அருகில் இருந்த கர்னாக்கிற்கும், சென்ற அவன், கர்னாக் கோயிலில் ஆமென்-ரா கடவுள் கோயிலின் முன் ஹாலில் உள்ள சிற்பங்களைத் தன் காமிராவில் பல படங்கள் எடுத்துக் கொண்டான். அந்தப் படங்களை அவன் கழுவிப் பிரதிகள் எடுத்துப் பார்த்த போது அவன் அதிர்ச்சி அடைந்தான். காரணம் ஒரு புகைப்படத்தில் ஆமென்-ரா ஹாலில் இருந்த ஒரு பெரிய தூணில் சாய்ந்தபடி வாலுள்ள ஒரு மதகுரு கைகளை மார்பின் குறுக்கே கட்டிக் கொண்டு நின்று கொண்டிருந்தது பதிவாகி இருந்தது. இந்த நிகழ்ச்சி அந்த இளைஞனை முற்றிலும் மாற்றி அவன் இது போன்ற விஷயங்களில் பின்னர் பேரார்வம் காட்ட ஆரம்பித்தான் என்று அந்த அதிகாரி பால் ப்ரண்டனிடம் கூறியிருந்தார்.

தன்னைச் சுற்றி சில அமானுஷ்ய சக்திகள் இருப்பது போலத் தோன்றினாலும் அவை பிரமிடினுள் ஏற்படுத்திய திகிலை அவரிடம் ஏற்படுத்தவில்லை. அவை அவரைத் தொந்தரவு செய்தது போலவும் இருக்கவில்லை. அதனால் அவருக்குத் தியானத்தில் ஆழ்வது சுலபமாக இருந்தது. சுமார் அரை மணி நேரம் அவர் தியான நிலையில் இருந்திருப்பார். திடீரென்று ஒரு திரை அவர் கண்களின் முன்னே விழுந்தது போலத் தோன்றியது. அவருடைய கவனம் தானாக அவருடைய இரு புருவங்களுக்கு மத்தியில் செல்ல, அவரை ஓர் அமானுஷ்ய ஒளி சூழ்ந்தது. திடீரென்று அருகில் ஒரு மனிதன் நிற்பதை உணர்ந்தார். அந்த மனிதனைக் கூர்ந்து பார்த்த போது அதிர்ச்சியில் அவர் உடல் நடுங்கியது. அந்த மனிதன் அவரைப் போலவே இருந்தான். உடைகள் மட்டும் பழங்கால

எகிப்தியர்களுடையதாக இருந்தது. அவன் அரசனோ, சாதாரண மனிதனோ அல்ல என்பது அவனுடைய உடைகளில் இருந்து தெரிந்தது. ஏதோ ஒரு சாதாரண மதகுரு போலத் தோன்றியது. அடுத்த கணம் அவன் முன்னும் ஒரு பேரொளி தோன்றியது. அந்த ஒளியில் ஒரு வழிபாட்டு மேடை தெரிந்தது.

அந்த மனிதன் அந்த இடத்தை நோக்கி நடக்க ஆரம்பித்தான். அவரும் அவனுடன் சேர்ந்து நடந்தார். அவன் அங்குச் சென்றவுடன் பிரார்த்திக்க ஆரம்பித்தான். அவரும் பிரார்த்தித்தார். சக பிரார்த்தனையாளனாக அவர் இருக்கவில்லை. அவர் அவனாகவே பிரார்த்தனை செய்தது போல இருந்தது. அவன் மிகுந்த துக்கத்துடன் இருப்பது அவருக்குப் புரிந்தது. அவன் அவனுடைய தேசத்தின் இன்றைய நிலைக்காகத் துக்கப்பட்டான். அவனுடைய மக்களின் இன்றைய நிலைக்காகத் துக்கப்பட்டான். ஒரு காலத்தில் கோலோச்சிய ஞானமும், சிறப்பும் இன்றில்லாமல் போனதற்காகத் துக்கப்பட்டான். தன் மக்களுக்காக அந்தப் பேருண்மைகளைக் காப்பாற்றித் தரும்படி அவன் கடவுளர்களிடம் பிரார்த்தித்தான். திரும்பத் திரும்பப் பிரார்த்தித்தான். ஆனால் அவன் பிரார்த்தனைகள் செவி சாய்க்கப்படவில்லை என்று புரிய ஆரம்பித்த போது அவன் மனம் கனக்க ஆரம்பித்தது. மிகுந்த வேதனையுடன் அவன் அங்கிருந்து முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு திரும்பினான். அந்த ஒளி மறைந்து இருள் சூழ்ந்தது. அவன் மறைந்தான். அந்த வழிபாட்டுப் பீடமும் மறைந்தது. அவர் நிகழ்காலத்திற்கு வந்தார். ஆனால் அவர் மனதும் கனத்திருந்தது.

கண்டது கனவா, பிரமையா, இல்லை அந்தச் சூழலில் அதில் அதிகமாக மனம் தோய்ந்திருந்ததனாலா, உண்மையிலேயே முற்பிறவியில் அவர் எகிப்தில் ஒரு குருவாக வாழ்ந்திருந்தாரா என்பன போன்ற கேள்விகள் அவர் மனதில் சரமாரியாக எழுந்தன. இதற்கு அவரால் விடை காண முடியவில்லை. கர்னாக் அருகே இருந்த கிராமம் ஒன்றில் வசித்து வந்த ஷேக் அபு ஷ்ரம்ப் என்பவர், பால் ப்ரண்டனுக்குப் பரிச்சயமாகி நல்ல நண்பரானார். அவர் மூலம் அங்கு நடந்த வழிபாட்டு நிகழ்ச்சிகள் சிலவற்றில் பால் ப்ரண்டன் கலந்து கொண்டார். ஒரு வழிபாட்டு நிகழ்ச்சியில்





பாடல்களும் பாடப்பட்டன. தனித்தனியாகவும், குழுவாகவும் பாடப்பட்ட அந்த இஸ்லாமியப் பாடல்கள், 'அல்லாவைத் தவிர வேறு தெய்வமில்லை' என்று மனமுருகப் பாடப்பட்டன.

சில மைல்கள் தொலைவில் பல கடவுளர்களின் கோயில்கள் கர்னாக்கில் இருக்க, அதே மண்ணில் இங்கு இது போன்ற பாடல்கள் ஒலிப்பது பால் ப்ரண்டனுக்கு இறையுணர்வின் பல பரிமாணங்களைச் சொல்வது போல இருந்தது. அவர் நண்பரான ஷேக் ஷ்ரம்ப் ஒரு நாள் அவருக்கு ஒரு மடித்த காகிதத்தைத் தந்தார். அதில் குரானின் சில வசனங்கள் எழுதப்பட்டிருந்தன. ஷேக் ஷ்ரம்ப் சொன்னார்: ''இது சக்தி வாய்ந்த மந்திரிக்கப்பட்ட காகிதம். ஏதாவது முக்கிய வேலை நடந்தாக வேண்டும் என்று விரும்பும் போதும், எங்காவது துஷ்டசக்திகள் இருக்கின்றன என்று தோன்றும் போதும் இதை உங்களிடம் வைத்துக் கொண்டு சென்றால் நினைத்த காரியம் கை கூடும், துஷ்ட சக்திகள் உங்களை ஆக்கிரமிக்க முடியாது.''

பால் ப்ரண்டனுக்கு அந்த மந்திரிக்கப்பட்ட காகிதம் வேண்டியிருக்கவில்லை என்ற போதும் அதை அந்த நண்பரின் அன்பிற்காகப் பெற்றுக் கொண்டார். அந்த நண்பர் அந்தச் சமயத்தில் தன்னுடைய மந்திர சக்தி, பலரையும் காப்பாற்றி இருக்கிறது என்று தெரிவித்தார். டுடன்காமென் கல்லறையைத் திறந்த போது கிளம்பிய சாபங்களும், ஆவிகளும் அது சம்பந்தப்பட்ட பலரையும் அழித்த போதும் அவருடைய நண்பரான ஹோவர்ட் கார்ட்டர் என்பவரை எந்த விதமான பாதிப்பும் அடையாமல் காத்தது என்று குறிப்பிட்டார். பால் ப்ரண்டன் அதன் உண்மைத் தன்மை குறித்து யாரிடமும் விசாரிக்கப் போகவில்லை. ஆனால் ஷேஜ் ஷ்ரம்பிடம் பலரும் நோய்களைக் குணப்படுத்த மந்திரித்துத் தரும்படி கேட்டுக் கொண்டு வருவது பற்றிக் கேள்விப்பட்டிருந்தார். அதில் வலி மிகுந்தவர்கள் வலியின் தாக்கம் குறைவதாகச் சொல்வதையும் கேள்விப்பட்டிருந்தார். அது தற்காலிகத் தீர்வா, நிரந்தரத் தீர்வா என்று அறியாவிட்டாலும் அவரிடம் ஏதோ சக்தி இருக்கிறது என்பது மட்டும் தெரிந்தது.




# பாம்பு, தேள்களை வசியம் செய்தவர்

அடுத்ததாக, பால் ப்ரண்டன் சந்தித்த அபூர்வமான நபர் ஷேக் மூசா. அவர் எப்படிப்பட்ட கொடிய பாம்புகளையும் வசியம் செய்து அடக்கி ஆளக் கூடியவர் என்று பெயர் எடுத்தவர். விஷப் பல் பிடுங்கப்பட்ட பாம்புகளை வைத்து வித்தை காட்டிப் பிழைக்கும் பலரைப் பால் ப்ரண்டன் சந்தித்திருக்கிறார். அதே போல் பாம்புகளை வசியம் செய்யும் சக்தியும், அதன் விஷத்தினை முறியடிக்கும் சக்தியும் பெற்றிருக்கிற ஓர் ஆளையும் அவர் இந்தியாவில் பார்த்திருக்கிறார். அந்த ஆள் ஒரு கோணிப்பையில் எலிகளையும், இன்னொரு கோணிப்பையில் கடும் விஷம் உள்ள பாம்புகளையும் தூக்கிக் கொண்டு ஒவ்வொரு கிராமமாகச் செல்பவன். அப்படிப் போய் பலர் முன்னிலையில் விஷப்பாம்புகளை வெளியே எடுத்து அவனைக் கடிக்க விடுவான். பின் ஒரு எலியை வெளியே எடுத்து பாம்புகளால் அதைக் கடிக்க விடுவான். ஓரிரு நிமிடங்களில் விஷம் ஏறி அந்த எலி சாகும். ஆனால் எந்தப் பாதிப்பும் இல்லாமல் அவன் இருப்பான். இதைக் காண்பித்து வசூல் ஆகும் பணத்தில் அவன் பிழைப்பு ஓடிக் கொண்டிருந்தது.

ஆனால் ஷேக் மூசா அந்த ஆளைப் போலல்ல, மேலும் பல





சக்திகள் படைத்தவர், பாம்புகளின் மீது முழு வசியக் கட்டுப்பாடு கொண்டவர் என்றெல்லாம் கேள்விப்பட்டார் பால் ப்ரண்டன். லக்சார் நகரும் சுற்றி உள்ள பகுதிகளும் நிறைய பாம்புகள் உள்ள பகுதியாதலால் பலருக்கும் ஷேக் மூசா தேவைப்பட்டார். எங்காவது பாம்புகளின் அட்டகாசம் அதிகமாக இருக்கிறது என்றால் அவரைச் சந்தித்து வேண்டிக் கொண்டால், அவர் அந்த இடத்தில் ஒரு பாம்பைக் கூட மிச்சம் வைக்காமல் தேடிப் பிடித்து எடுத்துக் கூடையில் போட்டுக் கொண்டு வந்து விடுவாராம். அதே போல இடையே மூடியிருந்து விட்டு நவம்பர், டிசம்பர் மாதங்களில் சுற்றுலாப் பயணிகளுக்காக ஓட்டலைத் திறந்து வைக்கும் ஓட்டல்காரர்களும் ஓட்டலைத் திறப்பதற்கு முன் அவரை ஒரு முறை வந்துவிட்டுப் போகச் சொல்வார்களாம். பாம்புகள் எங்கே மூலையில் ஒளிந்து கொண்டிருந்தாலும் அவற்றைக் கண்டுபிடித்து அவர் பிடித்துக் கொண்டு போய் விடுவாராம். அவர் சென்ற பின் அந்த ஓட்டல்களில் ஒரு பாம்பைக் கூட பார்க்க முடியாது என்று அப்பகுதி மக்கள் உறுதியாகச் சொன்னார்கள். பால் ப்ரண்டன் அவரைப் பார்க்கச் சென்றார்.

ஷேக் மூசா குள்ளமான மனிதர். தலைப்பாகை அணிந்திருந்தார். வலது கையில் இரண்டு வெள்ளி மோதிரங்களும், இடது கையில் இரண்டு வெள்ளி மோதிரங்களும் அணிந்திருந்தார். நான்கு மோதிரங்களில் மூன்றில் ஏதோ வசியக் காப்பு வாசகங்கள் எழுதப்பட்டிருந்தன. நான்காவதில் அல்லாவின் மீது அசைக்க முடியாத நம்பிக்கை தெரிவிக்கும் வாசகம் எழுதப்பட்டிருந்தது. பால் ப்ரண்டன் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டு ஷேக் மூசாவின் சக்திகளை நேரில் பார்க்க விரும்பி வந்ததாகத் தெரிவித்தார். ஷேக் மூசா சொன்னார்: ''நீங்களாகவே ஓரிடம் தேர்ந்தெடுத்துக் கொண்டு வாருங்கள். நான் வந்து பாம்புகளைப் பிடித்துக் காட்டுகிறேன். நானே ஓர் இடம் சொன்னால் முன்பே அங்குச் சில இடங்களில் பாம்பை வைத்து விட்டுப் பின் உங்கள் முன் அங்கிருந்து எடுப்பது போல் உங்களுக்குத் தோன்ற வாய்ப்பு இருக்கிறது.''

தன் சக்தியில் ஷேக் மூசாவுக்கு அசைக்க முடியாத நம்பிக்கை இருப்பதும், ஒரு நியாயமான மனிதராக இருக்க அவர்

விரும்புவதும் பால் ப்ரண்டனுக்குப் புரிந்தது. பால் ப்ரண்டன் நைல் நதியருகே ஓரிடம் தேடிக் கண்டுபிடித்தார். பன்னிரண்டு வருடங்களாக ஆட்கள் வசிக்காத பாழடைந்த ஒரு வீட்டையும், அதைச் சுற்றி உள்ள அதிகம் உபயோகப்படுத்தாத பகுதியையும் பார்த்த போது, கண்டிப்பாக அந்த வீட்டிலும் சுற்றுப் பகுதிகளிலும் பாம்புகள் இருக்கும் என்று பால் ப்ரண்டன் ஊகித்தார். ஷேக் மூசாவை அழைத்துக் கொண்டு அந்த இடத்திற்கு வர அவர் பின்னாலேயே கிட்டத்தட்ட நாற்பது ஐம்பது பேர் வேடிக்கை பார்க்க வந்து விட்டார்கள். அவர்களிடம் ஒருவிதப் பரபரப்பையும் ஆர்வத்தையும் பால் ப்ரண்டனால் பார்க்க முடிந்தது.

அங்கு போனவுடன் நீண்ட சட்டை, காலில் சாக்ஸ் தவிர மற்ற உடைகளைக் கழற்றி, தான் எந்தப் பாம்பையும் அங்குக் கொண்டு வரவில்லை என்பதைப் பால் ப்ரண்டனுக்கு ஒரு முறை காண்பித்து விட்டு மறுபடி உடை அணிந்து கொண்ட ஷேக் மூசா, அந்த வீட்டின் வெளியே பல விதமான கற்கள் குவித்து வைக்கப்பட்டிருந்த பகுதிக்குச் சென்று ஒரு கல்லைக் காண்பித்து இதன் அடியில் ஒரு பெரிய தேள் இருக்கிறது என்று சொல்லி விட்டு ஏதோ மந்திரங்களை உச்சரித்தார். ஆனால் தேள் எதுவும் வெளியே வரவில்லை. மந்திரத்தை மேலும் சத்தமாக உச்சரித்து விட்டு ஆணையிடும் தொனியில் அவர் தேளை வெளியே வரச் சொன்னார். என்னவொரு ஆச்சரியம். பெரிய தேள் ஒன்று வெளியே மெல்ல வந்தது.

அதை வெறும் கைகளால் எடுத்து ஷேக் மூசா பால் ப்ரண்டனிடம் காட்டினார். மஞ்சள்-பச்சை நிறம் கலந்த அந்தத் தேள் கடும் விஷம் கொண்டது என்பதில் பால் ப்ரண்டனிற்கு சிறிதும் சந்தேகம் இல்லை. அந்தத் தேள் தன் விஷக் கொடுக்கை ஓங்கினாலும் ஷேக் மூசாவைக் கொட்டவில்லை. ஷேக் மூசா ஒருவித கர்வத்துடன் கூறினார்: ''என்னை எந்தத் தேளும் கொட்டாது, எந்தப் பாம்பும் கடிக்காது. அவற்றிற்கு நான் ஆணை இட்டிருக்கிறேன்.'' உண்மை தான். அந்தத் தேளை அவர் எடுத்துத் தன் புறங்கையில் விட்டு அலட்டிக் கொள்ளாமல் இருந்தார். தேள் பல முறை கொட்ட கொடுக்கை நீட்டினாலும் ஷேக்





மூசாவின் தோலின் மிக அருகில் வந்த போது ஏதோ மந்திரத்திற்குக் கட்டுப்பட்டது போல கொட்டாமல் விட்டது. அந்தத் தேளை ஷேக் மூசா கீழே போட்டார். தேள் அந்தக் கல் குவியலில் சென்று பாதுகாப்பாக மறைய விரைந்தது. அதை அப்படியே நிற்க அவர் கட்டளை இட தேள் அப்படியே சிலையாக நின்றது. ஷேக் மூசா அதை எடுத்துத் தன்னுடைய கூடையில் போட்டுக் கொண்டார். அடுத்ததாக அந்தப் பகுதியில் ஒரு மரத்தைக் காட்டிச் சொன்னார்: ''இதில் ஒரு நாகப்பாம்பு இருக்கிறது. அதை என்னால் உணர முடிகிறது.''

தன் கையில் இருந்த ஒரு தடியால் அந்த மரத்தைத் தட்டியபடி அல்லாவின் பெயராலும், சாலமன் மன்னன் பெயராலும் அதை வெளியே வரக் கட்டளையிட்டார். சிறிது நேரம் எதுவும் வெளியே வரவில்லை. அவருடைய மந்திரங்களுக்கு அந்த நாகம் கீழ்ப்படியாததால் அவர் கோபப்பட்டது போலத் தோன்றியது. மரத்தின் வேர்ப்பகுதியில் மறுபடி தட்டி வரச் சொன்னார். அப்போதும் நாகம் வெளியே வரவில்லை. கீழே இருந்த பொந்தைக் கூர்ந்து பார்த்தபடி அவர் உட்கார்ந்து தன் கையை அந்தப் பொந்தினுள் விட்டார். அவர் கை உள்ளே போனதும் நாகம் அந்தப் பெரிய பொந்தில் மேலும் உள்வாங்கியதாக பால் ப்ரண்டனுக்குத் தோன்றியது. முழுக் கையையும் உள்ளே விட்ட ஷேக் மூசா ஒரு பெரிய நாகப்பாம்பை வெளியே எடுத்தார்.

கூட்டம் உடனடியாக மிகத் தொலைவுக்குப் பின் வாங்கியது. பால் ப்ரண்டனும் ஓரளவு பின்னுக்கு நகர்ந்தார் என்றாலும், அவர் பார்வை முழுவதும் ஷேக் மூசாவின் அசைவுகளிலேயே இருந்தது. பாம்பை வெளியே எடுத்தவுடன் கீழே போட்டார் ஷேக் மூசா. அந்தப் பாம்பு உடனடியாகச் சுருண்டு கொண்டது. ஷேக் மூசா அதன் வாலைப் பிடித்துத் தூக்கினார். அடுத்ததாக அதன் தலைப் பகுதிக்குக் கீழே அதனை அவர் பிடிக்க அந்த நாகத்தின் பிளவுபட்ட நாக்கு மின்னல் வேகத்தில் வெளியே வந்து எந்நேரமும் தாக்கத் தயார் நிலையில் இருந்தது போல பால் ப்ரண்டனுக்குத் தோன்றியது. ஷேக் மூசா பால் ப்ரண்டனை மிக அருகில் வந்து அந்த நாகத்தைப் பார்க்கச் சொன்னார். அருகே சென்ற பால் ப்ரண்டன், அது கொடிய

விஷம் உள்ள பாம்பு தான் என்று உறுதிப்படுத்திக் கொண்டார்.

பின் அந்த நாகத்தை மறுபடியும் கீழே விட்ட ஷேக் மூசா மேலும் சில மந்திரங்கள் உச்சரித்தார். ஐந்தடி நீளமும், இரண்டரை அங்குல அகலமும் உடைய அந்த நாகப்பாம்பு தன் ஆக்ரோஷம் அத்தனையும் குறைந்து அமைதியாகியது. தன் கையைக் கீழே வைத்து தன் உள்ளங்கையில் அதன் தலையை வைக்கவும் ஆனால் தன்னைக் கடிக்காமல் இருக்கும்படியும் அதற்குக் கட்டளையிட்டார். அதுவும் தாயின் மடியில் தலை வைப்பது போல மிக சாதுவாக அவர் உள்ளங்கையில் தலை வைத்து அப்படியே அமைதியாக இருந்தது. அவரைக் கடிக்க அது முற்படவில்லை.

பால் ப்ரண்டனுக்கு அந்தச் சோதனையை முழுமையாக்க அந்த நாகப்பாம்பு விஷம் உள்ளது தானா என்று சோதித்துப் பார்க்கத் தோன்றியது. அதை அவர் ஷேக் மூசாவிடம் சொல்ல ஷேக் மூச ாவும் ஒத்துக் கொண்டார். ஒரு பெரிய தேக்கரண்டி எடுத்து அக்கரண்டியில் அந்த நாகத்தை விஷம் கக்க வைத்தார். அரைக் கரண்டிக்கும் மேல் விஷம் அதில் சேர்ந்தது. அதில் ஒன்றிரண்டு துளிகளே ஒருவரைக் கொல்லப் போதுமானது என்கிற போது, அந்த விஷம் உள்ள பாம்பு ஷேக் மூசாவைத் தீண்டாமல் அமைதியாகக் கட்டுப்பட்டு இருப்பது பெரிய ஆச்சரியமான விஷயமாக பால் ப்ரண்டனுக்குத் தோன்றியது.

அந்த நாகத்தை எடுத்துத் தன் கூடையில் ஷேக் மூசா போட்டுக் கொண்டார். உள்ளே போன வேகத்தில் நாகம் வெளியே வரப் பார்த்தது. உள்ளே இருந்த விஷத் தேள் அதற்குக் காரணமாக இருக்கும் என்பது பால் ப்ரண்டனுக்குப் புரிந்தது. ஆனால் ஷேக் மூசா அதைப் பார்த்துக் கடுமையான வார்த்தை ஒன்றை உச்சரிக்க, அது வேறு வழியில்லாமல் கூடைக்குள் சென்றது. உள்ளே நாகமும், தேளும் ஒற்றுமையாக இருக்குமா, இல்லை சண்டையிட்டுக் கொள்ளுமா, ஒன்றை ஒன்று தாக்கி மடியுமா என்றெல்லாம் பால் ப்ரண்டனுக்குத் தெரியவில்லை. ஆனால் சோதனை முடிந்தது. வெளியே வேடிக்கை பார்த்த கூட்டம் இந்நேரம் இரு மடங்காய் அதிகரித்திருந்தது. அவர்கள் ''ஷேக் மூசாவிற்கு ஜே'' என்று கோஷமிட்டுப் பாராட்டினார்கள்.





# பாம்பு வசியத்தின் அபாயங்களும், சூட்சுமங்களும்

பாம்பு வசியக் கலை பற்றி முழுவதும் அறிந்து கொள்ள விரும்பிய பால் ப்ரண்டன் இரண்டு நாட்கள் கழித்து ஷேக் மூசாவைச் சந்தித்தார். அப்போது பாம்பு வசியம் மிகவும் அபாயமான கலை என்றும் கவனக்குறைவானால் உயிர் போய் விடும் என்றும் சொன்ன ஷேக் மூசா, தன் குடும்ப அனுபவங்களையே பாடங்களாகச் சொன்னார்.

பாம்பு வசியக் கலை அவர் குடும்பத்தில் வம்சாவளியாக வரும் கலை. அவர் தாத்தாவிடமிருந்து அவர் தந்தையும், அவர் தந்தையிடமிருந்து அவரும் அதைக் கற்றுக் கொண்டார்கள். அவர் தந்தை இறந்தவுடன் தன் கடைசி மகனுக்கும் அந்தக் கலையைக் கற்றுக் கொடுக்க விரும்பிய ஷேக் மூசா பல மாதங்கள் அதைத் தன் மகனுக்குக் கற்றுக் கொடுத்தார். கற்றுக் கொடுத்து முடிந்த பின்னர் அவர் மகனிடம், '' இனி நீயாகவே போய் முதல் பாம்பைப் பிடித்து வா'' என்று சொல்லிப் பாலைவனத்திற்கு அனுப்பி வைத்தார். ஆனால் போன மகன் வீடு திரும்பவேயில்லை. கடைசியில் அவர் மகனைத் தேடிச் சென்ற போது மகன் பாம்பு கடித்து விஷம் ஏறி இறந்திருந்தான்.

ஷேக் மூசா சொன்னார். ''பாம்பு வசியம் சொல்லிக் கொடுத்து மட்டும் பெறுவதல்ல. அதற்கென்றே ஒரு தனிக்குணம் இயற்கையாக ஒருவனிடம் இருக்க வேண்டும். என் மகனிடம் அது இருக்கவில்லை. ஆனாலும் நான் கட்டாயப்படுத்தி அவனைக் கற்க வைத்தேன். ஆனால் அது அவனுடைய உயிரையே பறித்து விட்டது. நான் இறக்கும் முன் என் மற்ற மகன்களில் பொருத்தமான ஒருவனைத் தேர்ந்தெடுத்து நான் கற்றுக் கொடுப்பேன்.''

பாம்பு வசியக்கலை சாலமன் மன்னனிடம் இருந்து மற்றவர்களுக்குக் கற்பிக்கப்பட்ட கலை என்று ஷேக் மூசா கூறினார். சாலமன் மன்னனைப் பற்றிச் சொல்லும் போது அவரிடம்

அளவு கடந்த மரியாதையைப் பால் ப்ரண்டன் கவனித்தார். அது ஷேக் மூசாவிடம் மட்டுமல்ல, பால் ப்ரண்டன் சந்தித்த பல அபூர்வ சக்தியாளர்களிடமும் இருந்தது. மேஜிக் சக்திகள், வசியக் கலைகள், அமானுஷ்ய சக்திகள் ஆகியவற்றில் சாலமன் மன்னன் தன்னிகரில்லாமல் விளங்கியதாகப் பலரும் சொன்னார்கள்.

பாம்பு வசியக் கலையில் அஜாக்கிரதையோ, செய்ய வேண்டியவற்றில் மறதியோ கூடாது என்று ஷேக் மூசா சொன்னார். மிகுந்த உணர்ச்சிவசப்படுவது, அவசரப்படுவது ஆகியவை இந்த விஷயத்தில் ஆபத்தானவை என்று சொன்ன ஷேக் மூசா, அதற்கு எடுத்துக்காட்டாகவும் தன் குடும்பத்துக் கதை ஒன்றையே சொன்னார். அவருடைய தாத்தா பல்லாண்டுகள் இந்த வசியக் கலையில் வல்லவர். மகனுக்கும் அந்தக் கலையைக் கற்றுத் தந்தவர். அந்தக் கலையில் அவர் அறியாத சூட்சுமம் இல்லை என்றே சொல்லலாம். ஆனால் ஒரு முறை ஒரு விஷப் பாம்பைப் பிடிக்கச் சென்ற போது அவருடைய மந்திரங்களுக்கு அந்த விஷப்பாம்பு உடனடியாகக் கட்டுப்படவில்லை. பல முறை மந்திரங்கள் சொல்லியும் வெளியே வராத பாம்பிடம், " உன்னை மந்திரத்தால் வெளிக்கொண்டு வர முடியாவிட்டால் என்ன, நானே உன்னைப் பிடித்து வெளியே இழுப்பேன்" என்று கோபமாகச் சொல்லியபடி பொந்துக்குள் கையை விட்டு அந்த விஷப்பாம்பை வெளியே எடுத்தார். மறுபடியும் வலிமையான மந்திரம் சொல்லி விட்டுத் தொட்டிருக்க வேண்டிய விஷப் பாம்பை அவர் கோபத்தில் மந்திரம் சொல்லித் தன்னைத் தற்காத்துக் கொள்ளாமல் கோபத்தில் தொட்டது பெரும் தவறாகி விட்டது. அந்த நச்சுப் பாம்பு கடித்ததில் அவர் சில நிமிடங்களிலேயே உயிரை விட நேர்ந்தது.

எத்தனை அறிந்திருந்தாலும் அறிந்ததைச் செயல்படுத்துவதில் சிறிது கவனக் குறைவு ஏற்பட்டாலும் அது எவ்வளவு ஆபத்தானது என்பதற்கு இது மிகப் பெரிய உதாரணம் என்று சொன்ன அவர், எல்லாம் இறைவனின் திருவுள்ளம் என்று தத்துவார்த்தமாக முடித்தார்.

ஷேக் மூசாவிடம் பால் ப்ரண்டன் கேட்டார்: "நீங்கள் பிடிக்கின்ற பாம்புகளை என்ன செய்வீர்கள்?"





"அவை சாகும் வரை என்னிடம் வைத்திருப்பேன். நான் அவற்றைக் கொல்லக் கூடாது. அப்படிக் கொன்றால் அவற்றின் மீது எனக்குள்ள கட்டுப்பாடு விலகி விடும்."

"அப்படியானால் உங்கள் வீட்டில் பாம்புப் பண்ணையே வைக்க வேண்டி இருக்குமே?"

ஷேக் மூசா சிரித்தார். "நான் பிடிக்கும் பாம்புகளை மூன்று வகைக்குள் அடக்கி விடலாம். சிறிய பாம்புகளைத் தேளிருக்கும் கூடையில் போட்டால் தேள் கொட்டி அவை இறந்து விடும். கொடிய நச்சுப் பாம்புகள், பிடிபட்டு இருக்கிற கோபத்தில் மூன்று அல்லது நான்கு நாட்களுக்குள் தங்களையே கடித்துக் கொண்டு இறந்து விடும். மற்ற பாம்புகளுக்கும் உணவு எதுவும் தரா விட்டால் அவை தானாக இறந்து விடும்."

இதுவும் ஒரு வகையில் கொலை தானே, பாம்புகள் இதை எந்த வகையில் எடுத்துக் கொள்ளும் என்று தோன்றினாலும் பால் ப்ரண்டன் அது பற்றி அவரிடம் சர்ச்சை செய்யப் போகவில்லை. ஷேக் மூசா, வசிய சக்திக்குப் பயிற்சியை மட்டும் நம்பி இருக்கவில்லை. அவருடைய கையில் முழங்கைக்கு மேலே ஒரு கயிறு கட்டப்பட்டிருந்தது. அந்தக் கயிறில் ஒரு அங்குல நீள அகலம் இருக்கிற ஏழு சிறிய தோல் பைகள் கோர்க்கப்பட்டிருந்தன. ஒவ்வொன்றினுள்ளும் குரானின் வாசகங்களும், வசியமந்திரங்களும் காகிதத்தில் எழுதி உள்ளே வைத்து தைக்கப்பட்டிருக்கின்றன என்றார்.

பால் ப்ரண்டன் தானும் அந்த வசிய வித்தையைக் கற்றுக் கொள்ள ஆசைப்பட்டார். இது போன்ற விருப்பங்கள் பெரும்பாலும் அவருக்கு நிறைவேற்றப்பட்டதில்லை. என்றாலும் இந்த முறை அது நிறைவேற்றப்பட்டது. ஷேக் மூசா, முழுவதையும் கற்றுக் கொடுக்க முடியாது என்றும், ஏனென்றால் இது வம்சாவளியாக மட்டுமே கற்றுக் கொடுக்கப்படும் வித்தை என்றும், ஒரு விதிவிலக்காக குறிப்பிட்ட காலத்திற்கு மட்டும் வேலை செய்கிற ஒரு பகுதி வசிய வித்தையை மட்டும் கற்றுக் கொடுக்க முன்வந்தார். அதற்கு ஒருசில உறுதிமொழிகளை அவர் முன்கூட்டியே பால் ப்ரண்டனிடமிருந்து வாங்கிக் கொண்டார். பயிற்சிக் காலத்திலும், சக்தி இருக்கும்

காலத்திலும் அல்லாவின் வார்த்தைகளில் மிகுந்த மரியாதையும், பக்தியும் வைத்திருக்க வேண்டும். எந்தப் பாம்பையும் கொல்லக் கூடாது. தற்காலிகமாகக் கிடைத்தாலும் கூட இந்த வித்தையை வேறொருவருக்குச் சொல்லித்தரக் கூடாது. இந்த வித்தையைப் பயன்படுத்திப் பணம் சம்பாதிக்கக் கூடாது என்பதெல்லாம் தான் அந்த உறுதிமொழிகள். அந்த உறுதிமொழிகளைத் தருவதில் பால் ப்ரண்டனுக்கு எந்தப் பிரச்சினையும் இருக்கவில்லை.

ஏழு நாட்கள் ரொட்டியும் தண்ணீரும் மட்டும் உட்கொண்டு, அந்த நாட்கள் முழுவதையும் தனிமையிலும், பிரார்த்தனையிலும் பால் ப்ரண்டனைக் கழிக்கச் சொல்லி விட்டு பின் அந்த வித்தையை ஷேக் மூசா, பால் ப்ரண்டனிற்குக் கற்றுக் கொடுத்தார். சில பயிற்சிகளும் தந்தார். ஒரு தாளில் சில வசிய மந்திரங்களையும் குரான் வாசகங்களையும் எழுதி பால் ப்ரண்டனிடம் தந்தார். சில நாட்கள் அவற்றைப் படிக்கச் சொன்னார். பின் அந்தக் காகிதத்தைத் தன் கையில் கட்டி வைத்திருந்த தோல் பைகள் போன்றதொரு பையினுள் வைத்துத் தைத்து பால் ப்ரண்டனுக்குத் தந்து கையில் கட்டிக் கொள்ளச் சொன்னார்.

பின் சொன்னார்: ''இது உங்களை இரண்டு வருடகாலம் தேள், பாம்பு போன்ற விஷ ஜந்துக்களில் இருந்து காக்கும். அவற்றால் உங்களுக்கு எந்த ஆபத்தும் வராது. இதில் உங்கள் பெயரை எழுதி இருக்கிறேன். இது உங்களைத் தவிர வேறு யாருக்கும் எந்த விதத்திலும் பயன் தராது. இது உங்கள் கையை விட்டுப் போனால் வசிய சக்தியும் உங்களை விட்டுப் போய் விடும். ஒரு முறை தொலைந்தால் இது மறுபடி உங்களுக்குக் கிடைக்காது. எனவே இதைப் பாதுகாப்பாகக் கையில் கட்டி இருங்கள். இரண்டு வருடங்கள் கழிந்தும் உங்களுக்கு அந்த வசிய சக்தி வேண்டும் என்று தோன்றினால் மறுபடி என்னிடம் வந்து தற்காலிகமாய் இது போன்றே நீங்கள் பெற்றுச் செல்லலாம்.''

பால் ப்ரண்டனுக்குப் பரபரப்பாக இருந்தது. தன்னிடம் தந்திருப்பதாக ஷேக் மூசா சொன்ன சக்தியைச் சோதித்துப் பார்க்கும் ஆவல் ஏற்பட்டது.





# பாம்பு வசியம் கற்ற பால் ப்ரண்டன்



பயிற்சிக் காலத்தில் முதலில் பால் ப்ரண்டனுக்கு விஷமற்ற பாம்புகள் தரப்பட்டன. அந்தப் பாம்புகளை வைத்துப் பாம்புகளைக் கையாள்வது எப்படி என்று சொல்லித் தரப்பட்டது. பின் விஷம் நீக்கப்பட்ட பாம்புகள் தரப்பட்டன. அவற்றை எல்லாம் அவர் மந்திர வாசகங்கள் சொல்லி, ஆணையிட்டுக் கட்டுப்படுத்தப் பழகிக் கொண்டார். ஆரம்பத்தில் அவரது ஆணை அந்தப் பாம்புகளைச் சிறிதும் பாதிக்கவில்லை என்றாலும் போகப் போக அவை அவர் வசியத்திற்குக் கட்டுப்பட ஆரம்பித்தன. அவர் தேர்ச்சி பெறும் வரை நிறையக் கடிகள் வாங்கிக் காயப்பட்டார்.

முழுத் தேர்ச்சியும் பெற்ற பின் முதல் சோதனை ஆரம்பமாகியது. பக்கத்துப் பாலைவனத்தில் இருந்து கடும் விஷம் கொண்ட நாகப்பாம்பை ஷேக் மூசா பிடித்துக் கொண்டு வந்து பால் ப்ரண்டனிடம் நீட்டினார். ''பிடியுங்கள் இதை. உங்கள் முதல் பாடம் இப்போதே ஆரம்பம்'' என்றார்.

விஷமில்லாத பாம்புகளைப் பிடித்துப் பல சோதனைகள் புரிந்திருந்தாலும் நிஜமான விஷமுள்ள நாகப்பாம்பைக் கையாள்வது என்ற போது பால் ப்ரண்டனுக்கு இயல்பாகவே

நடுக்கம் எடுத்தது. அவர் தயங்கினார். ஷேக் மூசா சொன்னார்: ''பயப்படாதீர்கள்.'' ஆனாலும் பால் ப்ரண்டனைப் பயம் தொற்றிக் கொண்டது. அந்த நேரத்தில் ஓர் உண்மையை அவர் உணர்ந்தார். இது ஒரு பரிசோதனை. இப்போது பயத்தை ஏற்றுக் கொண்டால் என்றென்றைக்கும் அந்த வசியக் கலையைக் கற்றுக் கொள்ள முடியாது. வாழ்க்கையானாலும் சரி, சாவானாலும் சரி என்று ஒரு கணத்தில் தீர்மானித்தவராய், அந்தப் பாம்பை ஷேக் மூசாவின் கையிலிருந்து வாங்கினார். அந்தப் பாம்பின் கண்களும் அவருடைய கண்களும் சந்தித்துக் கொண்டன. மறுபடியும் ஒரு முறை பயம் வந்தது என்றாலும், அந்தப் பயம் மின்னல் வேகத்தில் மறைய, பால் ப்ரண்டன் மன உறுதியுடன் அதைப் பிடித்துக் கொண்டார். அந்தப் பாம்பும் அவரை எதுவும் செய்யாமல் அப்படியே அவரைப் பார்த்தபடியே இருந்தது.

''இப்போது அதன் எஜமானாகி விட்டீர்கள்'' என்று உற்சாகத்து டனும் புன்னகையுடனும் ஷேக் மூசா சொன்னார்.

ஆனால் பால் ப்ரண்டனுக்கோ இன்னும் எதுவும் முடிவாகி விடவில்லை என்றே தோன்றியது. பாம்பு தன் நாக்கை நீட்டியும் மெல்லச் சீறியும் அவரையே பார்த்தது என்றாலும் அதற்கு மேல் அவரைத் தாக்க முயற்சி செய்யவில்லை.

ஷேக் மூசா சொன்னார்: ''இரண்டாவது பாடம், அதைத் தூங்க வையுங்கள். அதே நேரத்தில் தங்களுக்கு அளிக்கப்பட்ட வசியத்தை பரிட்சை செய்தும் பாருங்கள்.''

பால் ப்ரண்டனுக்கு அவர் சொன்னது போல பாம்பிற்கு எஜமானாகி விட்டதாகத் தோன்றவில்லை. குருவாகிய ஷேக் மூசாவின் சந்தேகமில்லாத நிச்சயமான அணுகுமுறை இன்னும் அவருக்குக் கைகூடவில்லை என்பதிலும் சந்தேகமில்லை. பாம்பின் பார்வையோ விஷமத்துடன் இருந்தது. அது கடிக்கவே வேண்டியதில்லை, அதன் விஷத்தை அவர் கண்களில் கக்கினால் போதும், பார்வை நிரந்தரமாகப் பறி போய்விடும் என்பதும் நினைவில் வந்து போனது.

ஆனால் அதை எல்லாம் பொருட்படுத்தாது அவர் முழு மன பலத்தையும் பயன்படுத்தி அதை உறங்கக் கட்டளையிட்டபடி





நெருங்கினார். திரும்பத் திரும்ப மனதில் அதற்குக் கட்டளையிட்டுக் கொண்டே, வசியத்திற்கு ஷேக் மூசா அவரிடம் தந்திருந்த மந்திர வாசகக் காகிதப் பையை அதன் முன் நீட்டியபடியே இருந்தார். ஓரிரு நிமிடங்களில் அந்த நாகம் அமைதியாக மாறித் தலையைத் தாழ்த்திப் படுத்துக் கொண்டது. உண்மையில் அது உறங்கி விட் டதா, இல்லை மயக்க நிலையில் இருக்கிறதா என்பது அவருக்குத் தெரியவில்லை. ஆனால் எப்படியோ முதல் தேர்வில் அவர் தேறி விட்டார்.

அதன் பின்னும் ஷேக் மூசாவுடன் இருந்த நாட்களில் நிறையவே அவர் கற்றுக் கொண்டார். ஷேக் மூசா போல் அவருக்குத் தேள், பாம்பு ஆகியவை இருக்கும் இடங்களைக் கண்டுபிடிக்க முடியவில்லை. அதற்குக் குறைந்தது இரண்டு வருடமாவது பயிற்சி செய்ய வேண்டியிருக்கும் என்றும் அப்போது தான் அதற்கு வேண்டிய மோப்ப சக்தி உருவாகும் என்றும் ஷேக் மூசா தெரிவித்தார். அதனால் அதனைக் கற்றுக் கொள்ளும் ஆர்வத்தை பால் ப்ரண்டன் கை விட்டார்.

ஷேக் மூசா மேலும் பல அறிவுரைகளை அவருக்கு வழங்கினார். எப்போதும் கருநாகங்களிடம் மிக ஜாக்கிரதையாக இருக்க வேண்டும் என்று கூறினார். மிகவும் நிபுணத்துவம் பெற்றால் ஒழிய சாதாரண வித்தைகளுக்கு எல்லாம் கருநாகம் மசிவதில்லை என்று சொன்னார். மேலும் நிறம் வேறாக இருந்தாலும் கருநாகம் போன்ற குணாதிசயங்கள் இருக்கும் பாம்புகளிடமும் எச்சரிக்கையாக இருக்க வேண்டும் என்று சொன்னார். '' அருகில் நெருங்குவதற்கு முன்பே மந்திர வாசகங்களைச் சொல்லிப் பாருங்கள், அது அதை லட்சியம் செய்யவில்லை என்றால் அதை நெருங்கவே நெருங்காதீர்கள். ஏனென்றால் அது போன்ற பாம்புகளை, எங்களைப் போன்ற முழுப்பயிற்சியும், தற்காப்புக் கவசமும் உள்ளவர்களாலேயே கட்டுப்படுத்த முடியும்'' என்றும் சொன்னார்.

ஒரு முறை ஒரு பாம்பு ஆரம்பத்திலேயே ஷேக் மூசாவையே கடித்தும் விடவே பால் ப்ரண்டன் திகைப்புக்குள்ளானார். ஆனால் சிறிதும் அசராத ஷேக் மூசா, ''கவலைப்படாதீர்கள். பாம்புகள்

என்னை எதுவும் செய்ய முடியாது. இது வெறும் பற்களால் தான் கடித்திருக்கிறது. விஷத்தை என் உடம்பில் பாய்ச்சவில்லை. அப்படிச் செய்ய அதனால் முடியாது'' என்று சொல்லி அந்தக் காயத்தைப் பொருட்படுத்தவில்லை. கடித்த பாம்பின் வாய்க்குள்ளே விரலை விட்டுக் கூட அவர் காட்டினார். அவர் சொன்னது போல அந்தப் பாம்பு அடுத்த முயற்சி எதையும் செய்யாமல் கட்டுண்டு இருந்தது. அந்தக் காயத்திற்கு ஷேக் மூசா மருந்தும் போடவில்லை. இரண்டு நாட்களில் அந்தக் காயமும் காய்ந்து போனது.

ஷேக் மூசாவிடம், தெய்வமாக உலகின் சில பகுதிகளில் பாம்பு வணங்கப் படுவது பற்றி பால் ப்ரண்டன் பேசிப் பார்த்தார். ஆனால் ஷேக் மூசாவிற்குப் புரியவில்லையோ, இல்லை புரிந்து கொள்ள விரும்பவில்லையோ தெரியவில்லை அவர் அதைப் பற்றி அதிகம் பேசவில்லை.

ஆனால் பால் ப்ரண்டனுக்கு பிந்தைய நாட்களில் பாம்புகள் மீது ஒருவித நட்பும் அன்பும் தோன்ற ஆரம்பித்தன. ஷேக் மூசாவைப் பிரிந்த பின்னும் பாம்புகளுடன் பல சோதனைகள் நடத்திய அவர் ஓரளவு ஷேக் மூசாவைப் போன்றே திடமான தைரியம் பெற்றார் என்றே சொல்ல வேண்டும்.

பால் ப்ரண்டன் இந்தியாவிலும், மத்திய அமெரிக்காவிலும் பாம்புகளைத் தெய்வமாகக் கொண்டாடுவதைப் பார்த்திருக்கிறார். எகிப்திலேயே கர்னாக் கோயிலில் இருந்த பாம்புகளின் சிற்பம், ஹோரஸ் கடவுள் கிரீடத்தில் இருந்த பாம்புச் சின்னம் ஆகியவை எல்லாம் ஒரு காலத்தில் எகிப்திலும் பாம்பு சிறப்பான இடத்தையே பெற்றிருக்க வேண்டும் என்று நம்பக் காரணமாக இருந்தன. சிந்தித்துப் பார்த்தால் மிகப்பழைய நாகரிகங்கள் அத்தனையிலும் பாம்புகளுக்குச் சிறப்பிடம் இருந்தது என்றே அவருக்குப் பட்டது. ஆனால் கிறிஸ்துவ மதத்தில் மட்டுமே பாம்பு சாத்தானாகக் கருதப்படுகிறது.

பாம்புகளிடம் நட்பு பாராட்டி அவற்றையும் தேள்களையும் தன்வசப்படுத்த முடிந்த பால் ப்ரண்டனுக்குப் பாம்புகள் முன்பு





தந்த அருவருப்பைத் தரவில்லை. ஆனால் ஒரே ஒரு முறை மட்டும் ஒரு பாம்பைத் தன் கழுத்தில் போட்டுக் கொண்டிருந்த போது வித்தியாசமான உணர்வைப் பால் ப்ரண்டன் பெற்றார். மனம் கட்டுப்பாட்டை இழந்து ஏதோ ஓர் அமானுஷ்ய அனுபவத்தில் ஆழ்வது போலவும், இனம் புரியாத ஏதோ தீய சக்திக்குள் சிக்க ஆரம்பிப்பது போலவும் தோன்ற, உடனடியாக அந்தப் பாம்பை அவர் கீழே போட்டார். அப்படி உணரக் காரணம் ஒரு வேளை அந்தப் பாம்பின் உணர்வுகளையே அந்த ஒரு கணத்தில் பெற்று விட்டதாலா, வேறு ஏதாவது காரணத்தாலா என்று அவரால் தீர்மானிக்க முடியவில்லை. அதன் பின் வேறெந்த சமயத்திலும் அவருக்கு அது போன்ற அனுபவங்கள் வந்ததில்லை.

அந்த நிகழ்ச்சிக்குப் பின்னும் அவரால் அதைச் சாத்தானாகக் கருத முடியவில்லை. அவருக்குப் பாம்பு ஒருவிதத்தில் மெய்ஞ்ஞானப் பொருள் தருவதில் நல்ல உதாரணமாகவே பட்டது. அடிக்கடி தன் தோலை உரித்துக் கழற்றி விட்டுக் கொண்டு புதிய தோலைப் பெற்று வாழ்வைத் தொடரும் அது, மனிதன் இறந்து உடலை விட்டு விட்டு வேறு பிறவி எடுத்துப் புதிய உடலுடன் வாழத் தொடங்குவதைப் பிரதிபலிப்பதாகத் தோன்றியது. மனிதனின் அழியாத ஆத்மாவுக்கு அடையாளமாகவே அவர் அதைக் கண்டார்.



# பால் ப்ரண்டன் கண்ட அதிசய மனிதர்



எகிப்தை விட்டுச் செல்லும் முன் லக்சார் அருகே நைல் நதியின் மேற்குப் பகுதிக்கும் லிபியா பாலைவனத்திற்கும் நடுவே உள்ள மலைப் பகுதிகளில் பயணிக்கப் பால் ப்ரண்டன் எண்ணினார். அந்த மலைகளின் பள்ளத்தாக்கு ஒரு வறண்ட பகுதி. கற்களும், பாறைகளும் நிறைந்த அந்தப் பகுதியில் பாம்புகளும் தேள்களும் மட்டுமே வசித்து வந்தன என்ற போதும் ஒரு வரலாற்றுச் சிறப்பு அதற்கு இருந்தது. மறைந்த சிறப்புமிக்க திபெஸ் மன்னர்களின் சமாதிகள் அந்தப் பள்ளத்தாக்குகளில் நிறைய இருந்தன. அவற்றையும் பார்த்து வர பால் ப்ரண்டன் விரும்பினார். லக்சார் நகரத்தில் இருந்து கொண்டு அந்தப் பகுதிக்குச் சிறு பயணங்கள் மேற்கொள்ள யூசுப் என்ற வேலையாளை அமர்த்திக் கொண்டார்.

அந்த வறண்ட மலைப்பகுதிப் பயணங்களில் பயணம் செய்ய ஏற்ற விலங்கு கழுதையாகவே அந்த நாட்களில் கருதப்பட்டது. எத்தனை கூர்மையான கற்களும், பாறைகளும் இருந்தாலும் மிக உறுதியாகக் கால்களை வைத்து முன்னேறக் கழுதையால் முடியும். எனவே, யூசுப்பிடம் நல்ல பெரிய கழுதையை வாங்கி வரச் சொன்னார். அவனும் அப்படியே வாங்கி வந்தான். அந்தக் கழுதை பார்க்கத் திடகாத்திரமாக இருந்தாலும் அதில் பயணம் செய்த போது தான் அது அதிகப் பயணத்தில் விருப்பமில்லாத சோம்பேறிக் கழுதை என்று புரிந்தது.

யூசுப்பிடம் அவர் சொன்னார்: ''இந்தக் கழுதையைப் போய் நல்ல





கழுதை என்று வாங்கிக் கொண்டு வந்திருக்கிறாயே. இது நடப்பதை விட அதிகமாய்த் தூங்கவே விரும்புகிறது. இருப்பதிலேயே மோசமான கழுதையாக இது தான் இருக்க வேண்டும்.''

யூசுப் ஆகாயத்தை நோக்கி கைகளைக் காண்பித்து விட்டு சொன்னான்: ''இறைவனின் படைப்பைச் சரி செய்ய நாம் யார்?''

நகைச்சுவையாக ஒரு புறம் தோன்றினாலும் இன்னொரு புறம் அவன் சொன்னதில் இருந்த உண்மையையும் பால் ப்ரண்டனால் மறுக்க முடியவில்லை. கழுதை ஆரம்பத்தில் அதிகப் பயணத் திற்கு முரண்டு பிடித்தாலும் பின் வேறு வழியில்லாததால் ஓரளவு ஒத்துழைப்பு கொடுத்தது. தாங்க முடியாத வெப்பம், வறண்ட சூழ்நிலை, மோசமான பாதைகள் என எல்லாமுமாகச் சேர்ந்து பயணத்தைக் கடினமாக்கிய போதிலும் பால் ப்ரண்டன் சில சமாதிகளைப் பார்த்தார். வழியில் சமாதிகளுடன், பெரிய உடைபட்ட சிலைகள், பாழ்பட்ட கோயில்கள் சிலவற்றையும் அவர் பார்த்தார். அங்கெல்லாம் அவர் கண்ட சித்திரங்களும் சிற்பங்களும் இது வரை கண்டதன் தன்மைகளையே பெற்றிருந்தன. எல்லாவற்றையும் கண்டு ஒரு மலையுச்சிக்குச் சென்ற போது கண்ட அழகின் பிரம்மாண்டம், இதுவரை அவர் அனுபவித்த களைப்புகளை எல்லாம் போக்குவதாக இருந்தது. தனியாகச் சி றிது தூரம் நடந்து ஓரிடத்தில் நின்று அங்கு கண்ட அழகும் நிலவிய பேரமைதியும் நெஞ்சைக் கொள்ளை கொள்ள, அவர் அப்படியே சிறிது நேரம் ரசித்துக் கொண்டிருந்தார். அப்போது தான் அவர் ஒரு பாறையில் அமர்ந்து அந்த அழகை ரசித்துக் கொண்டிருந்த இன்னொரு மனிதரைப் பார்த்தார்.

தலைப்பாகை அணிந்திருந்த நடுத்தர வயதுடைய அந்த மனிதரும் அவரைத் திரும்பிப் பார்த்தார். அந்த மனிதரின் கண்களின் தீட்சண்யம் பால் ப்ரண்டனை மிகவும் கவர்ந்தது. ஓர் அசாதாரணமான மனிதரைப் பார்க்கிறோம் என்ற எண்ணம் வலிமையாகப் பால் ப்ரண்டன் மனதில் எழுந்தது. இனம் காண முடியாத சில உணர்வுகளையும் அவர் உணர்ந்தார். அவரைச் சிறிது நேரம் பார்த்துக் கொண்டே இருந்த பால் ப்ரண்டன், அவரை நெருங்கி அரபு மொழியில் மதிய வணக்கம் சொன்னார்.

அந்த மனிதர் அவருக்கு அழகான ஆங்கிலத்தில் பதில் வணக்கம் சொன்னது அவரை ஆச்சரியப்படுத்தியது. ஆளைப் பார்க்காமல் அந்தச் சொற்களை மட்டும் அவர் கேட்டிருந்தால் கண்டிப்பாக இங்கிலாந்திலேயே பிறந்து வளர்ந்த ஒரு கல்லூரிப் பட்டதாரி பேசு வதாகவே அவர் நினைத்திருப்பார்.

அந்த மனிதர் முன்னிலையில் ஒரு மேலான உணர்வு நிலைக்கு அவர் செல்வது போலிருந்தது. தனக்குத் தோன்றியதை அவரையும் அறியாமல் அப்படியே அந்த மனிதருக்குத் தெரிவித்தார்.

அந்த மனிதர் அமைதியாகச் சொன்னார்: ''நான் அறிவேன்.''

அந்த மனிதர் ஒரு யோகியைப் போலவும், ஆன்மீக உன்னத நிலைகளை எட்டிய பெரிய துறவியைப் போலவும் தோன்றினார். அவரிடம் சில வார்த்தைகள் பேசிய போது அந்த எண்ணம் மேலும் பலப்பட்டது. தன் ஆழ்மனதையே அவரால் படிக்க முடிவது போலவும், அதை ஆட்கொள்ள முடிவது போலவும் பால் ப்ரண்டனுக்குத் தோன்றியது. அந்த வித்தியாசமான அனுபவம் என்றென்றும் தன் நினைவில் தங்கும் என்று நினைத்த பால் ப்ரண்டன் சொன்னார்: ''இது போன்ற ஓர் இடத்தில் உங்களைப் போன்ற ஒரு மனிதரை நான் சந்திப்பேன் என்று சிறிதும் நான் நினைத்திருக்கவில்லை. இது என்னை ஆச்சரியப்படுத்துவதாக இருக்கிறது.''

அவர் அமைதியாகச் சொன்னார்: ''நான் ஆச்சரியப்படவில்லை. இந்த நேரத்தில் நீங்கள் என்னோடு பேசிக் கொண்டிருக்க வேண்டும் என்று ஒரு மேலான சக்தி முன்பே நிச்சயித்து அதற்கு ஏற்பாடும் செய்து கொடுத்திருக்கிறது என்றே நான் நினைக்கிறேன்.''

ஆன்மீகச் சிகரங்களை எட்டிய மனிதர்களைச் சந்திப்பதில் பால் ப்ரண்டனுக்கு என்றுமே பெரும் ஈர்ப்பு உண்டு. அந்த மனிதரிடம் பேசிய போது அவரிடம் மேலும் பால் ப்ரண்டன் கவரப்பட்டார். யதேச்சையாக நடக்கின்றன என்று நாம் நினைக்கும் பல நிகழ்வுகள் யதேச்சையானவை அல்ல என்றும், அவை முன்கூட்டியே தீர்மானிக்கப்பட்டவையாக இருக்கின்றன என்றும் அந்த மனிதர் அவரிடம் சொன்னார். அந்த நிகழ்வுகள் சங்கிலித் தொடர் போல





பல நிகழ்வுகள் நடக்கவும், பல விளைவுகள் ஏற்படவும் காரணமாகி விடுகின்றன என்று அமைதியாகச் சொன்ன அவர் தன்னைப் பற்றிப் பேசும்போது சிறிதும் கர்வமில்லாமல், உண்மையான தகவல்களைச் சொல்வது போலவே சொன்னார்.

வெளி உலகத்தின் கவனத்திற்கு வர விரும்பாமல் அமைதியாகவும், ரகசியமாகவும் பல வேலைகளில் ஈடுபட்டு பெரும் மாற்றங்களை ஏற்படுத்த வல்ல மனிதர்களில் ஒருவராக அவரைப் பால் ப்ரண்டன் கணித்தார். இது போன்ற மனிதர்களால் அடுத்தவர் மனதிற்குத் தகவல் அனுப்புவதும் சுலபமாக முடியும். இந்தியாவில் பால் ப்ரண்டன் சந்தித்த அந்த எகிப்திய மேஜிக் நிபுணர் ஆவிகளையும், பூதங்களையும் பயன்படுத்தி செய்யும் வேலைகளை இவர்கள் தாங்களாகவே இயல்பாகவே செய்ய முடிந்தவர்களாக இருக்கிறார்கள்.

அந்த மனிதர் சொன்னார்: ''நான் உங்களுக்காக இங்கே காத்துக் கொண்டிருக்கிறேன். நீங்கள் எழுதுபவர். நான் உலகிற்கு உங்கள் மூலம் ஒரு செய்தி சொல்ல வேண்டி இருக்கிறது. அதை விரிவாக அப்புறம் சொல்கிறேன். இது அறிமுகம் மட்டுமே, பால் ப்ரண்டன்.'' தன்னுடைய பெயரை அவராகவே கண்டுபிடித்துச் சொன்னது பால் ப்ரண்டனுக்கு மிக வியப்பாக இருந்தது. ஆனால் தூரத்தில் இருந்தே அனைத்தையும் அறிய முடிபவர்களுக்குப் பெயர் அறிவது ஒரு பெரிய விஷயமா என்று நினைத்துக் கொண்ட பால் ப்ரண்டன், ''உங்களுடைய பெயரை நான் அறிந்து கொள்ளலாமா?'' என்று கேட்டார்.

சிறிது நேரம் பதில் சொல்லாமல் மலைப் பள்ளத்தாக்கின் பேரழகையே பார்த்துக் கொண்டிருந்த அந்த மனிதர் சொன்னார்: ''அறியலாம். ஆனால் அது தங்களின் தனிப்பட்ட தகவலுக்காகவே இருக்கும். நான் என்னைப் பற்றிய விவரங்களை வெளிப்படுத்த விரும்பவில்லை. என்னை 'ரா-மக்-ஹோடெப்' என்ற எகிப்திய பெயர் வைத்து நீங்கள் அழைக்கலாம். அதற்குத் தூய எகிப்திய மொழியில் 'அமைதியில் இருப்பவன்' என்று பொருள். நான் எகிப்தியன் அல்ல. உலகம் முழுவதையும் சேர்ந்தவன்.

ஆசியா, ஐரோப்பா, ஆப்பிரிக்கா, அமெரிக்கா ஆகிய நாடுகளில் பயணித்திருக்கிறேன். என் உடல் மட்டுமே கிழை நாடுகளுடையது. மனதைப் பொறுத்த வரை நான் ஒரு தனி நாட்டைச் சேர்ந்தவன் அல்ல. இதயத்தைப் பொறுத்தவரை நான் அமைதியை மட்டுமே சார்ந்தவன்.''

அவர்கள் இருவரும் ஆன்மீக விஷயங்களைப் பற்றிப் பேசினார்கள். உலக விஷயங்களைப் பற்றிப் பேசினார்கள். ரா-மக்-ஹோடெப் பால் ப்ரண்டனுக்கு இனி மேற்கொண்டு என்னவெல்லாம் செய்தால் ஆன்மீகப் பாதையில் மேலும் முன்னேறலாம் என்பதைச் சொன்னார். சொல்லும் போது பால் ப்ரண்டனின் அப்போதைய சில தனிப்பட்ட குறைபாடுகளையும் சுட்டிக் காட்டி அவற்றால் என்னவெல்லாம் பிரச்சினைகள் பிற்காலத்தில் ஏற்படும் என்பதையும் அவர் எடுத்துச் சொன்னார். பின் திடீரென்று மறுநாள் லக்சாரில் நைல்நதிக் கரையோரம் இருக்கும் ஒரு கோயிலில் தன்னை வந்து பார்க்கும்படியும், அங்கு பால் ப்ரண்டன் மூலம் உலகிற்கு, முக்கியமாய் மேலை நாடுகளுக்கு, அறிவிக்க வேண்டிய செய்தி ஒன்றைக் கூறுவதாகவும், அதை அங்கே பேசலாம் என்றும் சொல்லிப் பேச்சை முடித்துக் கொண்டார். அந்த மனிதரிடம் பேசிய பேச்சு அப்போதைக்கு திடீர் என்று முடிந்தது அவருக்கு ஏமாற்றமாகத் தான் இருந்தது. வேறு வழியில்லாமல் விடை பெற்றார். ரா-மக்-ஹோடெப் இருந்த இடத்தில் இருந்து சிறிதும் அசையாமல் அவருக்கு விடை கொடுத்தார்.

கிளம்பிய பால் ப்ரண்டன் சிறிது தூரம் போன பிறகு திரும்பிப் பார்த்தார். ரா-மக்-ஹோடெப் அதே இடத்திலேயே சிலை போல அமர்ந்து இருந்தார். தற்போது அவர் மிக முக்கியமான வேலையில் ஈடுபட வேண்டி உள்ளது என்று சொல்லி விட்டு அங்கேயே இருப்பதைக் கண்ட பால் ப்ரண்டனிற்குத் திகைக்காமல் இருக்க முடியவில்லை. இந்த மலைமுகட்டில் தன்னந்தனியே அவர் செய்ய வேண்டிய வேலை எதுவாக இருக்கும் என்று எண்ணியவராக லிபிய மலை உச்சியில் இருந்து கீழிறங்க ஆரம்பித்தார்.








# உலகத்திற்கு ஒரு எச்சரிக்கை

மறுநாள் குறித்த நேரத்தில் லக்சாரில் நைல் நதிக் கரையோரம் உள்ள கோயிலில் சென்று பால் ப்ரண்டன் ரா-மக்-ஹோடெப்பைச் சந்தித்தார். மிகப் பெரிய கல்லில் இருவரும் அமர்ந்து கொண்டனர். ரா-மக்-ஹோடெப் மேலை நாடுகளில் இருந்து ஆராய்ச்சிகள் என்ற பெயரில் எகிப்தின் பிரமிடுகளிலும், மற்ற இடங்களிலும் உள்ள சமாதிகளைத் திறப்பதன் ஆபத்துகளை முதலில் கூறினார்.

''ஒரு காலத்தில் மிகவும் புனிதமாக இருந்த எகிப்திய மதம் பிற்காலத்தில் பெருகிய மனிதர்களின் சுயநலத்தாலும், பேராசைகளாலும் தன் ஆரம்பப் புனிதத் தன்மையை இழக்க ஆரம்பித்தது. ஆன்மீகக் கோட்பாடுகளை விட, உண்மையான ஞானத்தை விட, சூனிய வித்தைகள், தீயசக்திகளைப் பயன்படுத்துதல் போன்றவை முக்கியத்துவம் பெற ஆரம்பித்து விட்டன. மரணத்திற்குப் பின்னும் இந்த உலகத்தில் உடல்ரீதியான தொடர்பும் வைத்துக் கொள்ள ஆசைப்பட்டவர்கள் தங்கள் பிணங்களைப் பாதுகாக்கும் வழிகளை மேற்கொண்டு அவற்றைப் பாதுகாக்கத் துஷ்டசக்திகளையும் உருவாக்கி விட்டுப் போனார்கள். அவர்கள் தங்கள் உடலுக்கு மட்டுமல்ல, தங்கள் ஆவிகளுக்கும் சேர்த்தே பாதுகாப்பு செய்ய முனைந்தார்கள். அவர்கள் எகிப்தியர்களின் வல்லமை பெற்றிருந்த மந்திர தந்திரங்களை அதற்கு முழுமையாகப் பயன்படுத்தினார்கள்.''

''சிலர் தங்கள் சவங்களையாவது பிற்காலத்தவர்கள் நிம்மதியாக விட வேண்டும் என்ற எதிர்பார்ப்பில் துஷ்ட சக்திகளால் அவை பாதுகாக்கப்படுகின்றன. அதனால் யாரும் அதைத் திறக்க முயற்சிக்க வேண்டாம் என்று வெறுமனே பயமுறுத்திப் போனார்கள் என்றாலும், சிலர் உண்மையாகவே அப்படி செய்து விட்டுப் போயுள்ளார்கள் என்பதை மறுக்க முடியாது. இதெல்லாம் மூட நம்பிக்கை என்ற நினைப்பில் பலரும் பிணத்தோடு சேர்த்து வைக்கப்பட்டிருக்கும் புதையலை எடுக்க வேண்டிச் சமாதிகளைத் திறந்து கொள்ளையடிக்க ஆரம்பித்தார்கள் என்றால், இன்னொரு வழியில் ஆராய்ச்சி என்ற பெயரில் உங்கள் மேலை நாடுகளில் இருந்து ஒரு கூட்டம் வந்து இந்த சமாதிகளைத் தோண்ட ஆரம்பித்துள்ளது.''

''அப்படிச் செய்து, ஆயிரக்கணக்கான வருடங்களாக மந்திர வார்த்தைகளால் அடைபட்டுக் கிடக்கும் பெரும் துஷ்ட சக்திகளை வெளியே விடுவது மிக மிக ஆபத்தானது. அது அந்த அகழ்பொருள் ஆராய்ச்சியாளர்களையும் அவர்கள் குடும்பத்தாரையும் மட்டும் பாதிக்கும் என்றால் அது பற்றி உங்களிடம் நான் சொல்லிக் கொண்டிருக்க மாட்டேன். உங்கள் ஆராய்ச்சியாளர்கள் அந்த மம்மிகள் சிலவற்றை உங்கள் நாடுகளுக்கு ஆராய்ச்சிக்காகவும், அருங்காட்சியகங்களில் வைப்பதற்காகவும் எடுத்துக் கொண்டும் போவது உலகத்திற்கே ஆபத்தானது. உங்கள் நாடுகளின் விதியே இதில் மாறிப் போகவும் வாய்ப்புண்டு என்பதை மறக்கக் கூடாது. உங்கள் நாடுகளில் பெருக ஆரம்பிக்கும் தீய சக்திகளைப் பின்னொரு நாளில் நீங்கள் உணர்ந்தால் கூட அது மிகவும் தாமதமாகி விடும். இயற்கையின் விதிகளை அறியாமலிருப்பது அதன் விளைவுகளில் இருந்து யாரையும் காப்பாற்றி விடாது.''

''மேலும் அந்தப் பிணங்களோடு சேர்த்து வைத்திருக்கப்படும் பொருட்கள் சில அந்தத் துஷ்டசக்திகளோடு சம்பந்தப்பட்டு மந்திர வசியத்தால் பிணைத்திருக்கப்படவும் வாய்ப்புண்டு. அப்படி இருக்கா விட்டால் அந்த நகைகளையும், மற்ற பொருள்களையும் எடுத்துக் கொண்டு போவதில் பிரச்சினை இருக்காது. ஆனால் மந்திரங்களால் அந்தப் பொருள்கள் பிணைந்திருந்தால் அந்தப் பொருள்களை வைத்திருப்பதும் பெரும் ஆபத்தையே விளைவிக்கும். கண்ணுக்குத் தெரியாத சக்திகளுடன் விளையாடக் கூடாது. அப்படி விளையாடியதன் விளைவை டுடன்காமென் சக்கரவர்த்தியின் கல்லறையைச் சில வருடங்களுக்கு முன் தோண்டியதன் மூலம் நீங்கள் பார்த்திருப்பீர்கள். (இது பற்றி ஆறாம் அத்தியாயத்தில் குறிப்பிட்டிருந்தது நினைவிருக்கலாம்.) எனவே மறுபடியும் சொல்கிறேன், இயற்கையின் விதிகளை அறியாமலிருப்பது அதன் விளைவுகளில் இருந்து யாரையும் காப்பாற்றி விடாது.''

அவர் சொன்னதை அப்படியே எழுதிக் கொண்ட பால் ப்ரண்டன், தன் நூலில் அதை வரிக்கு வரி அப்படியே குறிப்பிட்டுள்ளார்.

ரா-மக்-ஹோடெப்பைப் பால் ப்ரண்டன் மேலும் சில முறை சந்தித்துப் பேசினார். ஒரு முறை சந்தித்த போது பால் ப்ரண்டனை தூக்கி வாரிப் போட்டது. பழங்கால எகிப்திய யோகிகள் சிலர் இப்போதும் இருக்கிறார்கள் என்றார். ஆயிரக்கணக்கான வருடங்கள் கழிந்தும் இன்னும் சிலர் உயிரோடு இருக்கிறார்கள் என்ற செய்தியைக் கேட்ட பால் ப்ரண்டனுக்குப் பெரும் வியப்பாக இருந்தது.

ரா-மக்-ஹோடெப் சொன்னார். ''அவர்களில் சிலர் சமாதிக்குள்ளேயே இருக்கிறார்கள். அவர்கள் சமாதிகளை எந்தத் தொல்பொருள் ஆராய்ச்சியாளராலும் கூடக் கண்டுபிடிக்க முடியாது. மூச்சும் விடாமல் இருக்கும் அவர்கள் சமாதிக்குள் இருந்தாலும் தங்களைச் சுற்றி நடப்பது அனைத்தையும் அறிவார்கள். அவர்கள் உடலளவில் அந்தச் சமாதிக்குள் இருந்தாலும் ஆவியாக உலகமெங்கும் செல்லக் கூடியவர்கள். அந்த விதத்தில் அவர்கள் இரண்டு உலகங்களில் வாழ்பவர்கள். அவர்கள் உடலில் எல்லா அங்கங்களும் அப்படியே இருக்கும். பல காலம் உணவு உண்ணாமல் இருப்பதால் அவர்கள் உடலில் வயிறு மட்டும் ஒட்டி இருக்கும். அவர்கள் உடல் இருக்கும் சமாதி சாதாரண மனிதர்களால் அடையாளம் கண்டுபிடிக்க முடியாதபடி இருக்கும். அவர்கள் தங்கள் உடலுக்குத் திரும்ப வேண்டும் என்று

தீர்மானிக்கும் போது திரும்பலாம். திரும்பவும் உயிர்ப்பிக்கும் சடங்குகளையும் மந்திரங்களையும் குறிப்பிட்ட சிலர் மட்டுமே அறிவார்கள். அவர்கள் அந்த மந்திரங்களைச் சொல்லி சில ரகசியச் சடங்குகள் செய்து அந்த உடலைத் திரும்பவும் இயங்கச் செய்வார்கள்.''

''மிக மிகக் குறைந்த எண்ணிக்கையிலேயே அது போன்ற சமாதி நிலையில் இருக்கும் எகிப்திய யோகிகள் இருக்கிறார்கள் என்றாலும் அவர்கள் இருக்கிறார்கள் என்பது கட்டுக்கதை அல்ல. ஒரு யோகி கி.மு.260ஆம் ஆண்டில் இருந்து அப்படி இருக்கிறார். இன்னொருவர் கி.மு 3000 ஆண்டிலிருந்தும் இன்னொருவர் பத்தாயிரம் ஆண்டுகளாகவும் அப்படி இருக்கிறார்கள். அவர்கள் உடல்கள் சிறிய கிருமியோ, பூச்சியோ கூடத் தாக்க முடியாத அளவு பாதுகாப்பாக உள்ளன.''

''அவர்கள் எல்லாம் அறிவார்கள். மனித குல மேம்பாட்டிற்காக அவர்கள் ரகசியமாய் இயங்கி வருகிறார்கள். அவர்களின் ஆன்மீக சக்தி மிகவும் வலிமையானது. உடலோடு இயங்கும் யோகிகளுடன் அவர்கள் மானசீகத் தொடர்பு வைத்திருக்கிறார்கள். உடலில் இருந்து செய்ய வேண்டிய காரியங்களை அவர்கள், அந்த உடலோடு இயங்கும் யோகிகள் மூலமாகச் செய்கிறார்கள். எல்லா ரகசியங்களையும், ரகசிய வித்தைகளையும் அறிந்த அவர்கள் தங்கள் உடலுக்குள் திரும்ப வர வேண்டும் என்று விரும்பும் போது, உடலோடு இருக்கும் யோகிகள் மூலமாக அந்தச் சடங்குகளை மேற்கொண்டு தங்கள் உடலுக்குத் திரும்புவார்கள்.''

டெஹ்ரா பேயும், சில இந்திய பக்கிரிகளும் சில நாட்கள் மண்ணுக்குள் புதைந்து இருந்து செய்து காட்டிய வித்தையைச் சக்தி வாய்ந்த யோகிகளால் ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கும் நீட்டிக்க முடியும் என்று தெரிவித்தது, சாதாரண மனிதர்களுக்கு நம்பக் கஷ்டமாக இருந்தாலும் நடக்கவே முடியாத சம்பவம் அல்ல என்ற நம்பிக்கை, இந்தியா, திபெத், எகிப்து போன்ற நாடு களில் பலமாகவே இருக்கிறது.






பால் ப்ரண்டன்

# கடைசியாய்ச் சில வார்த்தைகள்

எல்லாப் பயணங்களையும் போலவே பால் ப்ரண்டனின் பிரமிடுகள் தேசப் பயணமும் ஒரு முடிவுக்கு வந்தாலும் அவரின் ஆன்மிகத் தேடல் மேலும் அரை நூறாண்டு தொடர்ந்தது. அப்படித் தொடர்ந்த காலத்திலும் அவர் பயணம் சார்ந்திராத சில ஆன்மிக நூல்களை எழுதினார். ஆனால் அவை அவருடைய இந்திய, எகிப்திய பயணக்கட்டுரைகள் அளவு பிரபலம் அடையவில்லை.

ஒரு பழம்பெரும் நாகரிகமும், அது கண்ட ஆன்மிக மேன்மையும் கால ஓட்டத்தில் மறைந்து போன போதிலும் அவற்றின் சுவடு களை முழுவதுமாக அழித்து விடக் காலத்தாலும் முடிவதில்லை. அவற்றை அறியத் துடிக்கும் இதயங்களுக்குப் புதிர் கலந்தாவது ஒரு விடையை அளிக்காமல் இருப்பதில்லை. பொன்னையும், பொருளையும் தேடி அலையும் உலகில் உண்மைப் பொருளைத் தேடும் இதயங்கள் இருப்பதே குறைவு தானே? அப்படி ஒரு இதயத்துடன் எகிப்தில் பயணம் ஆரம்பித்த பால் ப்ரண்டன் கடைசி வரை எகிப்தின் ஆன்மாவையே அறிந்து ஆன்மிகச் செல்வந்தராகத் தன் நாடு திரும்ப எண்ணினார். அழியும் பொருள்களையும், இழக்கக் கூடிய பொருள்களையும் எடுத்துக் கொண்டு போக எண்ணவில்லை. ரகசியம் காப்பதில் பெயர் போன போதும் அந்தப் பழைமையான எகிப்தின் கடவுளர்களும், ஆன்மிகக் காவலர்களும் அந்த அளவு தேடலுடன் வந்த அவரை வெறும் கையுடன் அனுப்பி இருக்க வாய்ப்பில்லை.

ஸ்பிங்க்ஸ், பிரமிடுகளிலிருந்து ரா-மக்-ஹோடெப் சந்திப்பு வரை அவரது அனுபவங்களில் அவர் எழுதியவை மட்டுமே

அவருக்குக் கிடைத்த பதில்கள் என்று நான் நினைக்கவில்லை. வார்த்தைப்படுத்த முடியாத எத்தனையோ பதில்கள் அவருக்குக் கிடைத்திருக்கலாம். அல்லது பதிலைத் தரக்கூடிய ஆர்வங்களை எழுப்பி இங்குள்ளது பதில் என்று மேலும் கோடி காட்டி இருக்கலாம். இது பால் ப்ரண்டனுடன் பிரமிடுகள் தேசத்தில் பயணித்த நமக்கும் கண்டிப்பாகப் பொருந்தும். சுவாரசியமான சம்பவங்களின் தொகுப்பாக மட்டும் இந்த நூலை எடுத்துக் கொள்ளாமல், படிக்கையில் நமக்குள்ளேயும், ஏதோ ஒரு 'பொறி' தட்டியிருந்தால், ஏதோ ஒரு புதிய ஆர்வம் உருவாகி இருந்தால் பால் ப்ரண்டனைப் போல நாமும் பலன் பெற்றவர்களே!

இந்த நூல் முழுவதிலும் அடிக்கடி சொல்லப்படும் ஒரு விஷயத்தை வாசகர்கள் கவனித்திருக்கலாம். பழங்காலத்து வசிய மந்திரங்களிலும் சரி, தற்கால வசிய மந்திரங்களிலும் சரி, வசிய மந்திரங்களுடன் இறைவன் சம்பந்தப்பட்ட வசனங்கள் கூடவே பயன்படுத்தப்பட்டிருக்கின்றன. ஓசிரிஸ் கடவுளானாலும் சரி, அல்லாவானாலும் சரி, எந்தப் பெயரிலும் இறைவன் பெயரையும் சேர்த்தே பயன்படுத்தினார்கள். மதங்களுக்கு அப்பாற்பட்டவையாக மந்திர தந்திரங்கள் இருந்த போதிலும் ஆண்டவனுக்கு அப்பாற்பட்டதாக அவற்றை ஆக்க அவர்கள் துணிந்ததில்லை.

ரகசிய இழையாக இந்த நூல் முழுவதும் வரும் அந்த உண்மையை நாம் என்றைக்கும் மறந்து விடலாகாது.



**எ**கிப்தும் இந்தியாவைப் போன்றே இன்னொரு சித்தர்கள் தேசம். மிகப் பழைமையான நாகரிகம் வாய்ந்த எகிப்து ஆன்மிகத் தேடல்களிலும் பண்டைக் காலம் முதலே சிறந்து விளங்கியது. இன்றும் எகிப்தின் ஸ்பிங்க்ஸ்சும், பிரமிடுகளும் எத்தனையோ ஆன்மிக ரகசியங்களைத் தங்களுக்குள் மறைத்து வைத்திருக்கின்றன. பிரமிடுகளில் அரசர்கள், அரசிகளின் சவங்களை, ஏராளமான செல்வங்களுடன் புதைத்து வைத்திருந்ததால் பிற்காலத்தில் பலரும் உள்ளே நுழைந்து அந்தச் செல்வங்களைச் சூறையாடிச் செல்ல ஆரம்பித்தனர். ஆனால் கொள்ளையடித்துச் செல்ல முடியாத ஆன்மிக ரகசியங்கள் பிரமிடுகளில் இன்னும் ஏராளமாக உள்ளன என்பது உலகப் பெரியோரின் கருத்து.

**இ**ந்நூலில் வரும் சம்பவங்களும், அனுபவங்களும் எழுத்தாளர் பால் ப்ரண்டனுடையதே என்றாலும், இது மொழி பெயர்ப்பு நூல் அல்ல. அவரது பயண அனுபவங்களில் சுவாரசியமானவற்றையும், தேவையானவற்றையும் மட்டுமே எடுத்துக் கொண்டுள்ளேன். அதே போல சம்பந்தப்பட்ட விஷயங்களில் அவர் விளக்காமல் விட்ட சிலவற்றைத் தேவை கருதி நான் விளக்கியும் விவரித்தும் இருக்கிறேன்.






என்.கணேசன்

ஆழ்மனசக்தி, ஆன்மீகம், சுயமுன்னேற்றம், வாழ்வியல், சிறுகதைகள், நாவல்கள் போன்றவை இவரது படைப்புகளில் முக்கியத்துவம் பெற்றவை. இணையதளத்தில் வெளியாகும் இவரது படைப்புகளுக்கு, ஏராளமான ரசிகர்கள் உலகளவில் உள்ளனர். இவரது படைப்புகள் இலக்கியச் சிந்தனை உட்பட பல பரிசுகள் பெற்றுள்ளன. இவரது ஆழ்மனதின் அற்புத சக்திகள், வாழ்ந்து படிக்கும் பாடங்கள் போன்ற நூல்கள் வாசகர்களிடையே பெரும் வரவேற்பைப் பெற்றவை.

ISBN 978-93-81098-12-7

